உ

சிவமயம்.

# திருவிலஞ்சி குமாரசுவாமி

# பிள்ளைத்தமிழ்



இஃது

செங்கோட்டை மஹாவித்துவான் கனம்

கவிராஜ பண்டாரத்தையா அவர்களால்

இயற்றப்பெற்று

---

இஃது

P. சண்முகவேலாயுதம்பிள்ளை

விருப்பத்தின்படி

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களாகிய

கனம் M. R. அருணாசலக்கவிராயரவர்கள்

கனம் M. R. கந்தசாமிக்கவிராயரவர்களது

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

சுத்தப்பதிப்பு.

இதன்விலை] விஷு௵ புரட்டாசி௴ [அணா 4

உ

சிவமயம்.

# பாயிரம்.

## அகவற்பா.

---

தெண்டிரைக்கடலைமண்டிடுங்கலைபாய்ப், புனைபுவிமகளின்கனி திலதம்மெனத், தண்டமிழ்ச்செல்விதங்கிடுஞ்சிறப்பமை, பாண்டிநாடதனிற்பல்வளமிகுந்த, அரனுறைதிரிகூடாசலத்தருகுள, இலஞ்சி சூழ்நற்றிருவிலஞ்சிமாநகரில், எமமனோர்ப்புரக்கவினிதுறையிறையாம, குமாரசுவாமி குளிர்கழற்கன்பால், மங்காதசெந்நெல் வளர்செங்கோட்டையில், உதித்துநற்கலைபயின்றுயர்மஹாவித்துவான், இயலிசைநற்கவிபிராஜபண்டாரத், தையாவவர்கள வாவமொழியற்றி, ஏறக்குறையவிருபதனைந்த, காண்டுகளாயினஅ[illegible]ல்கற்பனை நிறை, பிள்ளைத்தமிழாமபெருநூலொன்று, தேங்கமழ்சோலைத்தென் காசியிலுறை, காணுமகோவென்னுமகண்ணியகுடியில், பாநுவாய்வருசபாபதியபிள்ளையவர்கள், ஏட்டுப்பிரதியா யிருந்ததையென்கவி, யோட்டிடுந்தன்மைபோ லுதவினதன்றியும, எவருமவாசித் தின்புறக்கருதிய, என்மனமகிழ விருமபொருளுதவினா, இலஞ்சிமாநகரில் ஏரெழுநற்குடிப, பிறந்துநற்கோவிற் பெருங்கணக்காய்வோன், ஆண்டியபபேந்த்ர னன்பொடுகொடுத்த, பொருளுதவியுங்கொடு புண்ணியய்வந்தென்,றெண்ணிபங்கூடலி லின்புடனடைந்து,என்னுயிர்க்குயிரா யிலங்கிடுகுமரன், அருளைமுன்னிட்டிதை யச்சிடுவித்தேன், வடிவேலவன் றிருமலரடிவாழ்க, அச்சிடப்பொருள்தந் தவர்நனிவாழ்க, இச்சகங்கன்னி மிசைபபவர்வாழ்க, கேட்போர்யாருமகிளையுடன்வாழ்க, இலஞ்சிமாநகருளோ ரேவருமவாழ்க, அருண்மிகுகுமரவேளடியார்வாழ்க.

ஷண்முகதாஸன்.

இலஞ்சி.

உ

மதுரைத்தமிழ்ச்சங்கம்

நூற்பரிசோதகர்

# மு. ரா. அருணாசலக்கவிராயர்.

செய்த

# சிறப்புப்பாயிரம்.



செந்தமிழ்த்தெய் வமுமுதலா சிரியனுமாங் குறுமுனிவன் செய்தபூசைக், கந்தகிரி யிடத்திலஞ்சக் கரத்தனஞ்சக் கரத்தனை யா முபாய, முந்தவுரைக் கின்னருள்செய் தென்னிலஞ்சிக் குமரவேண் மொய்ம்பிற் கொண்ட, சந்தமலி யீரைந்து பருவம்பூத் திடும்பிள்ளைத் தமிழ்ப்பா மாலை. (௧)

அக்கநாட் செவ்வரண்வாழ் கவிராச பண்டாரத் தையா சொன்ன, வந்தநா வலவன்செய் தானெனனக் கேட்டதுண்டம மாலை தன்னை, யிந்தநா ளச்சினிலிட் டொன்றைப்பா யிரமாக்கி யெவர்க்கு மீந்தான், கந்தவேண் மெய்ப்பத்தி கனவினிலு மறவாமார்க் கண்டன் போல்வான். (௨)

இலஞ்சிநகர் வேளாளர் குலதிலகன் கல்வியறி வின்சொல் வாய்மை, நலஞ்சிறந்த வொழுக்கமிகு சண்முகவே லாயுதமா நாமமெய்ப் பேறன், பலஞ்சிறந்த விதமொன்றைப் பற்பலவா விளைத்துயிர்க்குப் பதத்து நல்கு, குலஞ்சிறந்த தெனறதிலே யுதித்தவருக் கிங்கீகரித் தோர் கூறுங் காலே. (௩)

இராகம் [illegible]

ஆதிதாளம்.

பல்லவி.

சண்முகவேலாயுதனே. சாமிநாதமயிலோனே. சண்முகவேலாயுதனே.

அநுபல்லவி.

விண்ணிலுறைபரம்படி மேவுமசுரரா வுன்னடி
எண்ணியிறைஞ்சிமுடி பேற்றமேனடி கட்டு (சண்)

சரணம்.

1. அங்கிரிபரைபாலா அருள்பிரதியுறசீலா
மந்திரவடிவேலா வணங்குவோர்கனுகூலா (சண்)

2. வள்ளிமணாளகந்தா வரமருளிச்சுகந்தா
உள்ளபடிநிகந்தா உபயமலர்ப்பதந்தா (சண்)

3. பத்தன்சண்முகன்றுதி பரவுகருணைநிதி
சித்தர்கட்குயர்கதி சிறக்குமிலஞ்சிப்பதி. (சண்)



௳

சிவமயம்.

# திருவிலஞ்சி குமாரசுவாமி

# பிள்ளைத்தமிழ்



## காப்பு.

முகிலொன்றுபாற்கடன்மடுப்பறகப்பநெடு மோட்டுப்பணைக்
கைநீட்டி, முவலதமீன்றவுமைக்குப்பப்படாமுலை முகட்டுப்பகட்டின்
முட்டிக்; குமிலொன்றுமுத்தரியனைவுறப்பெருகுபாற் றுள்ளருவி
வெள்ளமாகதிக், தோய்ந்துநீந்திக்களித்தாடுமொருகன்றினை துணைய
டிக்கன்புசெய்வாம்; பகலொன்றுசெஞ்ஞாட்புறத்திருள்சுருட்டுமப்
பான்மைபோலிருபொழுதுமென், பல்வகையகத்திருள்சுருட்டுமொ
ருஞானபர பாகரனைமகளிர்கூடுதல்; அகிலொன்றிலஞ்சிகமழ்தென்னி
லஞ்சிக்குமர குருபரனையமரர்வாழ்வை, பள்ளியிலைமேவற்கைபயி ரா
னைப்பராவுறுமென் னதிமதுரகவிதழைகவே.

## நூல்.

## காப்புப்பருவம்.

### திருமால்துதி.

தேம்மேவுதாமிழுங்கடப்புநகடமபுயத் திரண்மலரிக்குவடுபூத்
தூச், செக்கர்வானென்னவருமோராறுதிருமுகத் திங்களஞ்சிறுகுழவி
யைக்; கோம்மேவுசெந்தமிழிலஞ்சிமேவலவனைத்ரி கூடாசலத்தெயபிரா
ன், கொத்தடியர்குலமெலாந்தழைபவருமரசிளங் குமரனைவியந்துகாக்
கப்; பூமேவுமுந்தியிற்பலபுவனபந்தியைப பூத்துமுறைகாத்துநின்ற,
பொருவரியநீலப்பொருப்பைக்கருப்பைப்பு காதுபுக்கிந்திரற்குக்; கா
மேவுமரசிருப்புதவுசக்ராயுதக கடவுளைக்குடவளைக்கைக், கண்ண
னைத்தண்ணந்துழாய்மௌலியானையங் கலவாழ்த்திசைத்துயன்

## சிவபெருமான் துதி.

அரவின்முகமண்டலமுமமுதமயமொன்றநில வார்சடைக்கொத்
தேறு நீள்பிறைக்கீற்றனை,அமுதபலிதந்தபலமுனிவரர்மடந்தையரு
மாசைமுற்றிச்சேரு மாதவக்கூத்தனை; அருவிசொரிகங்கைமதுவொ
ழுகிநுரைபொங்குபுனல் வார்திரைச்சிற்றாறு சூழ்துறைத்தீர்த்தனை
அகிலபகிரண்டமுமொரடியினிலளந்தமுகில் காணுதற்கெட்டாச்
சோதியைச்சீர்ப்பொலி;பரவைமனைசென்றுகவிபரவசமியமபிவருதூ
தினைச்சொற்றருளு நீதனைப்பூத்தொளிர், பணிவரைமடந்தைபெருகு
ழல்மொழிமடந்தையொருபாகனைச்சொற்காதி போகனைப்பாக்கிய;ப
லமிகுகுறும்பலவினிழல்மிகவிளங்குசிவ லோகனைக்கர்த்தாவை யேக
னைக்கூர்த்தெழு,பழமறைநெடுந்தலறவழியடியர்நெண்டனிடுபாதனைக்
குற்றால நாதனைப்போற்றுதும;விரிதிரைமுகந்துநவமணிவிசிறுசெந்தி
நகர் மேவுகப்பற்சேரு மாழ்கடற்சேர்ப்பனை,மிர்கமதகதம்பதளபரிம
ளசுகந்தபுய பாரனைக்கற்பூர பாளிதக்காப்பனை;விகடதடகும்பகடகர
டமதகுஞ்சரவி நாயகற்கற்பமர்வி சாகனைச்சேட்பொலி, வெறிகமழ்
குறிஞ்சிமனைவரைபுறமடந்தையால் விகாரமுற்றுச்சாப வேடரிற்
றேற்றிய;குரிசிலைமணம்புணர்தல்குறமகள்விரும்புமனு கூலனைக்கட்
டாரி வேலனைக்கோற்றொடி,குலவுகரசுந்தரிபொன்மனையில்வளர்குஞ்
சரிமணாளனைச்சப்பாணி கூடுகைக்காப்பொலி; குமுறவொருபுண்டரி
கன்மணிமகுடபந்திபுடை கோபனைக்கற்றோர்கு ழாமெடுத்தேத்திய,
கொழிதமிழிலஞ்சிநகர்தழைபவளருஞ்சிறுகு மாரனைக்கட்டாண்
மை வீரனைக்காக்கவே. (உ)

## பராசத்தி துதி.

வலம்புரிகொள்வீதியினும்வளர்கோபுரத்தினும் வயங்குசெறிநீள
ருவிமணிகானும்வைப்பினும், வழங்குமொருமூவரையுமகவாய்வளர்
த்திய வளர்ந்தரணிபீடநிலைசொலவேதொழப்புகல்; குலங்கெழுசுராதி
பர்ம குடகோடிதுற்றிய கொழுங்கதிர் நிலாமணிகள் வெயிலாயெரிக்க
வோர்; குறும்பலவினீழலுறைகுழல்வாய்மொழிக்கொரு குழந்தைய
டியேமுழுதும் வழிபாடியற்றுவாங், கலங்குகடல்நீர்சொரியஅயிராவ
தத்தெழு கடுங்குலிசதாரணனுமடவாள்குயத்திடை; கலந்தினிதுவா
ழவொருமயில்வாகனத்தெழு கடம்பமலர்சேர்புயபன்னிருபாரவெற்ப

னை, யிலஞ்சிநகர்வாழ்பவனை யெனையாளுமப்பனை யிலங்கிழைநலாரெழு
தமுடியாதபொற்பனை; யிலங்குசுடர்வேலவனை யிமையோர்கள்வைப்
பையென் னிளங்குமரநாயகனை யியல்பாய்வளர்க்கவே. (௩)

## செண்பகவிநாயகர் துதி.

ஆனனம்விளங்கியபனைத்தடக்கைச்சேர்த்தெழு பாரதப்பெருங்க
தைவடிதரெடுத்துக்காட்டியோர், ஆயிரநெடுஞ்சிகரபுத்தகத்திற்றீட்
டியபராமுடிப்பகனபுவிபுரக்கதமொற்றைக்கோட்டனை; வானவர்பெருந்
தகையைச்சிரக்கைபடார்த்திபன் மாமுடிபுனைந்தசரணத்தனைப்பற
றார்க்கொரு வாலுமைமடங்கலெனநிற்குமவெற்றித்தாக்கனை மாரி
சொரிசெண்பகவனக்களிற்றைப்போற்றுதும்; பானல்கமழுஞ்சரவ
ணத்துதித்துக்கார்த்திகை பாலொழுகுதும்பமுலையைக்குடித்துப்பார்
த்தெழு, பார்வையிலிரங்கியொருபடடுடுத்துப்போர்த்தபடாமுலைமு
கங்களிலெடுத்தணைத்துப்பார்ப்பதி; வானுலவுசெங்கண்விடைமத்தர்
வைத்துத்தேற்றிடு வாணிதரவந்தசிறுபொற்றளிர்க்கைக்காப்பனை,
வாழ்வுறுமிலஞ்சிநகர்வைப்பையெய்ப்பிற்காக்குமனேகரதுரந்தரம
ணிபொருப்பைக்காக்கவே. (௪)

## திருமகள் துதி.

வெங்கடாங்கரடக்கடாங்கவிழ்ந்தூற்றுமத வேழங்கடாந்தடக்
கை, வெம்பணிபிணித்தசெம்பருதிபொருவுஞ்செம்பொன் விம்பகும்
பங்களாட்டப; பொங்குபூணருகும்பமேந்துபைங்கூந்தலம் பிடிகள்
போற்கவரிகாலப், புடைநிறைமுடிபொறுத்தரிவனப்பூந்தவிசு போ
நதபெண்ணரசுகாக்க; கொங்குலாஞ்செழுமலரிலஞ்சியிற்சினைவரால்
கொழுமலரிலஞ்சிமேற்போய்க், கொண்டல்நுண்டுளிகொண்டிரங்கு
தெனிலஞ்சியிற் குமரனைச்சமர்கடந்த; சிங்கமாமுகனைமுதலிட்டப
கைவேரறச் செவ்வேல்வலந்தரித்துத,தேவேந்திரற்கரசளித்ததிரலா
ழியைத் தேவர்சேனாபதியையே. (௫)

## பிரமதேவன் துதி.

திணிகொண்டவூதண்டமண்டபம்பணிகொண்டு. சீவகோடிகளுயி
ர்த்துச், செந்தாமரைப்பொலந்தவிசில்வெண்டாமரைத் தேவியுடன்
மேவியேவற்; பணிகொண்டமகவாடல்கண்டனையவிளையாடல்பார்த்.

தகமகிழ்ந்துபூத்துப, பல்லூழிவாழுமொருதொல்பெருஞ்செல்வம் படைத்தவன்காக்கமன்னே; மணிகொண்டகட்செவிநிதம்பக்கதம்ப முலை வள்ளிபடர்கொழுகொம்பராய்,வளர்கின்றபன்னிருதடம்புயனை யென்னிருகண் மணியைமாணிக்கமலையைத்;தணிகொண்டனுண்டுழி யுமவெண்டரளநிரையுமவண் டாரகையும்நிரைகிடப்பத், தண்டலைத ழைத்தசுப்பிரமணியபுரவசதி தருகுமரகுருபரனையே. (௫)

## நாமகள் துதி.

முத்தமிழொருத்தனுக்கருமறைக்கெட்டாத வுரைத்திருத்தேறவல் கேட்க, முற்றிவிக்குந்திரமுடத்தேன்முகந்துமலரி முடிமேவுநர்முன் றிலெதிர்போத; தித்திறத்தரியாசனத்தரபிராசபத மெய்நியிகமுமபர மும்வாய்ந், தெமமனோர்செமமா நதிருககபமெ நுங்கல்வி யிறைமைத ருமிறைவிதுணையாகு; சித்தசனன்மைத்துனனையுத்திமுகனுக்கிளைய சிங்கத்தைவெஞ்சூரறச், செஞ்சேவலங்கொடியுயர்த்தமைபகரமொ ன்று தேவர்கோமகன்முடிக்கு;வைத்துமுழுதாண்டதெனிலஞ்சிநகரா திபனைவரைபகவெறிந்தவேற்கை, மறவனைத்தழைபுமரகதகலாபமா யூர வாகனனைவாழ்விக்கவே. (௭)

## சத்தமாதர்கள் துதி.

பொன்னிற்சிறந்திட்டபுலமையிற்றலைமைபெற பொய்யாதமெய் யுணர்விணிற், பொற்புண்டரீகபதபூசனையில்வாசனைபொருந்தபயமி ற்றிமுழுது; மென்னைபபுரந்துகொண்டன்றேதனக்கடிமை யென்று விலையோலையிட்ட, வெமபிரான்செந்தமிழிலஞ்சிபபிரான்பொருட் டெழுவரையுமஞ்சலிப்பாம்; அன்னத்தின்வருமயிலுமயில்வருகிள் ளையும்வெள்ளானையிற்றோன்றுபிடியும, மானின்வருமானுமுதுகலை யில்வருமானும்புள்ளரசில்வருகரியகுயிலு; முன்னுற்றசிங்கப்பொ ருப்பில்வருகான்மாவுமுதிர்பரவைகாற்றினனுகல்,முடுகாமல் மாற்றி நின்றேற்றதுழவிப்பருவமுழுதுமபுரக்கவென்றே. (௮)

## காளி துதி.

பாமிழற்றுமபாணரெனப பண்மிழற்றுஞ்சுரும்பு
பந்தியிருந்தந்திறைற பருகுதரைபபாண்டிக்
கோமகற்குசசென்னியயந தளித்தகுலமகடன்
குலமகட்குமகனெங்கள் குருபரனைக்காக்க

தேமலர்ச் செண்பகக்காவுந் திரிகூடசிலம்புஞ்
சினகரமும்நன்னகருந் தென்றலுலாந்திசையும்
மாமணிச்சங்காவணமு மன்றுமென்றுங்காக்கும்
மங்கையைநங்குற்றால நங்கையைவாழ்த்துதுமே. (கூ)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள் துதி.

கொச்சைப்புனத்திற்குறிஞ்சிக்கொடிச்சியர் குழாத்தொடொருத் திவளரக், கொற்றமகளன்றிட்டவாகையுந்தும்மையும் பின்னிக்கிடந் துகுலவக்; கச்சைப்பொருந்தனத்திந்திர குமாரத்தி காதல்மணமாலை சூட்டுங், கற்பகப்பந்தரிற்காப்பேந்திநின்றவன் காக்கமழிலஞ்சிகாப் பார்; பச்சைப்பசும்புரவிமான்றேர்ப்பிசைத்தோன்று பண்ணவர்கள்பன் னிருவரும், பரிமுகக்கடவுளோரிருவருமொருவரும் பசுபதிகள்பதி னொருவரும்; பிச்சைப்பதிகந்தத்தெய்வருமெனத்தொகுத் தெண்ணுறு முப்பான்மூவரு, மிகோடி முப்பத்துமுக்கோடியென்றதொகை யமை யவருநிமையவருமே. (க0)

# செங்கீரைப்பருவம்.



மேனைப்பிராட்டிதருபெண்ணரசியுள்ளுவகைவெள்ளத்திலாட் டுவதுபோல், வெள்ளிவரை முன்றில்வாய்பொன்னூபுரந்தன்னிமிளிர் கணைக்காற்கிடத்தி; யேனைப்பசுங்குங்குமந்திமிர்ந்தீர்ம்புனலெடுத்தெ டுத்தாட்டி விரல்சேர்த், தின்னினியமஞ்சனநீர்மும்முறைசுழற்றிவார் த்திருநிலக்காப்பணிந்து; சோனைக்குறுந்திவலைபட்டாடையிட்டுத்து வர்த்திவெண்ணீறுசாத்திச், சுடர்மாளிகைப்புகுந்தேந்துமுலையமிர்த ஞ்சுரந்திருந்தூட்டிமடவார்; சேனைக்குள்வைத்துமுத்தாட்டும்பசுங்கி ள்ளைசெங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன் செங்கீரையாடியருளே. (க)

தாராடுகிண்கிணிச்செந்தாட்டுணைந்தாடுதமனியத்தொட்டிலா டத், தண்பவளமேல்விரலதுக்கிச்சுவைத்தன்னைதாலாட்டுமின்னிசை மடுத்; தேராடுமெய்துவண்டிணைவிழிமுகிழ்த்தயர்ந்தின்றுயில்வர நதுயின்றுங், கிடைவருபதத்துணையெழுப்பப்புலர்ந்துவயிறெக்கிக்

குழைந்துவிம்மிப் ; போராடுகன்றெனத்துள்ளியெழுபொருமற் பொருதுவந்தேந்திமோந்து, பொற்குழிசியூறுபால்வெண்சங்குழைத் துப்புகட்டத்தெவுட்டியுள்ளச்; சீராடியெதிர்நிலைக்கண்ணாடிநிழலு டன்செங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன் செங்கீரையாடியருளே. (௨)

பொருமலறிவிக்குங்கடைக்கண் குறுந்துளிபொடிக்குமுனடுக்க வருவோம், பொன்மேனிபாயலிற்பூந்தாதுமெந்தாதுபுதுநீறெடுத் தாட்டுவோம்; பருமுலையருத்தித்திருத்திவைத்தின்மொழிபகர்ந்தணை த்துச்சிமோந்து, பசுமஞ்சளினியநீர்முழுமுறைசுழற்றியபாலூற்றி வாழியென்போம்; அருமணிநுதற்சுட்டிகட்டியொருபொட்டுமிட்ட வண்ணல்வெண்ணீறுமணிவோம், ஆட்டாதசரவணப்பூந்தொட்டிலிற் கிடந்தாடினபடிக்குவனசத்; திருமுகமலர்ந்துகுழைபாடலிளையாடிநீ செங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங் கீரையாடியருளே. (௩)

பட்டபுனல்நீத்திலமெனத்திகழும்வட்டவரிபாகிலையநெட்டை நெடிப,பச்சைப்பசுந்தாட்கழுத்தளவுநீருட்பயின்றின்றமெல்லரும்பு; வட்டமிடுபானலைப்புறநிறுத்திமைமுரலுமழலைச்சுரும்பர்மிழ்ந்து, வாய்மடுத்துண்ணக்கபாடந்திறக்குமொருவள்ளமாக்கொள்ளைநறவங் கொட்டுபுசெழுங்குங்குமத்தாதிரைக்குங்குறுந்தகட்டல்லிப்புல்லிக், கோட்டோடலர்ந்துகமழ்செக்கச்சிவந்தபொற்கோகனகமண்டபத் திற்; சிட்டர்தொழவாழுமொருசெல்விதிருமருமகன்செங்கீரையாடி யருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங்கீரையாடிய ருளே. (௪)

கங்காநதிக்குநிகர்கடவுணதிகளினதிககவின்மணற்றங்குகழியிற் கதிர்மணிக்குன்றுபொதிபுன்னையங்கானல்மென்காவியங்கயல்பொரு தலைக்; குங்காலிலக்கால்கொழிக்குமடைகளில்மடைக்கோவுகண்ணுற் றுவயலிற், குளிர்வயல்மருங்குவெண்முல்லைமல்லிகைவைத்தகொல் லையிற்கொல்யானைவாற்; பைங்காற்பசும்பொற்பொகுட்டுத்தகட்டித ட்பங்கேருகப்பொய்கையிற், பங்கேருகச்செல்விவிளையாடுபதிகளிற் பதிநிலாறுதலாருடன்; செங்காலனங்கள்பயில்தென்னூர்யநன்னாட செங்கீரையாடியருளே,தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங்கீ ரையாடியருளே. (௫)

## வேறு.

இந்திரனங்கியமன்கொடியன்புனலீசனெடுங்காலோன்
எண்டருசந்திரனிந்துவணைந்தவன்மாலபனென்போந்தாம்
தந்தமிடங்கள்புரந்திடவந்ததபோதனர்சந்தோடச்
சங்கதியுஞ்சடையுங்கிரமங்களும்வேதமுநின்றோத
மந்த்ரமென்றதனங்கள்சுமந்தரமாதர்வளம்பாட
மங்கலசங்கமுழங்கவலம்புரிவால்வளைநின்றாத
அந்தரதுந்துமிபொங்கவிளங்குகனாடுகசெங்கீரை
யண்டர்வணங்கவிலஞ்சியுகந்தவனாடுகசெங்கீரை. (௬)

வாழிமடற்பாளைக்குழல் சரிதர வார்கெழுபந்தாடும்
மாதரிளைப்பாரத்தனிவருசிறு கால்விசிறுங்காவில்
விழிபிதழ்க்கா வித்துணை விழிமணி வேரனெடுஞ்சாரல்
வேடர்குலப்பா வைக்கொருபுதுமண மாலைபுனைந்தாய்நீ
சூழிமுகத்தா னுக்கிளையவனுயர் தோகையர்மன்றாடு
சூலமெடுத்தா டிப்பலிகொளுமதி சூடிதரும்பாலன்
ஆழிதரித்தோ னுக்கொருமருமக னாடுகசெங்கீரை
யாறுமுகப்பே ரிக்குருபரனினி தாடுகசெங்கீரை. (௭)

மாதளையூடேமா வினறுங்கனி வீழ்தரமந்தாரை
வாடியினூடேவாழைநறுங்கனி வீழ்குலைசென்றேழு
காதமுமாறுவாசனைதந்திட மூசுசுரும்பேறு
காவிகளோடேகார்வயலின்புடை யோடைபரந்தோடி
மேதகுபாராவாரம்வளந்தர வேர்கவிசம்பீர
வேலியினூடேபான்மணிசங்கினம் வீசவளங்கூரும்
ஆதிபிரானூராளும்நெடுந்தகை யாடுகசெங்கீரை
யாரணநூலோர்தேடுமிலஞ்சிம னாடுகசெங்கீரை. (௮)

உருவப்பிடிநிகர்பருவக்குறமகள் பந்தாடுங்காவூ
டுருகிக்கனமயல்பெருகிக்கருகியு ழன்றேநின்றாய்வோய்
அருணைக்கிரிபுனைதெரியற்பெரியபி ரபந்தாலங்காரா
அசலக்குறுமுனிபணியப்பணிவிடைகொண்டாளுந்தாளா
இருவர்க்கரியவர்பவளச்சடையினர் மைந்தாவைந்தூரா
'ளியற்கருள்புரிகருணைக்கடலெனு மெந்தாய்செந்தூரா

திருவிரவொளிர்குப்பமணிக தருபர செங்கோசெங்கீரை
திமிரபாமகபடலதகினகர செங்கோசெங்கீரை. (௯)

கும்பக்தருமுனிவந்தர்ச்சனைபுரி குன்றேசென்றேபோர
குன்றிறசிறுகொடியொன்றிப்பாடர்மொழ கொடிபோங்கோலே
அம்பொற்றளிரடிநமபிதகொழுமவ ரன்பேயென்பேறே
அங்கடபுளிழுதலன்டக்தளவுள வந்தேசெநேசேயே
வம்புபபிறவிபி ணைக்குதவும ருந்தேசெந்தேனே
மனறற்குழலமொழிமுன்றிறபயில்சிறு கன்றேவென்றேவேல
செம்பொறகைபிலலரிசெநதிறகதிபதி செங்கோசெங்கீரை
செஞ்சொறபழதமி லந்தசிக்குருபர செங்கோசெங்கீரை. (௰)

செங்கீரைப்பருவம் முற்றும்.

# தாலப்பருவம்.



கடவுட்புலம்போய்க்கற்பகத்தின் காவோடிகலிபுயரியமைபங
கமனு சூற்கமுகின்மிடறவிண்ட கற்றைத்துளாபபூவிரிககவரி
துடைவைபபுதுபபூநதொடையழகார் சுரமாமகளிபணிமாறுந
துணைபபூங்கவரியுடன்பயினறுசுடர் வெண்டரளமிடைகலந்த[கது
முடவுப்பிறைநான்கெனமுளைத்த முனைவாண்மருபபுபொருபபுகை
முற்றும்பவனிககுலிசபதி மொய்ம்பிற்சிறுகால்முகநதெரியும
அடவிபபொதுமபாசெறியிலஞ்சிக கரசேதாலோதாலேலோ
ஆறுமுகதமெமபெருமானே யையாதாலோதாலேலோ. (௧)

பொலங்கற்பகததினசினைபூத்த பொன்னநதுணர்ப்பூநதாதுபாடி
புனிதசசுரும்பர்முகடிரிஞ்சும் புயல்காற்றரும்பின்மிசைபூதத
கலங்கற்பசுநதேனுவட்டெறிபூங் கனியினசிறப்புககடைககணிததுக
கனகாடவியென்றுவநதடுககக கடிகமைபபுறம்வநதோனறுதலும
விலங்கற்கரிதாய்ப்புகுநதயலே வேரிபபுதுசசண்பகசசோலை
விழையாமருதபபேட்டளியை வேட்டங்கணையுமிலஞ்சிவெற்றி
யலஙகற்குடுமியிலங்கிலைவே லரசேதாலோதாலேலோ
ஆறுமுகதெம்பெருமானே யையாதாலோதாலேலோ.

களத்தடங்கட் கடைசியர்கைக் கருங்காப்பிடறிக் களைபறித்த
கற்றைக்கழுநீர்ப் பொதிசரித்துக் கமுகின்பழுக்காய்க் குலைசிதறி
முள்ளும்பொதிந்த குடக்கனியை முடத்தேம்பலவு முகந்துடைத்து
பொய்ப்பூந்தேமாங் கனியுகுத்து முழுக்காய்க் கதலிக் குலைசாடி
வெள்ளைப்பெடையோ டிமங்கிடந்த வேலிப்புறத்திற் பழுத்தவெலு
மிச்சங்கனிபந் தடித்துவெடி வாளைப்பகடு விளையாடும்
அள்ளற் பழனத் தமிழிலஞ்சிக் கரசே தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே ஐயா தாலோ தாலேலோ. (௩)

மன்பார்ப்பதிந்தாயேக்கறுநின் றிருக்கார்த்திகைத்தா யொருங்கேவந்
தேந்துமுலைப்பால் முதூட்டி யிலைப்பாற்கிடந்த மலைப்பின்றி
முன்பாலிலையி லொருகொழுந்து முகில்போற்கிடந்து தனிவளர்ந்த
முளரிக்கடங்கண் பாதுலன்போல் முழங்குஞ்செழுநீர்ச் சரவணத்துப்
பொன்போற்றயின்றாய் துயின்றமணிப் பூந்தொட்டிலில்யான் தாலாட்டிப்
பொன்னங்கரங்குத் தடவுங்கண் பொருந்தாய்போலு மிருந்தாயால்
அன்பாய்த்தென்பார்ப் புகழிலஞ்சிக் கதிபா தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே ஐயா தாலோ தாலேலோ. (௪)

முடத்துங்கருங்கைச் செருத்தாடி முடைவாயிடையர் கடகாலின் [பி
முன்றூன்றியகோன்மிசைத் தூபிலமுட்டுஞ் சுவைப்பாண்முலைச்சுர
மடக்குநறுநெய்சுகயல் பாய் வயற்பூஞ்சாலிக்கதிர்மேய்ந்து
மடற்பூவிரியாப் பசுங்கமுகை வண்ணக்கரும்பென் றெண்ணியுண்டு
குடக்கட்பிடரிக் கவைக்குளப்புக் குறுங்கால்பெயர்த்து நறுங்காஞ்சிக்
குளிர்நீழற்றினி யம்புனிற்றுக் குழக்கன்றூட்டிக் குழலொலிகேட்
டடங்குந்தமரோ டமரிலஞ்சிக் கரசே தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே ஐயா தாலோ தாலேலோ. (௫)

விடற்கரியபாபலின்மேல் வெறுப்பாய் முளைக்கும் விழிக்கணையே [யா
வேற்பூங்கணையாய்க் கொடிப்புருவ வில்லே கொல்லுங் கொடுஞ்சிலை
யுடற்பெருமபாசனையுரூச வுடற்றுங்கடற்றெள்ள முதனைய
யுருந்துஞ்சமுக வெளிபக்கு முழங்குங்கருங்கோகிலக்காளந்
கூடற்கரிய கிரல்விருது கூட்டிநடஞ்சேர் சோலையின்புறத்துங் [மலர
தொடங்குமிருள்பம் மருண்மாலை தோன்றுமுன்னர்த் தெருக்கொழு
தாடற்றிலைவேள்பாயிலஞ்சிக் கரசே தாலோ தாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே ஐயா தாலோ தாலேலோ. (௬)

இருவிக்குடுமித்திரிகூடத் திலைப்பூஞ்சாரற்புறத்துந்தென்
னிலஞ்சித்திருக்கோ யிலினகத்து மிருந்தபடியேதிருந்தொளியாய்
மருவிப்பிரியாவள்ளியுடன் வடிவேல்செங்கைகவலனேந்தி
மயிலின்புறத்துக்கயிலாய மலைபோலுயர்ந்தமலையகத்துக்
குருவிற்சிறந்தகும்பமுனி கும்பிட்டிறைஞ்சநின்றநிலை
கூட்டிப்பணியுந்தண்பொருநைக் குமராபாவநாசமென்னும்
அருவிக்குடுமித்தடாகபுலத் தமர்ந்தாய்தாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையா தாலோதாலேலோ.

இதழுறுமைம்பத்தொருவன்னங்களி லக்குமணிக்கோவை
யெழுதருமுதுமறைநான்குவடத்துமி சைத்தபெரும்பிரணவப்
புதுமாணிக்கத்தொட்டிலின்மானத பூசைத்தனியடியார் [றாய்
பொய்யாமெய்யுணர்வணையாடையின்மிசைபொன்போல்வளர்கின்
மதுமலர்பூத்தபொலங்கொம்பனையார் வகைவகைதாலாட்டு
மட்டார்மலர்ப்பூந்தொட்டிலினங்கள் மழைக்கண்ணெடுங்காவிந்
ததைமலரணையினுமொருதுயில்புரிவாய் தாலோதாலேலோ
சம்பத்துதவுமி லஞ்சிக்குருபர தாலோதாலேலோ. (அ)

சிங்கமுழங்குந்தடவரைமுடியிற் செழுமணிகெழுமுல்லைச
செறிதயிர்கடையுமி டைச்சியர்செங்கைச் செந்தாமரைமலரிற்
பொங்குமுழங்கும ணித்தேர்வீதி புனைகொடிமணிமாடப்
பொன்னகர்மருதவ ரைப்புநிறைந்தபு றம்பணையின்பாலில்
வங்கமுழங்குகருங்கடனெய்தல்ம ருங்கினெருங்கேவெண்
மதியமுமமுதத்திவலையுமான மணித்திரள்வீசுவதூர்
சங்கமுழங்குந்தமிழ்நாடுடையாய் தாலோதாலேலோ
சம்பத்துதவுமி லஞ்சிக்குருபர தாலோதாலேலோ. (கூ)

வங்கக்கடலூர டங்கப்பொருதெழு மாசூர்மாசூர்மா
மங்கப்பொருதணைபைங்கற்பகநிழல் வானோரேனோரு
மங்கட்புவனியும்வெங்கட்கொடியவ ராலேவாடாமே
யன்றிப்பெயரியகுன்றைப்பொருமதி வீராபோரூரா
எங்கட்குடையவர்திங்கட்சடையினர் பாலாநூலாய்வோர்
என்றபழமறையனைத்துந்தமி ழேழேழ்பாவாணர்

சங்கப்புலமைத ருஞ்சொற்புரவல தாலோதாலேலோ
சம்பந்துதவுமி லஞ்சிக் குருபர தாலோதாலேலோ. (௧௦)

இந்திரன்பாவைபெறுமிளையவள்பாகா வேகாவோகாரா
இங்கிதம்பேசுகுறமகள்மணவாளா வேளூர்வேளாளா
உந்தியங்கோகனகமுகில்மருகோனே கோனேவேலோனே
மூன்றிரண்டெனவுரைபகருமென்னுவா யோவாமீகாமா
மந்தரம்போல்வளர்ப னிருபுயபாரா மாலாகேயூரா
வண்டுகொண்டாடுசுனைமருவுபிரானூர் வானோர்போரேறே
சந்தனந்தோயுமுலையுமையவள்பாலா தாலோதாலேலோ
தண்டையுங்காலுமழகியபெருமாள் தாலோதாலேலோ. (௧௧)

தாலப்பருவம் முற்றும்.

# சப்பாணிப்பருவம்.

வல்லேறுபூண்முலைக்குழல்வாய்மொழிக்கவுரி மழுவேறெனப்பய
ந்த, வண்டுபடுகவுண்மதக்கரடக்கடாயானை வட்டமிட்டுக்கொட்டநீ;
யெல்லேறுசுடர்மணிக்கடகபன்னிருகரமி சைந்துசப்பாணிகொட்டி,
யிவ்வாறுகொட்டுதுமெனப்பவளவாய்மலர்ந் தின்னருள்பழுத்துமது
ரச்;சொல்லேறுகடவுட்ப ழம்பாடல்முறையிடச் சுடிகையரவரசுநெளி
யத்,தொந்தமிடுசூலாயு தக்காளிவெட்குறச் சுத்ததாண்டவநவிற்றிக்;
கொலலேறுயர்த்தவன்றமருகங்கொட்டநீ கொட்டியருள்சப்பாணியே
கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணி
யே. (௧)

கடசலதிகொட்டுகைத்தகாவளத்தரி கருங்காளமேகமெய்ப்பக்,
காய்சினப்புலியினதள்வெண்டாரகாபடல மொப்பக்கவின்கொழித்து
ப்;படவிலவுகொட்டும்வெண்ணீற்றொளியுமெய்யுமதி பானுமண்டலங்க
ர்ப்பப்,பவளச்சடைக்காடுசெக்கர்வானிசையமழை பைந்தேன்கடுக்கை
தூற்ற;விடவளாறுகொட்டும்வெங்காகோதரப்பணிகள் மின்னொளிகவ
ற்றிவீச, விண்ணினறவிண்ணேறுவின்னவர்வியந்தேத்த விண்ணேற்றிலங்க

ணல்நந்தி;குடமுழவுகொட்டநடமிட்டவன்றிருமதலை கொட்டியருள் சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (உ)

தடம்வைத்தடர்ந்தேறுகரையடிச்சிறுநடைத் தந்தாவளப்பிடிகளுந், தடவுக்குழைச்செவிகழற்கால்முகம்நெரி தடக்கைக்கடாயானையுஞ்; சுடர்வைத்தகொன்பிறைநுழைந்தேறுகொண்டலிற் றுளைபடாமுனைமருப்புக், துடியடிக்கன்றுகின்றுடுந்தடாகத் துறைப்புனல்பாய்ந்துவெள்ளிப்;புடம்வைத்துவார்த்தனையபொங்குமாகடலருவி பொன்னூமுத்துங்கொழிக்கும்,பூலோககயிலாயகிரியென்றுயர்ந்துமைப் புயல்முகடுரிஞ்சுபொன்னங்;குடுமித்திரிகூடத்தடஞ்சாரல்வளநாட கொட்டியருள்சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (௩)

மறந்தலைமயங்கரவிலங்கிலைவலங்கல்வேல் வாங்குபுதிரித்துமருவார்,மடியத்துறந்தடியர்பொன்னுலகுவாழ்வித்த வரதாபயங்களொன்று; சிறந்தமலையாசலச்செந்தமிழுமருமறைத் தெய்வப்பழம்பாடலுஞ் சென்னுமுகந்துபன்னுளுந்தவங்கள்புரி செல்வர்வந்தேத்துவதுபோல் நறுந்தளிர்ச்செந்தாமரைக்காடுதைவந்துநறைவண்டுமுரலுவதுபோல், நடைபயில்பசும்புரவிபுடைபயில்விசும்பிரவி நான்மூன்றுமுறையிடுதல்போற், குறுந்தொடிபுலம்புகைசிவந்தொளிததும்பநீ கொட்டியருள்சப்பாணியே, கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (௪)

வித்துமுளைவைத்துவெண்பார்கோலியொருமித்து வெள்ளிக்குருத்துவிட்டு,வேரூன்றிவிற்கனிமிர்ந்தெழுந்தள்ளிலை விரித்துக்கருக்குவைத்துப்;பைத்தரைதிரண்டுபொதியாய்க்கமஞ்சூல்கொண்டுபச்சைப் பசும்பாம்புபோற், பருவக்கருக்கொண்டுபச்சென்றிளங்கதிர் பயந்துபரிபோற்கவிழ்ந்து; முத்துவிளைவித்துருமமொத்துவாய்த்திரங்குலைமுதிர்ந்துபொன்போல்விளைந்து, மொய்வரம்பறியாதுதெற்றலாடிக்கழனி முற்றுமுடிவைத்தழைத்துக்; கொத்துமலிசெந்நெல்செறிதென்னுரிநன்றுடகொட்டியருள்சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (௫)

மூப்பாண்டகூடலின்முதற்பாண்டியன்புதல்வி மும்முலைக்கன்னிபொன்னின்முடிசூடியடிமரபின்முறைநெறித்திசைவென்றிமுன்னிட்

படர்ந்தனொன்று; மாப்பாண்டவாதியர்த மரபாண்டகொண்டவ்முதல் மற்றுள்ளகடவுளரெலாம், வானோங்குமீனக்கொடிக்குப்புரஞ்சாய்ப்ப வலனேந்துமாலைசூட்டுங்; தேப்பாண்டரங்கற்குமுடிசூட்டிஎன்னம் மை திருவயிறுவாய்த்தளித்த, திரளோங்குமுக்கிரப்பெருவழுதியா கியத் திருமரபில்வந்துதித்த; கோப்பாண்டியற்குமொருகுலதெய்வ மானவன் கொட்டியருள்சப்பாணியே, கொழிதமிழிலஞ்சிவருகுமர குருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (௬)

வீண்பொறைகிடந்தவென்மனப்பாண்குருக்கத்தை மெய்ப்பத மமைத்தமைபடா, வேதநூற்பாகட்டிணையுயர்த்தறநுகஞ்சேர்த்து வெவ்வினைக்கோரைபோக்கித்; தாண்பொறைகிடந்திட்டசஞ்சிதக் குத்தியைத் துத்திப்பரித்துழுதுநிர்த், தூளிபடலஞ்செய்யுமவுத்திரி கன்புரஞ் சூழ்ந்துதவவேலிகோலிச்; காண்பொறைநெல்வித்திப்பி ரா ரத்துவப்பெருங் களைபறித்தாகாமியக், கருநோய்வராதருட்புனல்வா ர்த்துஞானக்கரும்புவிளைவித்துநிமிர; கோண்பொறைநிமிர்த்தவெ ண்பிறைமுடிக்குருமதலைகொட்டியருள்சப்பாணியே, கொழிதமிழில ஞ்சிவருகுமரகுருபரமுருககொட்டியருள்சப்பாணியே. (௭)

மன்றுதொறூடலுவந்தவர்கயிலையு மணிமாடக்கந்த
மாதனபூதரமும்பொன்மயில்கள் மலர்க்காவிற்கார்கண்
துன்றுதொறூடலுவந்தபரங்கிரி மலையுந்தொலையாத
சூரலைவாய்விடுசீரலைவாயுந் தொழுதிருவேரகமும்
நன்றுதொறூடலும்வந்தருள்செல்வி நயக்குந்திருவாவி
னன்குடியும்பழமுதிர்சோலைப்பழ நாகமுமாகநெடுங்
குன்றுதொறூடலும்வந்தருள்சேவக கொட்டுகசப்பாணி
குறுமுனிபரவுமி லஞ்சிக்குருபர கொட்டுகசப்பாணி (௮)

உரவுகிடந்தநெடும்புனவாடையு வந்துகிடந்துடையா
ளுபயபயோதரமீதுகிடந்தபொன் னுத்தரிகம்போலப்
பரவுகிடந்ததடங்கிரியருவிப் பாங்கர்கிடந்ததினைப்
பரணிடந்துபரித்தபசுந்தலை கட்டியபட்டுடைநெட்
டரவுகிடந்தவகன்பேரல்குலணங்குகணங்குழைபோ
லாசைகிடந்தகருங்கட்குவளையி னருகேமுருகவிழ்பூங்

குரவுகிடந்ததடம்புயபூதர கொட்டுகசப்பாணி
குறுமுனிபரவு மிலஞ்சிக்குருபர கொட்டுகசப்பாணி. (௯)

அழகுகுறவர்தம்மகளிர்திருநுத லப்பியகத்தூரி
யணியுமுலைகளில் விழுதபுழுகுடன் மணத்ததிருப்பாணி
யொழுகுநவமணியொளிவிடுகடகமு முத்தரிகத்தோண்மே
லுதயகிரிகளி லுலவியபரிதிக ளொத்தகுழைக்காதும
மழலைவரியளிமுரலமுகையவிழ் கடப்பமலர்த்தாரு
மரகதகலவநி ருபகுலதுரக வட்டமுமுட்டாத
குழைவுமழகிய குழல்மொழி தலைமணி கொட்டுகசப்பாணி
குமரகுருபரசரவணபவகுக கொட்டுகசப்பாணி. (௧௦)

சப்பாணிப்பருவம் முற்றும்.

# முத்தப்பருவம்.



நெகிழாவரிவண்டினமுரலா நிரலாவிருந்திருந்தருந்தும்
செய்தற்கருங்கானலந்துறைவெண் ணிலவுகுருடவால்வளைமுத்துந்
திகழார்கலியின்கொழும்பவளச் செழுங்காடடர்ந்துபடர்ந்தேறித்
தெற்றும்பணைமாமருதவயற் செங்கட்கருமயிற்செறிமுத்தும்
இகழாப்புரவத்திமிகான்யாற் றிறங்குமிபகோட்டிமிழ்முத்து
மிலஞ்சிகுறிஞ்சிக்கிளைமுத்து மேமேதெம்பினபாவிரநேமால்
முகிழாமலர்ப்பூகடம்பா நீ முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௧)

கடவுட்பொருனைக்கடற்றுறையுங் கன்னித்துறையும்பொன்னிநதிக்
கடலந்துறையும்பொங்குபுனற் கங்கைத்துறையுந்தங்குகழி
தடவுக்குடவால்வளைமுத்தஞ் சலாகைப்பருவத்தடைபட்டாஞ்
சலாபத்திகளாஞ்சமுகாயத் தாவாமபோதிதணவாமற்
றூடமுட்கனியின்சுளைபிதிர்ந்து கொழுந்தேனொழுகிச்செழுந்தேமாங்
குவவுக்கனியைச்சுழித்தரம்பைக்குலத்தைப்புரித்துயணைகொழிக்கு

மூடவுப்பலவின்முளைத்தவன்சேய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (உ)

சத்தமிருந்தமுதுமறையோன் றன்னைக்கயிலைத்தடஞ்சாரற்
றடங்கோட்டிடபந்தனைத்தாழ்ந்து தனக்கென்றன்னமிரந்திட்டா [ன்
அத்தமிருந்தசுடராழிப் பெருமானன்றுமாவலிபா
லாழிப்புவனமிரந்திட்டா னருமாதவத்துக்கன்னியர்தஞ்
சித்தமிரந்தானெம்பெருமான் சிறியேமிரத்தல்பிழையாமே
தெய்வத்தமிழ்தேர்தென்னிலஞ்சிசைவக்கொழுந்தேதீங்கனிவாய்
முத்தமிரந்தேநின்பாலாய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௩)

தென்னிலஞ்சிப்பெருமானின் றிருத்தாமரைக்கைக்கொடை
க்குடைந்தது, செல்லுஞ்செல்லுந்திருத்தாளைத் திருமாமறுகுக்கு
டைந்தசங்கு; மன்னர்மறைகள்முறையிடுநின் மலர்த்தாட்குடைந்த
கமலமுநின், மதுரந்துளிக்குஞ்சிறுகுதலை மழலைக்குடைந்தவான்கரு
ம்பு; மின்னிற்குடைநுண்ணிடைக்குறப்பெண் வெருவப்புகுந்துன்
வேற்குடைந்த,வேழம்பொருப்புந்தருமுத்தம் விழைந்தாற்கிடைக்கு
ம்வேண்டகிலே; முன்னர்க்குருமாமுனிபணிசேய் முத்தந்தருகமு
த்தமே, முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௪)

செக்கச்சிவந்தசெழுங்கமலச் சிமிழ்வாய்திறந்ததிருமுத்துஞ்
செந்நெற்படப்பைசெறியிலஞ்சிக் கன்னற்றிரளிற்றிரள்முத்து
மெக்கற்படுகரிழிகான்யாற் றிரங்குமிபக்கோட்டிழிமுத்து
மெங்கோனிருக்குந்திரிகூடத் தேலாப்புறத்திற்கிளைமுத்து
மைக்குட்குளிக்கும்படிகுளிக்கு மலைவாணர்சலாபத்துமுத்தும்
வந்தாற்குறப்பெண்ணகையுறைக்கு வைத்துமதுரத்துளிதுளும்ப
முக்கட்கனிக்குமினிக்குநின்வாய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௫)

வேறு.

கழிபிறப்புந்தொலையநிற்குங்கவிஞர்சித்தம்பெருகவே
கயிலைவெற்பும்பொதிகைவெற்புங்கடவுள்வெற்புந்தகையவே

தழுவுபொற்குங்குமமுலைக்கண்டனிசுவைக்கும்பவளவாய்
தனிமுகக்குஞ்செவிநிகைக்குந்தளிரடிக்குந்தகையவே
பொழிமதத்தன்புகர்முகத்தன்புடையில்நிர்த்தம்புரியவே
புனல்முடிக்குங்கடவுளப்பன்புதுநகைக்குந்தருகவே
குழல்மொழிப்பெண்கயிலிருக்குங்குழவிமுத்தந்தருகவே
குறுமுனிக்கன்றருள்சுரக்குங்குமரன்முத்தந்தருகவே. (௬)

கழைசுழிக்குங்கயமுகத்தெங்கடவுளைக்கண்டடவிசூழ்
கடிபுனத்தன்றொருகுறப்பெண்கரநெரித்தஞ்சினவளாய்த்
தழையுடுத்தங்கயல்வரச்சந்தனமணக்குந்தன்கடாந்
தழுவிமுத்தந்தருகெனத்தந்துருகிநிற்குந்தலைவநீ
பொழிமதச்செம்பகவனத்தெம்புனிதன்முத்தம்பொழுதெலாம்
புயவரைக்கண்பதியவைக்கும்புதுமலர்ச்செஞ்சரணனீ
கொழிதமிழ்த்தென்புலிபுரக்குங்குரிசில்முத்தந்தருகவே
குறுமுனிக்கன்றருள்சுரக்குங்குமரன்முத்தந்தருகவே. (௭)

வேறு.

கன்னலங்காடுதன் மெய்த்தவெண்முத்தங் கருப்பாலைப்புக்கலை படுங், கழனித்தடஞ்சாலிவெண் முத்தெருத்தின் கவைக்கான்மிதித்து டைபடுந; துன்னலஞ்சுடர்முத்திபக்கோட்டி லுண்டது தூங்குபுடை ங்கலேறு, சுத்திக்குருத்தொடுபிடுங்கச்சிதர்படுந துளைகொணுண்முள ரிமுத்தம்; பன்னலங்காட்டிலும்பாய்ந்தளறுபடுநெடும் பரவைக்கழிக் கானல்வாய்ப், பணிலமுத்தெல்லாம்புலால்படுந்தெய்வப் பதிக்கெலாம் பழையபதியாந்; தென்னிலஞ்சிப்பதித்தேவசேனாபதி திருப்பவள முத்தமருளே, சேணோங்குமாடத்திரிகூடச்சிலம்பன் திருப்பவள முத்தமருளே. (௮)

வானோங்குகமுப்புடைப்பைங்காய்க்குலைத்தெங்கின் மடல்வீழ்ந்து நெற்றுவிழ்ந்து, வாளரவுடன்றிங்கள்முறிபட்டுவீழ்ந்ததென மருத முருடிடறிமதுரக்; கானோங்குவெள்ளிமுறிகல்லென்றொலித்தலுங் கருவிரல்வெள் ளுகிர்வளைக்காற், காய்த்திட்டசெம்பிட்டநெடியவற் கூன்புறக் கனியுடற்குளிகட்குறும்; பேணோங்குசிறுநரைப்புன்றலைக் கடுவன்பிணைவீழ்ந்ததென்றுபதறிப், பேதுற்றிமைத்திமைத்தலமரு தல்கண்ணுறீப் பிணைவந்திணங்குபுதழீ; தேனோங்கு மணமுயரிலஞ்

சிவளநாடன் திருப்பவளமுத்தமருளே, சேணோங்குமாடத்ரிகூடச்
சிலம்பன் திருப்பவளமுத்தமருளே. (கூ)

கைப்பவளமாணிக்கக்கடகஞ்சிலம்புபொற் காரைகைவந்திகாப்பு
கனககொந்தளவோலைவெண்முத்துமாலிகை கலந்தொளிநெருங்கிட
மருங்;கெப்பவளருந்தனக்குன்றுங்குழற்காடு மேந்திழைநலார்கிளை
ஞ, ரினியமடலெழுதுதென்காசிக்குமுத்தமி ழிலஞ்சிப்பதிக்குமெங்
கோன்; வைப்பவளருஞ்சுப்ரமணியபுரத்திற்கும் வளராறுமுகநகர்க்
கும், மரகதத்தடஞ்சாலிசூழ்பிரானூருக்கு மன்னுபொன்னுலகமென்
று; செப்பவளமோங்குநன்னகர்க்குமொருவேந்தன் திருப்பவளமுத்
தமருளே, சேணோங்குமாடத்ரிகூடச்சிலம்பன் திருப்பவளமுத்த
மருளே. (க0)

முத்தப்பருவ முற்றும்.

---

## வாரானைப்பருவம்.

கண்டாயில்லைப்போலுமிறு காத்துக்கிசைந்தகுறுங்கொடிநின்
காதுக்கிசைந்தமாணிக்கக் கதிர்ப்பூங்குழைமற்றிதுகாற்காந்; தண்டா
ரகைபோல்மணிகிடந்த சதங்கைவடமற்றிதுநினக்குத், தரவேண்டா
மோவந்தாலித் தனையும்புனையுந்தரமாமே; விண்டாரணங்கள்வழுத்
தரிய விழுத்தாளிணையுமருள்பழுத்த, வெண்மூரலுமறுவிருமுகமும்
விளங்கப்புகுந்தென்மனக்கோயில்; கொண்டாய்வருகதமிழிலஞ்சிக்
குமரப்பெருமாள்வருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடைய கோமா
ன்வருகவருகவே. (க)

ஆர்க்குங்கனகத்தாள்பந்த நபூத்தும்வயிரச்சுட்டிகிடந், தசை
நதயிசைந்தமலர்க்கடம்பத் தலங்கற்குடுமியொடுமலங்கச்; சேர்க
குங்குரல்வாய்ச்சிறுசதங்கை சில்லென்றலம்பப்பொலஞ்சிலம்பு, சில
ம்பசிலம்பிற்சிங்கத்தின் சிறுகன்றென்னச்சிற்றடியார்;பார்க்குந்த
வம்போல்நடைபழகிப் பழகுமடவார்தளிர்க்கைவிரல், பாய்ந்துபிடித்
துநடந்திளைத்துப் பனிவேர்வரும்பிச்செவிலிமுகங்; கூர்க்குங்குறிப்பு
ங்குறுநகையுங் குழைவுமறிந்தேம்வருகவே, குடுமிச்சுடர்வேற்படை
யுடைய கோமான்வருகவருகவே. (உ)

அமளிக்கலவிக்கொடுமபோரி லவிழ்ந்தகுழலுமிடைநெரிந்த, வ
ங்கச்சரியுஞ்செங்குமுத வதரச்சிவப்புங்கருங்குவளைச்; சமரக்கடை
க்கண்சிவப்புமிடை சரிந்தவுடையுந்தளர்நடையுந், தழுவுங்கொழுநர்
தடம்புயபூ தரமேலபணசந்தனச்சாந்தந்; திமிரத்திமிரத்திமிர்ந்தசெப்
பிற் சின்னப்பிறைபோற்கிடந்தநக, சின்னங்களுமாய்த்துயிலெழுந்
தார் செப்பாமொழியைச்சேடியர்க்குச்; குமரிக்கிளிகள்புகழிலஞ்சிக்
குமரப்பெருமான்வருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடையகோமா
ன்வருகவருகவே. (௩)

அடிமைவழிகோராவொனகொண் டருட்பால்புகட்டிமருட்
பிறவி, யறுகும்படிவந்தெழுத்தறிவித் தஞ்சாம்றமெட்டெனும
பருவத்; துடைமைபடுத்தியஞ்செழுத்து முப்பேதசிகநெனுயிர்க்கு
யிரா,யுணர்வுக்குணர்வாய்ப்பயின்றறிவு முருவிற்குருவாயுடன்கலந்து;
மடமைதவிர்த்துவழிபாடு திருத்திமழலைத்திரந்திருத்தி, மதுரககவி
காவரதகிருத்தி வலியப்பிடிசோறமுதருத்திக; குடுமிதிருத்தியெனை
வளர்த்த குருவேவருகவருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடைய
கோமான்வருகவருகவே. (௪)

புறஞ்சுற்றியதெண்டிரையாழிப் புவனபரபலெலாந்திரிந்து
பொருடேர்ந்தருடேர்ந்தவர்க்குதவார் புதையலிருக்குமிடந்தேடி ;
மறஞ்சுற்றியவேறுகுறுநிலமா மன்னர்புகழ்ந்துறன்னுவபொன்,வாரிய
பெருங்காவடிசேர்ந்து வழங்காநெறிபோமவழகேபோல்; அறஞ்சற்
றறியார்குலவேட ருங்கோட்டுகைற்புரத்துவைத்த, வாய்பூஞ்சிற
கரீஇயகற்றி யளிதேன்கவர்ந்துகொடுபோதுங்; குறிஞ்சிக்கிழவா தமி
ழிலஞ்சிக் குமராவருகவருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடைய
கோமான்வருகவருகவே. (௫)

அப்பன்வருகவெனையாண்ட வையன்வருகவாருலகுக்
கதிபன்வருககபிலாயத் தரசகுமரன்வருகவெங்கள்
வைப்பன்வருககுழல்மொழித்தாய் மைந்தன்வருககலவமயில்
மகிழ்வோடேறிதேவர்தொழ வருவான்வருகவறநெறிக்குத்
துப்பன்வருகமெஞ்ஞானத் துறைவன்வருகபுலம்புகுதுந்
தொழியன்வருகமணிச்சுடிகைத் தோளான்வருகதுலங்குமணக்
கொப்பன்வருகமாணிக்கக் குழையன்வருகவருகவே
குடுமிச் சுடர்வேற்படையுடைய கோமான்வருகவருகவே. (௬)

தேந்துணரலங்கன்முடியிமையவர்குழாந்தொழச் சிங்காசனத் திருக்குந், தேவேந்திரன்வரக்குமாரத்திகணவனைத் தேடித்திகைத் திருப்பக்; காந்தள்ஞ்சாரலிற்கடிபுனங்காக்குமான் கன்னிக்கோர் கண்ணிவைத்துக், களிறுதருபுணர்வினைற்புணர்தந்து பின்வருங் கள நாடியுள்மயங்கி; யேந்திளங்கொங்கைமாரிடைவினவியுடைவினவி யென்போக்கினைநடன்போக், கிடையீடுகைவந்தரத்தொடுகிறுத் தெயினரேற்றபடியாற்றுவதுவைக்; கூந்தலம்பிடியுடன்புதுமணக் கோலமுங் கொண்டுவருதவன்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநமபு தெனி லஞ்சிவரு குமரநாயகன்வருகவே. (௮)

ஒத்தசிவபக்தர்பரிசுத்தரிதயத்தினின் றுதயஞ்செய்பானுவருக, வுக்தசலக்ஷணபரிக்ஷையினகப்படா வொளியினொளியுருவன்வருக, வேதவாவைகடந்துடக்கநின்றுசோதித் தரங்கைதீர்த்தவன்வருகவந், தறிவொடொருகுறிதன்னதருளிலறிவித்தென்னை யாட்கொண்டசூரவன்வருக; பதிவில்லியிற்படிபரமசோதிமம்வருக பழையவாதனைய கற்றும், பரமபரயாதீதபர முத்திநல்குவர பாரிசாதம்வருகவின்; கொத்தடியர் கூட்டத்திலென்னையுமிருத்திக குறித்தபெருமான்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநமபுதெனிலஞ்சிவரு குமரநாயகன் வருகவே.

அனிர்வசனமாபபெருஞ்சலதியாடுமடி யேங்களுனையடைய மாட்டேம், மடிகளுமனைத்துமுடையவனுமுடைமைபபொருளு மாத லாலடியமேமுந்; தனதுபொருளுடைமையிற்றீராமைதேறியொரு தண்ணளிசுரக்கவருக, தற்காக்கவருககை தரவருகவற்றுத தன்கரு ணைவெள்ளம்வருக; வனசநிதிவருகவர பாரிசாதம்வருக வளர்சுரபி வருகசிந்தா, மணிவருகவெனதிருகண்மணிவருகவென்னையன் வருக வென் னப்பன்வருக; தனிசிலைப்புருவத்திருத்தியைபருந்தவக் குழவி யிளமதிவருகவே, கும்பமுனிதஞ்சமெனநமபுதெனிலஞ்சிவரு குமர நாயகன்வருகவே. (௯)

எறுதவர்சிபிலிருக்கும்பசுந்தேனை யிருமுடவினைறுதனிகிடந், தேக்கற்றுமங்காந்தநின்னிலைபுமென்னிலைபு மின்னிலையையக்கிடந் தேற்; காருதசிந்தாகுலப்புன்மைதனையுமய யாற்றியொருபயந்தே தற்றுவித்த, தானருகரலதிரிபட்டிப்பரவமுத மூட்டுத்தன்னையாவது

காட்டி; மாறுதசிவானுபூதியருள்சிவானு பூதிகமுமாகமன்னு, ம
ன்னுபசுகரணமுஞ்சிவகரணமாக்கியரு மறையின்பெரும்பொருளை
யுங்; கூறுதுகூறியென்மனபெருங்கோயிலிற் குடிகொண்டவன்வரு
கவே, கும்பமுனிதஞ்சமெனநமபுதெனி லஞ்சிவரு குமரநாயகன்
வருகவே. (க0)

செங்கையிலிலங்கியகுறுந்தொடிபுலம்பவொளிர் திகழுமவெயி
லிருள்பருகவே, செஞ்சரணபங்கயசிலம்பொலிமுகந்தடியர் சென்ன
சாகரமொழியவே; யங்கவைவடங்களொடுகொம்புமணிபுங்குலவ
வருணமேகலையிசையவே, யங்கதபுயங்களில்வி ளங்குபணிரண்டிரவிய
னையவார்குழையசையவே; கங்குல்பகலின்றிமலர்கண்களபனிரண்டு
மெழுகருணைவாரிதிசெறியவே, கங்கைமகளுஞ்சயிலமங்கையரசுந்தம
து கயல்கள்போல்விழிகுளிரவே; கொங்குதமழ்தென்கபிலைமுன்றி
னில்நடந்துவரு குழவிவாரணம்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநம
புதெனி லஞ்சிவரு குமரநாயகன்வருகவே. கக

வாரானைப்பருவம் முற்றும்.

---

# அம்புலிப்பருவம்.



எண்ணிரண்டோதுகலைவாய்ந்துமொருகார்த்திகை யிளம்பயோ
தரமுகந்து, மெம்பிரான்சடிலகோடீரப்பெருங்கங்கை யாற்றிடைவ
ளர்ந்துமெங்கோன்; திண்ணலம்பெருகுமொருகண்ணினைத்தந்துமிந
திவரச்சுனைவியந்துஞ், சிகரவரைபிடறியும்பூச்சக்ரவாளச் சிலம்புசுற்
றித்திரிந்தும்; விண்ணவர்தருமாலைவேலைநின்றேங்கமர் வேட்கவினை
தந்துமிவையோர், விகடதடமணிமகுடநிரைபழகுசரணை விந்தனை
நிகர்த்தியந்தோ; வண்ணலஞ்சேவற்பதாகைப்பதாபனுட னம்புலீயா
யாடவாவே, யந்தண்மருதஞ்செறியிலஞ்சிவடிவேலனுட னம்புலீயா
டவாவே. (க)

ஓராயிரங்கோடிதோட்டுநெட்டோடைமட் டுமிழ்புண்டரீகமெ
ன்றோ, வும்பர்கடையுந்திருப்பாற்கடற்குழியி னுருட்டுதெள்ளமுத
மென்றோ; காராழிவிடமுண்டகண்டன்சடாடவி கட்டுமலரிண்டை

யென்றோ, கற்பகாடவிமகளிர்கஸ்தூரிதீட்டுகைக் கண்ணாடியென்றெ
ண்ணியோ; தாரகாகணக்கயலினிரைதேர்தரப்புக்க சக்ரவாகப்புளென்
றோ,தன்னன்னைதந்தபாற்கிண்ணமென்றோகொண்டு தம்பின்கள் தம்
பின்கவினன்; றாயுமறைமுடிவிலாடுமிவனுடமா லம்புலீயாடவாவே
யந்தண்மருதஞ்செறியிலஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (உ)

தேனுந்துவர்ந்ததிடத்தித்திக்குமதுரவாய்த் தெய்வப்பிணைக்கள்
குமரர, செம்பொற்படாமுலைததும்பத்ததும்பச் செழுந்துணர்ப்பாரி
சாதக்; கானுந்தூநுதொடைகவின்பெறச்சூட்டிக் கலந்தணைத்தாங்கி
ருப்பார், காதற்ப்ரபாகம்வந்தலேமோதவந்தின் காட்சியொருகாட்சி
யன்றோ;மோனங்கரும்பெரியபரமானுபூதியின முலைமுகைததும்பஞா
ன, மொய்மணக்கார்சூட்டுமுத்திபெருந்திரு மோகமுறுசககசமான
ஆனந்தவெள்ளமெனுமாறுமுகநாதனுட னம்புலீயாடவாவே,யந்தண்
மருதஞ்செறியிலஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (ங)

விரங்கிடந்தவாட்சூரபன்மன்னுதி மேவார்தமைக்குமைக்குமிக்
கானவேள்விகளனைத்திலுந்தலைமைபெற் றுன்வித்தியாபாண்டித்ய
பாரங்கதமட்டமுள்ளவன்கடவுளர் பழஞ்சிறைவிடுத்திறைவனைப்
பட்டாரகபெரும்பட்டணங்கைக்கொளப் பட்டாபிஷேகம்வைத்
தான்;வாரங்கிடந்தகுறவள்ளிநாயகிபிட்ட மட்டவிழ்குராந்தொடைக்
கு,மாதரசிசேர்த்தியமடற்பாரிசாதமாலைக்குமிடையேமதாணி;யாரங்
கிடந்துலவுபன்னிருபுயாசலனுடம்புலீயாடவாவே,யந்தண்மருதஞ்
செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (ச)

நாடகப்புரவிப்பசுந்தேருருட்டுமிள ஞாயிறுதயம்புரிந்து, நாட்
கொண்டபடரியகதிர்க்கெதிரெறித்தவயிரப்பொடிநகைப்பதேய்ப்பப்;
பாடகத்துறைமிடற்றுக்கருவிமாக்களிசை பயில்மகதியாழ்மொழியு
டன், பதினெண்பெரும்பண்ணுமேழிசைவடித்திசைப் பனுவலேபா
பத்திசான்ற; மாடகமுருக்கிமணியார்த்திவவுதைவந்து வள்ளுகிர்வ
டிம்புவருடி, மகரயாழ்வாசிக்குமின்னிசையுடன்பழகி மழகதிரெறிக்
குமணிவாய்த்; தாடகக்குழைகிடந்தாடும்வடிகாதனுட னம்புலீயாட
வாவே, யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவா
[வே. (ரு)

மேவுதுங்கமயூரமுண்டுதின் வீரவெம்பகைகளையலாம்
வேரிதங்குதிரிகூடமுண்டுடமீதுடன்றனிதவழலாம்
பாவியென்றெருநமேபரொழிந்துசெய் பாதகங்களுமொழிபலாம்
பாணலங்கிரிவாகித்தங்கிய பாய்தடம்புனல்படியலாம்
மூவிரண்டுசரோருகங்களின் மூரல்கண்டுளமகிழலாம்
மோனமென்றுபதேசமுன்செயு மூலமந்திரமறியலாம்
ஆவினன்குடிமேவுகந்தனெ டாட வம்புலிவருகவே
யாழிலஞ்சியில்மேவுநாடின்றினி தாடவம்புலிவருகவே. (௬)

கோடகப்படவெழுங்கொய்புளைப்புரவிக் கொடிஞ்சித்தடந்தேரின்மேற், குலவிவலம்வருமொருபன் னிருபரிதிமண்டல கோடிகமெழுந்ததேபோற்; பாடலைக்குங்கதிர்க்கோமேதகத்திரள் பதித்துவயிரந்துலக்கி,பத்மராகக்கோடிகோடானகோடிநிரை படவழுந்திகொழுங்கான்; மாடெழுசுடர்க்கற்றைவயிரியத்தகடு வாரித்துவன்றிவிரவும், மரகதமணைத்துரகமணிகள்பதிதந்துபுய வரைமுகமொய்ப்பவலயவங்; தாடகக்குழைகடந்தாடுமவடிகாதனுட னம்புலியாடவாவே, யந்தண்மருதஞ்செறிபி லஞ்சிவடிவேலனுட னம்புலியாடவாவே. (எ)

குறமுயலகன்பிடித்தாட்டாது தீர்ப்பனுன் கொடியபகயநோய் தணிப்பன், கோளராப்பகையுமுன்குரவனிலிடந்தநல் குரவுமிரவுந் தவிர்ப்பன்;செறிபுனற்கடலிற்றடங்கேர்மிசைத்தோன்று சேட்டிளம்பருதிபோல, சித்தந்தழைக்குமற்றுணையுமொருதன்மையிற் றீராது செல்லவைப்பன்;புறவுமிப்படியுள்ளநன்மைகளெலாந்தரும் புன்மைகளெலாந்தவிர்க்கும், பொன்னடித்தாமரையளிக்குநலமொன்றன்று போந்தவர்க்கேந்திழைநலார்; அறுவர்முலையுண்டபால்மணமறுவாயனுட னம்புலியாடவாவே, அந்தண்மருதஞ்செறிபி லஞ்சிவடிவேலனுடனம்புலியாடவாவே. (அ)

செம்புவழியிட்டணையநீழுடைக்காழ்மந்தி சென்றெருக்காலுமறியாச், சேண்கிளர்மரம்பயிலருங்கோட்டினிடைவைத்த செந்தேனிறால்கிழித்து; வம்புவழிசாரலிலிதைப்புனங்காக்குமட மகளிருந்தமுதமுண்ண, வண்ணப்பசுந்தினையினன்னிலாக்கொழுங்கதிர் வானகிகொழித்து மருண்மாக; கொம்புவழிகுத்திடபாதநந்திடித்துக்

கொழுந்தேக் கிலைப்படுத்திக், குழையளவும்வாங்கிக்குழைக்குந்தடச்
சிலைக் குன்றவர் திருத்திவிடுநெட்;டம்புலழிதேனருவிபாயுமலை நாட
னுட னம்புலியாடவாவே,யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனு
ட னம்புலியாடவாவே. (௯)

பருவரைப்படர்சினைப்பாரிசாதப்போதும் பரினின்றுலாவுகட
வுள், பாகசாதனன்விழிகுறுந்துளியுறைத்துழி பாத்துநின்றிருவரறி
யா; வொருவரைப்பங்கிலுடையவள்பால்சுரந்தமுலை யுண்டசெங்க
னி வாய்மலர்ந், தோடவிடுதூதுவருரைக்குந்திருக்குறிப் புணராத
சூரபடலங்; கருவரையறுத்துத்திரும்பினோனெங்கோன் கடைக்கணி
க்குங் குறிப்புக், கண்டுபணிகேளாதவர்க்கேதுதஞ்சமெதிர் காணாக்
கடைக்கண்சிவ; தருவரைதுளங்கநின்றயில்வேலெறிந்தவனொ டம்
புலியாடவாவே,யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலி
யாடவாவே. (௧௦)

அம்புலிப்பருவ முற்றும்.

# சிற்றிற் பருவம்.

மருக்காற்புன்னைப்புதுநிழலெவெண் மணற்கால்மருங்குநிலவெ
ரிப்ப, மாடஞ்சமைத்துக்குடிபுகுந்து மணிக்காலிப்பியடுப்பேற்றிக்;
குருக்கால்செம்பொற்சிறுசுழகாற் கொழிக்குந்தளந்தேனுலைப்பெய்
து, குடவால்வளைவெண்டுழிசிபொங்கக் குழற்காலாம்பல்நெருப்ப
மைத்து; முருக்கால்வெல்லமுடியாவாய் முகிழ்த்துக்கவிழ்த்துக்கிடந்
தூதி, முகம்வேர்த்தனம்நீகுறும்பிழைத்தால் முற்றுந்தரமோமுக்கா
லுந்; திருக்கால்பிடித்துக்கும்பிட்டேஞ்சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௧)

அம்பொற்சிறுவீட்டணிகாண வன்னைவருவாள்பின்னையுமென்,
னுவியனையதோழியருண் டவரும்வருவாரன்னையரைக்; கும்பிட்டி
றைஞ்சித்தோழியரைக் கூடித்தழுவிக்கொண்டன்னை,கொணர்ந்தவரி
சையத்தனையுங் கைக்கொண்டெமதுகுலமனையின்; சம்பத்தவர்க்குக்
காட்டியுள்ளந் தழைக்கும்படிக்குவிருந்தளித்துத், தமியேங்களுமு
ண்டிளைப்பாறுந் தனையுஞ்சதிமேல்சதிமேயலுன்; செம்பொற்றிருத்

தாள்சென்னிவைத்தேத்தும் சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தேவையில
ஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௨)

கங்கைத்திருத்தாய்திருத்தனமுங் கவுரிகுழல்வாய்மொழித்தா
ய்தன், கதிர்பூண்முலையுங்கார்த்திகைத்தாய் கனகாசலப்பயோத
ரமுந்; தங்கக்குடம்போல்மணிக்குடம்போற் றாளக்குடம்போற்று
யாப்பால், ததும்பத்ததும்பப்பிதிரோடத் தாரோடையுந்திருவா
ரைஞான்; பொங்கச்செறித்தமணிநெகிழ்ந்து புலம்பப்புலம்பிற்சிறு
பண்டி, புலரப்புலரவிளையாடப் புகுந்தாய்பயந்தார்பொருப்பாரோ;
திங்கட்சடையான்கண்மணியே சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தே
வேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௩)

முந்திப்பிறந்தவிளங்களிற்று முகத்தெம்பெருமான்கணததினு
க்த, முன்னேயிருந்தேருடன்போந்து முதிராமுகிண்மென்முலையெம்
பாற்;புந்திக்களிப்பால்விளையாடப்புகுந்துபுழுதியாட்டயராப்,பொன்
னஞ்சிலம்பரடிமுடிபிற் புனைந்தேமழலைக்கிரங்கிவரந்; தந்தியபொழு
தெமமழுங்கடைந்தான் தளங்கொண்டிளங்கோமகனீயுந், தண்டைத
திருத்தாள்வணங்குமெம்பாற் றயவுபுரியுந்தன்மைத்தாற்; சிந்தித்திடி
லன்றென்றறியேஞ் சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தேவையிலஞ்
சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௪)

நச்சுமரந்தானேனும் நட்டமரங்காண் டொன்றுதொட்டு
நாங்களடிமைநீங்களெம்மை நடத்துந்தலைமைப்பெருமானாகாண்
வைச்சுமரந்தண்ணீர்வார்த்து வளர்ப்போர்குறைக்கநினைப்பாரோ
மற்றோர்குறைவந்துற்றாலு மாற்றிப்புரக்கவழக்கன்றோ
கச்சைமுனிந்துமுகங்கருத்துக் கனத்துச்சினத்துக்கடக்களிற்றின்
கதிர்வாண்மருப்பைமுனைமடக்கிக் கதிர்க்குங்கதிர்ப்பூண்முலைக்குறத்தி
செச்சைசெறிக்குந்திருமார்பா சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவையிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே (௫)

வேறு.

அறல்பாய்ந்திட்டமணலூடே யடியேங்கட்டுசிறுவீடே
குறைதீர்ந்திட்டபணியோடே குடிபூந்திட்டகுறைபாடோ
யிறைவாவிங்கச்சம்மதியாயீ யிடைபோந்தேற்றிவிடலாமோ
திறலோன்சித்ரசபைமேவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே
[illegible]சைமகள்மார்பா சிறியேஞ்சிற்றில்சிதையேலே.

கந்தரமுழக்கமுங்கந்தரத்திடைபுக்க கண்டீரவப்பெருமுழக்கு
ங், கதிரிளந்திங்களங்கண்ணியனைமுன்னிக் கடிந்தோரியற்றுமவேள்
வி; மந்தரமுழக்கமுஞ்சுனையாடுகன்னியர் வளங்கெழுமுழக்கங்களும்,
மடப்பிடிநடைச்சிறுகொடிச்சியர்குழாங்கூடி மன்றலங்குன்றமெதி
ர்கூஉஞ்; சுந்தரமுழக்கமும்வெறியாட்டுமுருகியந் துவைப்படுமுழக்கங்
களுந், தும்பிகைகைநீர்தூர்ந்துருத்தியென்றருவித் தடாகந் துதைந்தகு
ளிருஞ்; சிந்துரமுழக்கமுமுதிராததமிழ்வெற்ப சிறுபறைமுழக்கியரு
ளே, தென்னிலஞ்சிப்பதிப பன்னிருகைமேகமே சிறுபறைமுழக்கிய
ருளே. (௩)

சாவதுந்திரியாப்பிறப்பதுந்தொடராது கண்ணழிசுரந்தபெரு
மான், சயிலத்தடஞ்சாரல்புக்குநின்றேக்கறுஞ் சமயத்தில்வந்து
தோன்றி; யேவதுங்கொண்டுட்பு லப்புவதுநனிதீர்மி னென்னுங்குறி
ப்புமொழிதந், தேந்துங் தருந்தொடியரற்றவெற்றிப்பறை யெரிதன்
னிளிச்சூரனைக; காவுதாபலகோடியோடினுமொருப்பன் கருங்கழற்க
ாசுவிகசிக, கைவேலுமேகதினன்காண்பின்கனென்றுபலகடவுளர்பொ
ன்மலைமறைமெய்ப்ப; தேவதுந்து பிபொருபுறத்திணின்முழக்கநீ சிறு
பறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிப பன்னிருகைமேகமே
சிறுபறைமுழக்கியருளே. (௪)

வெங்கண்சிவந்துடல் துலுக்கிவயிறெக்கிநெடு வெடிவால்முறுக்கி
நோக்கி, விண்ணைநிமிர்ந்துவெருக்கொளவெகுண்டண்ட கோளமும்
வெடிபடவுதறிப; பகைமுகக்குமதக்களிறலறிவீழ்ந்துழப் பப்பாய்ந்
தடித்துடைத்துப, பருமத்தகமபிளந்தீர்ங்கோட்டுவெண்டரள பந்தி
சிந்திததெரிப்பப்; பொங்குதங்கடற்கு நதிபுழைப நிங்கைமடைப் புகர்
முகத்துமைமடுக்கோ, பொற்றையிற்சுற்றுங் துளிங்கங்குறிக்கொளப்
போந்துகடைவாய்தடவிவெவ்; சிங்கந்தியங்கும்வரைசெல்வமுதலா
ளியே சிறுபறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிப்பன்னிருகை
மேகமே சிறுபறைமுழக்கியருளே. (௫)

முறுகிக்கதிர்கருஞ்செருத்தற்பகட்டெருமை மோட்டுவெங்
கோட்டுநுதியால், முள்வேலிகோலிக்குறுங்கால்நறுங்குவளை முருகு
சிதறப்பெயர்த்துக்; குறுகிக்கரும்பங்கருத்தைக்கரித்துக் குகட்டிக்

குதட்டிமேய்ந்து, கொழுமலர்த்தேனூறவிரவிவருபுனலுண்டு குறு
நடைபயின்றுமறுகி; மறுகிற்புகுந்துபணைமருதநிழலிற்றூங்கி மாங்
கனிபடைப்பவாங்கி, வாங்கிச்சுழிப்புறத்தண்ணெனவெழுந்துதன்
மழக்கன்றினுக்கிரங்கிச்; சிறுகக்கனைத்துவருதென்னரிகனைடை சிறு
பறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிபன்னிருகைமேகமேசிறு
பறைமுழக்கியருளே.

கைத்தகலைவைத்தவிருப்புடனறுபர் கடைத்தலைதொறுமுழல்வோர்
கற்றசாரகலைவிலைசெய்புமற்றுக் கவித்துறைமிழிவெனவே
யிற்றலைப்பதப்பத்தைவழுத்துமெனக்கருளாபுரிதுனைநீ
பெய்த்தவருகுமிளைத்தவருகதுமிரக்கமதுடையவனீ
நகத்தலைசிதரந்திகத்தலைநிற்கும்நடைப்பிடிதருமகனீ
நச்சரவத்தினடிதத்தருள்பசைமுகிறகொருமருமகனீ
முத்தலையத்ரனளித்தருள்புத்திரன் முழக்குகசிறுபறையே
முகத்துமிககிரியிற்குமரப்பன முழக்குகசிறுபறையே. (௭)

அகத்தினில்நினைப்பவர்பிறப்பையுமிறப்பையு மகற்றிடுமருண்
மலையே, அகத்தியன்வழுத்திடவிலக்கணவிலக்கிய மமைத்தருள்குரு
பரனே; பகைக்கிரவுஞ்சமொடுங்கவெண்பனத்திடையருட்கதிர் பரமபரிய
படரொளியே, படைப்பவனைப்புடைத்தலைபுடைத்தலக்கினைக்கனி படை
த்திடுமிறையவனே; நிகழ்ந்தகியபடிகளிற் சுகத்தினிலெனதுதொழில்
நிரப்பியதிருமலனே, நினைப்பொருமைமறுப்பனி கறப்விகறப்புமறிறுத்
திடுநியதியுளாய்; முகிழ்த்தபுன்கைச்சிறுகுறக்கொடிபாபுருபவன்
முழக்குகசிறுபறையே, முகத்திரைத்தகற்குழலமொழிமகொருமழு
த்த முழக்குகசிறுபறையே. (௮)

இதயமணிமுத்தநிறைநாத்தளம்பொத்தளிசிலிடைபொருநிழுத்தி
பயில்வா, செறிநடல்முகட்டிலெழுநிலாகதாளிப்பிறைப்பிற்காட்சிதரு
ப்பரவையுமா; புதயகிரியத்தபனாங்கனமிகத்துயரு முப்பயப்பெற்
பின்மினைபோ, பொளிர்பணிலசக்கரநிலவொருப்புடைபெறிப்பவயி
லொருப்புடைபெறிப்பமலர்மேல்; மதலையெழுமசசுழிபிலெழுபவிப
டைபபவரு மரகதமணிக்குவடுபோல், வரியரவணைக்குளவிழிவளரு
மொருபாரைமுகில்மருமகனெனருத்திருமான்; நிதலைமுலைபிற்களப

மெழுகிடு திருக்கைகொடு சிறுபறைமுழக்கியருளே திரிகுடுமிவெற்பு
டையபகுழல்மொழி திருக்குமர சிறுபறைமுழக்கியருளே. (௯)

இடைச்சியர்புனைதுகிலெடுத்தொருதருவினி லிருப்பவன் மருமகனே, யிருட்டுறைபுழுமிளமுலைக்குமரியுமென விலக்கினில்வருபவனே; படைப்பவர்தொகுதிகள்படைப்பவனெனுமிறை பழிச்சியபழையவனே, பகுத்திடுபலகலைதொகுத்திடுநிலைபெறு பரப்ரமவொளியுருவே; புடைத்தெழுமதசலமுவட்டெழுகயமுக வொருத்தர்பின் வருபவனே, புருத்திரபசுபதியெனத்தொழுமறையவ ருளத்திலுமுறைபவனே; முடித்தலையிமையவர்செடித்தலமுரியவ முழக்குகசிறுபறையே, முடப்பவடியினின்முளைத்தவன் மழவிடை முழக்குகசிறுபறையே. (௧௦)

சிறுபறைப்பருவ முற்றும்.

---

## சிறுதேர்ப்பருவம்

வெண்டேருருட்டிவரும்வேதாளமிட்டவடி பாதாளமுட்டவிரவுற, வீரசக்ராயுதப்பகழியும்புட்டிலும் வெரிந்கொண்டெருத்தலைப்ப; மொண்டேருருட்டி வைத்தாலணையநவரத்ன முடிமுகடளாவிநிற்கு மரதண்டவேதண்டகோதண்டகணபணமுடியராச்சிறுநாணெரிந்; தொண்டேருருட்டிவருசேட்டிளம்பரிதிமதி யுபயசக்கரங்களாக வுபாணிடப்பரிபூட்டிமுப்புரங்களைவிகூட் டுண்ணவான்றரணிவட்டத் திண்டேருருட்டுமொருசேவகன்றிருமகலே சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லெஞ்சிநகர் வந்தகந்தசுவாமி சிறுதேருருட்டியருளே.

மன்றற்கருங்குழற்செய்பவாய்வெண்ணகை வளர்க்குங்கலாபமயில்போல், மடப்பிடி நடைச்சியர்கொடிப்படையெடுப்பநெடு வான்மதிக்குடைகளிபப; அன்றிற்கருங்காகளங்கரங்காநிறப வதிர்கடல்முமுரசமார்ப்ப, வலைமலைகையுந்துயில்கொளுங்கங்குற்கடாயானை யழிமதக்கலுழிகொப்பக; குன்றிற்பணைத்தகுவவுத்தடந்தோண்மதன் கோலஞ்சமைந்துகன்னற், கோதண்டமேந்திகுறும்பெறிசனற்கிளிக்கொய்யுளைபபுரவிபூட்டுந்; தென்றற்றடந்தேருருட்டும்ப ரங்கிரிய சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லெஞ்சிநகர் வந்தகந்தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௨)

துகிரகிக்; கரைமிருகமதகலவை தன்றுசிவமதுகங்கை செண்பகக்காடுபொங்கு, கடல்கடந்தருவித்தடாகங்கடந்திரு கரைக்குறும் பெரியவோதி, திரைக்குந்திரைப்புனற்சித்ராநதிக்கிறைவ சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௬)

கம்பவளவாரணக்கடல்வந்திரங்கக் கறங்குந்திரைக்கானல்வாய்க் கரியசிறுமுட்கவிழ்படகநிலைமுடக்கேதகைக்காவின்விழுதுபற்றி; வெம்பவிழும்வெண்மடற்றலைமிசைபடர்ந்தோடி மணற்குன்றுதனனையேறி, மதுமலர்ப்புன்னைக்கருங்கோடுலாயதன் மருங்கோடொருங்கோடியே; தம்பவளமென்முலைக்கடைசியர்குழாம்பயில் கொழும்பணைக்கதலிநகைக், கொலைக்குருந்தேறி முல்லையொடுபின்னிக் குறிஞ்சிநகவட்டினூபோப்ச; செம்பவளவல்லிபடர்தென்குமரிவளநாட சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௭)

மகவானபனைக்கிறைவி மகராசிபெற்றமகள் மயில்போலிருக்க வயலைபோய், மகரிவொந்திமிகுமுகநிடாகக்குமலை விளைகாவலுகருவருவாள; முகலாளித்தகளமுகிலையூரலுக்கருகி முனைவேலெடுத்துவருவாய், முருகாமந்தழுழவன்மருகாதிந்தகனியில் முதல்வாவொருகதிபுதல்வா; உகாமுயற்பிறையை முடிமேனமுடிகதமெமையுடையானவலசெவியிலே, புறையாவுரைப்பரியவொருதாரகப்பிரம வுபதேசமவைத்தகுருவே; சிகராசலகதிலுயர்திரிகூடவெற்பனொரு சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௮)

பணிகொண்டதாரைகன்மணிகதேநமர்ச்சனன் பாழிக்கடங்கேநமோ, பருவமுறைசெல்வகிலையொருபெருஞ்சேடனேபருச்சுடிகைநெற்றிமுற்றக; கணிகொண்டகல்மிலாவைரதமஞ்ஞைகரமே கலாபாரமணிகெநகந்தே, ரனமேறகடக்குநிலைன்றுதைதகைசெய்வ தாழியொன்றுதவன்றோ; கணிகொண்டவையமுமகாண்பதிறகங்குலிற் காமன்கரங்குபொற்றோர், காற்றோலாதில்லைமேற்றேருறைப்பதென் கவனவாம்புரவிபினமேற்; திணிகொண்டசெல்வவுன்றோலாதில்லை

யாற் சிறுதேருருட்டியருளே, செந்தமிழ்வி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௯)

மருள்வந்தபிறவிக்கடற்படிந்துள்ளாசை மகரம்புடைத்தடிப்ப, மாள்கின்றசிற்றுயிர்க்குற்றிடத்துதவிசெய வருமரக்கலமேமுகந்; தருள்வந்தமெய்யன்பரார்வந்தழைக்கின்ற வகைநெக்குநெக்குருகியே, ஞுலுமுகனைவினைகெதிரிட்டுவெட்டெரியு மானந்தமாப்பெருந்தே; பொருள்வந்தகடவுட்பழம்பாடலேந்துமொரு பொன்மாளிகைக்குள் வைத்த, புனைமணிவிளக்கமேஅனுபூதிகந்துபர போகம்விளைகின்ற விளைவே; தெருள்வந்தமணிமன்றமுடையவன்செல்வமே சிறுதேருருட்டியருளே, செந்தமிழ்வி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப்பருவ முற்றும்.

# வஞ்சித்திருப்புகழ்.



நம்பனரிகின்றநெடுங் குழல்கண்டு தொடர்ந்தெதிர்கின்ற விழி வேலாய், சுழன்றுசுழன்றுதுவண்டுதுவண்டு சுருண்டுசுருண்டு மடவார்தோள்; விரும்பிவரம்புகடந்துநடந்து மெலிந்துதளர்ந்து தவியாதே, விளங்குகடம்புபுனைந்தனிதண்டை விதங்கொள்சதங்கை யடிதாராய்; பொருநதலர்மைந்தருராங்கெடவன்று பொலன்கிரிபொன்றை யெறிவோனே, புகழ்ந்துபுகழ்ந்துவணங்குதுணைக்கொள் புரந்தரன்வஞ்சி மணவாளா; இரும்புனமங்கைநெருங்குதனப்பணை யிரண்டுமணைந்த புயவேளே, யிலஞ்சியமென்றுயிரின்றோள்விஞ்ச விலஞ்சியமர்ந்தபெருமாளே.

கொந்தளமேவாலைகுலுங்கிட-வாழிரங்குடலைதிகழ்ந்திட- மேகக் கொண்டைகளமாலை சரிந்திட-வாசப்பனிநீர்சேர், கொங்கைகள்மார்பு குழைந்திடப்-பாழிக் கண்கயல்மேனி சிவந்திட-கோவைக் கொஞ்சியவாயிரசங்கொடு-மோகக் கடலூடே; சந்திரவாரமழிந்திட-நூலிற் பங்கிடைபாடை துவண்டிட-நேசந் தந்திடமாலுந் தும்பியும்-சூழ்ந்தற் றிடுபோதுன், சந்திரமேனி முகங்களுநீலர்

சங்க்ரகிமேற்கொடமர்ந்திடு-பாதச் சந்திரவாருசகங்கையு-மேசற் ற
ருள்வாயே; சுந்தரர்பாடலுகந்திரு-தாளைக் கொண்டுநற்றாதுநடந்தவ
ராகத் தொங்கமொடாடியிருந்தவள்-ஞானச் சிவகாமி, தொண்டர்க
ளாகமமர்ந்தவள்-நீலச் சங்கரிமோகசவுந்தரி-கோலச் சுந்தரிகாளி
பயந்தரு-ளானைக் கிளையோனே; இந்திரதேவர்பயங்கெட-சூரைச்
சிந்திடவேல்கொடெறிந்துநற் - றேகைக் கின்புற மேவியிருந்திடும்
வேதப் பொருளோனே, எண்புனமேவியிருந்தவள்-மோகப் பெண்டி
ருவானைமணந்திய- லார்செற் கிஞ்சியளாவுமிலஞ்சியி - சாகப் பெரு
மாளே. (௨)

கரங்கமலமின தரம்பவளவளை களப்பகழிவிழி-மொழிபாகு
கரும்புமுதுமுலை குரும்பைதருருப கரும்பிடியினடை-யெயின்மா
தோ; டரங்கநககன தனங்குதலையிசை யலங்கனியமுற-மயில்மீதே,
யமர்ந்துபவனிவர கனிந்துவருகொடி பவந்தகனகல-வருவாயே; தர
ங்கமுதியம கரம்பொருததிரை சலந்திநதிதம-ரெனவான, தலம்பர
வைறை புலம்பவருசிற சுகங்கையடிதொழு-பவராழி; யிரங்குகொ
லைதிரு வரங்கர்மருகப னிரண்டுபுயமலைக்-கிழவோனே, யிலங்குதரத
மிழ் விளங்குவநதிரு விலஞ்சிமருவிய-பெருமாளே. (௩)

மாலையிலேந்து மாலையில்வந்து மாலைபொருங்கன்-மலராலும்
வாடையடர்ந்து வாடையெழுந்து வாடைசெறிந்த-வனலாலும
சோலைமிகுந்து சாலைதொறுந்து சோமனவஞ்சி-தளராமுன்
கூடிப்புயபங் கீடியவனை புகூரவுமின்று-வரமேவலும
காலனசிங்க மேலதுகொண்டு காதிநடந்த-குமரேசா
காணமடந்தை யானைமடந்தை காதலுகந்த-முருகோனே
சோலைநிறைந்து சாலிநிறைந்து சூழிலஞ்சி-யுறைவோனே
சூரியனஞ்ச வாரியில்வந்து சூரனைவென்ற-பெருமாளே. (௪)

மைந்தரினிய தந்தைமனைவி மண்டிபலரி-மதிமாய
வஞ்சவிழிகள் விஞ்சமருவி வன்மைகபடதனி-லுறுபாசம்
தந்தவெளி லுந்தியவியு நகுதலைய-வுயிர்போமுன்
தமையமுனது செம்பொனடிக டந்துகருணை-புரிவாயே
மந்திசுடிகொ ளந்தவரையில் மங்கைமருவு-மணவாளா
மண்டுமசுர் தண்டமுடைய வென்றிமயிலில்-வருவோனே
இந்துசடிலர் பங்கில்வளரு மிந்துமுதல-கருசேயே
இஞ்சியதனில் மஞ்சுதவழி லஞ்சிமருவு-பெருமாளே. (௫)

# திருக்குற்றாலத்தலபுராணத்தில்

## அகத்தியராற் கூறப்பெற்றஸ்தோத்திரம்.

வேலைநெடுங்கடல்குடித்துவீரநெடுங்குன்றிடித்தவேலினனே
காலைவருசெங்கதிரோமாலைமதியேகயிலைக்கடவுள்வாழ்வே
வாலசவுந்தரிகௌரிதிருவயிறுவாய்த்தமுழுமணியேபெண்பால்
பாலையுந்தேனையும்மதுரப்பாகையும்போல்மறைப்பொருளைப்பாலித்தானே.

விஞ்சையர்க்குவிஞ்சைபொழிமேகமேயவுணவிருள்விடியக்கூவுஞ், செஞ்சேவற்கொடியுயர்த்தசேவகனேதெய்வமடப்பிடியோடாடுங், குஞ்சரமேவள்ளிபடர்குன்றமேசூரர்பெருங்குலத்தைமாய்ப்ப, வஞ்சமுகமமையாதென்றாறுமுகமாகவெழுந்தருளினனே. (௨)

செங்கைவேலுளவாபோற்றிதேவர்தங்கலைவாபோற்றி
கங்கையாள்புதல்வாபோற்றிகார்த்திகைசிறுவாபோற்றி
பங்கயத்தடஞ்சூழ்செம்பொற்பணிமதிலிலஞ்சிமூதூர்க்
கொங்கலர்கடப்பமாலைக்குமரதேசிகனேபோற்றி. (௩)

எந்தாய்போற்றிபரங்கிரியிலிறைவாபோற்றிசெந்தூர்வாழ்
செந்தாபோற்றிபழனிமலைத்தேவேபோற்றிதேவேசன்
மைந்தாபோற்றியோகத்தில்வாழ்வேபோற்றிசோலைமலைக்
கந்தாபோற்றிதிருவிலஞ்சிக்கடவுள்போற்றியெனத்தொழுதான். (௪)

வேல்வாழிமயில்வாழிசேவல்வாழிவேறுமுளபடைவாழிவிளங்குதண்டைக, கால்வாழியருள்பொழியும்விழிகள்வாழிகனிந்துலவுமீராறுகரங்கள்வாழி, மால்வாழிவாழியெனப்பணிந்துவாழ்த்துமலைமாதுதருமுருகன்மகிழ்ந்தவாறு, பால்வாழியெனையாளுங்கருணைவாழிபங்கிருந்தமங்கையர்தம்பதங்கள்வாழி. (௫)



# புத்தகவிளம்பரம்.





உ

குமரன் துணை.

# விவேகபாநு அச்சாபீஸ்.

## நிர். 251. வடக்காவணிமூலவீதி.

## மதுரை



### அச்சு வேலைகள்.

தமிழிலும், இங்கிலீஷிலும், பலவித மைகளாலும், கிலீட்டுகளாலும், திருமணப் பத்திரிகைகள் பட்டா முச்சலிக்கா ரசீது உண்டியல் வக்காலத்து முதலிய கோர்ட்டுச் சம்பந்தமான சகல வேலைகளும், புத்தகங்களும், வியாபார சம்பந்தமான சகல வேலைகளும் கணக்குப் புத்தகங்கள் வட்டிச்சிட்டை பாரங்கள் லெட்டர் பாரங்கள் பழைய நூல்கள் தற்காலவித்துவான்கள் பாடிய புதிய நூல்கள் இலக்கணப் பிழைகளில்லாமல் திருத்தமாயும் பார்டர்களாலும் பாண்டுகளாலும் ஒவ்வொருவர் மனதையுங் கிரகிக்கும்படி அலங்கரித்து சீக்கிரமாகவும் சாக்கிரதையாகவும் செய்து கொடுக்கப்படும்.

### பயிண்டு வேலைகள்.

கட்டிங்மிஷின், ரூலிங்மிஷின், நம்பரிங்மிஷின், ஸ்டிச்சிங்மிஷின், பெர்பரேஷன்மிஷின், ஷட மிஷின் முதலிய இயந்திரங்கள் எங்களிடமிருப்பதால் கிலீட்டு முதலிய அலங்காரத்துடன் நவவிதமாய் பைண்டுகளும் துரைத்தனத்தார்க்கு சீக்கிரம் தயார்செய்து கொடுக்கப்படும்.

### விவேகபாநு.

**ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை**

நூலாராய்ச்சிகள், சிலருடைய சரித்திரச்சுருக்கங்கள், பலவகைக் கவிகளின் குறிப்புக்கள், மதசம்பந்தமான விஷயங்கள், பதார்த்தகுணக் குறிப்புக்கள், விநோதசெய்திகளின் தொகுதிகள் முதலியவைகளில் ஒவ்வொன்றும் எழுதப்பெற்று சிலவருடங்களாக வெளிவருகின்றது.

வருஷசந்தா ரூ. இரண்டு

மு. ரா. கந்தசாமிக்கவிராயர்
விவேகபாநுப்பத்திராதிபர்
புரொப்ரைட்டர்.

தமிழ்வேதபாடசாலை உபாத்தியாய
ஆ. முத்துசாமிபிள்ளை
மானேஜர்



உ

காமாட்சி அம்மை துணை.

# காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்

ஆக்கியோன:

**காஞ்சி. இரா. குப்புஸ்வாமி, B. A.**

இஃது

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள், ஜகத்குரு

**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமி**

மகாசந்நிதானம் அவர்களால் அருளப்பட்ட

**ஸ்ரீமுகம்**

அணியப்பெற்று,

திருமதி. ராஜேஸ்வரி அம்மையால்,



மன்னார்குடி ராஜேஸ்வரி அச்சகத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

உ

காமாட்சி அம்மை துணை.

# காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்

**பதிகம்,**

தோற்றுவாய், அரும்பதவுரை, பொருள்,

காமாட்சி அம்மை திருஉருவப்படம்,

அடங்கியது,


அருட்புலவர்

**காஞ்சி. இரா. குப்புஸ்வாமி B. A., அவர்களால்**

ஆக்கப்பெற்று,



ஸ்ரீமதி ராஜேஸ்வரி அம்மையால்

பதிப்பிக்கப்பெற்றது.

இப்பதிப்பின் விற்றுமுதல் தொகை முழுதும்
காஞ்சி பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில்
ஏற்படுத்தப்பெறும்
உபகாரப் புத்தக நிதிக்காக
ஒதுக்கப்பட்டது.

ராஜேஸ்வரி அச்சகம், மன்னார்குடி.

**21—10—1959.**







பிரதி விலை,
ரூபா. **1.**



காஞ்சி காமாட்சி அம்மை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு

ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் சந்நிதானம் அவர்களால்

அருளப்பட்ட ஸ்ரீமுகம்

அணிந்துரை.

**மன்னார்குடி District Munsif தமிழன்பர் சைவத் திருவாளர்**
**உயர்திரு. M. சண்முக சுப்ரமண்யம், B. A., B. L.,**
**எழுதி உதவியது.**

பக்தியால் திளைப்பது நம்நாடு. நமது முன்னோர்கள் ஆண்டவனை நாயகனாகவும், அம்மையப்பனாகவும், நண்பனாகவும் பாவித்து பரவினர். தான் வழிபடு கடவுளைக் குழந்தையாகக் கண்டு பிள்ளைப் பிராயத்தைப பத்துப் பருவங்களாகப் பிரித்து அவ்வப் பருவங்களுக்கேற்ற செயல்களைப் பாடுதல் "பிள்ளைத் தமிழ்" எனப்படும். "தமிழ்" என்றால் இனிமை என்பது பொருள். தமிழுடன் பக்தியும் இசையும் கலந்துவிட்டால் அது தெவிட்டாத அமுதமாகி விடுகிறது. அதை அனுபவிப்பதே நமது பிறவிப்பயன் என்றால் அது மிகையாகாது

**"காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்"** என்ற இந்நூலிலே உலக மாதாவாகிய **காமாட்சி அம்மையை** பத்துப் பருவங்களிலும் நம் அகக் கண்முன் என்றும் நிலைபெற நிறுத்தி இருக்கிறார் இந்நூல் ஆசிரியர் **காஞ்சி. இரா. குப்புஸ்வாமி பிள்ளை B. A**, அவர்கள். மன்னார்குடி உதவி தாசில்தாராகப் பொறுப்புள்ள பதவியில் இருக்கும் இவர்களது தமிழ் ஞானமும் பகதி பரவசமும் ஒவ்வொரு பாடலிலும் வெளிப்படுகின்றன. கவி பாடுவது, அதிலும் பக்திப் பாடல்கள் இயற்றுவது என்றால் அதற்குப் புலமையோடு அருளும் பெற்றிருக்க வேண்டும். அந்த முறையில் ஆசிரியர் அருட் புலவராக விளங்குகிறார். பக்திக் கடலிலே மூழ்கி எடுத்த நன் முத்துக்களாக மிளிர்கின்றன பாடல்கள்.

"பன்னுமறை சொன்னதமிழ் அன்னைவரு தென்பொதிகை
பண்டைநாள் விட்ட கன்று
பாண்டியர சோடுதமிழ் ஆண்டஅவை யேநிறுவு
பாய்கயற் கண்ணியாகி

நன்குமலர் கந்தமிகு மென்னுமினி தாயதமிழ்
நாறுதீங் கண்ணியாக்கி
நாற்றிசையின் சாற்றுமொழி நாற்றமெழ வேத்துவணம்
நண்ணியித் தொண்டை எய்தி"

என்று செங்கீரைப் பருவத்திலே வரும் 6-வது பாடலிலே தெள்ளுதமிழ் துள்ளி விளையாடுவதுடன் ஆசிரியரின் தமிழ்ப்பற்றும் நன்கு புலப்படுகிறது.

"வானே வெளியி லியங்குகிற
வளியே நிலனே வெண்மதியே
வயங்கும் பரிதி முதலாய
வகைசே ருடுக்க ளின்றொகையே

ஆனே முதலாம் பல்லுயிர்க
ளனைத்து மாய தோருயிரே
ஐம்பூ தங்க ளென்பவற்றுள்
அணுவுற் றிருக்கும் நுண்பொருளே"

என்று வரும் தாலப் பருவ பாடலிலே, அண்டங்களெல்லாம் தன்னுள் ளடக்கி அணுவிற்கு மணுவாக இயங்கும் பராசக்தியின் தன்மையை விளக்கிக் கூறுகிறார் ஆசிரியர்.

இவ்வாறு அருமையான பாடல்கள் பல உள்ளன இந்நூலிலே. பாடல்களுக்கு அரும்பத உரையும் பொழிப்புரையும் ஆசிரியரே எழுதி யிருப்பது தனிச்சிறப்பு.

பக்தி மணங் கமழும் இப்பாடல்களைப் படித்து, இன்புற்று அம்மையின் அருளைப் பெற்றுய்வோமாக!

மன்னார்குடி.
30—5—1959.

**M. சண்முக சுப்ரமண்யம்,**



**அணிந்துரை. 2.**

**அண்ணாமலை நகர Annamalai University**
**தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் வித்வான்**
**உயர்திருவாளர் G. சுப்பிரமணிய பிள்ளை, M. A., B. L.,**
**ஆக்கி யுதவியது.**

**திரு. காஞ்சி. இரா. குப்புஸ்வாமி பிள்ளை** அவர்களைக் கருவிலே திருவுடைய ஒரு கவிஞர் பெருமகனார் என்று சொன்னால் அது மிகையாகாது. அவர்கள் ஒரு பொறுப்புவாய்ந்த வேலையில் அமர்ந் திருப்பதோடு அமையாமல் தமிழுக்கும் சைவத்திற்கும் பெருந் தொண்டு ஆற்றிவருகிறார்கள்.

கச்சியம்பதியிலுள்ள **காமாட்சி அம்மை** உலகெலாம் படி யளக்கும் உயர் தெய்வம். அவள் அவர்களுடைய குலதெய்வம். அவ்வம்மையின்மேல் அவர்கள் இயற்றியுள்ள **பிள்ளைத்தமிழ்** கற்றோர்க் கிதயம் களிக்கும் கவின் பெற்று விளங்குகிறது. பாடல் சான்ற சங்கத் தமிழ் போன்று பிள்ளையவர்களின் பாடலும் பரிமளிக் கிறது. வாரானைப் பருவத்தைப் படிக்கும் பொழுது அம்பிகை நம்முன்னே உண்மையாக ஓடிவருவது போன்ற உணர்ச்சி உண்டா கிறது. இணைத்தல், வேறுபடுத்தல், அளித்தல், ஒறுத்தல், என்னும் நான்கு முறைகளையும் கையாண்டு அவர்கள் அம்புலிப்பருவத்தை அழகுற வமைத்துப் பாடியுள்ளார்கள்.

நூலாசிரியரே உரையாசிரியராகவும் அமைவது மிகவும் அருமை. அவர்கள் அளித்துள்ள பேருரை அந்நூலை நன்கு கற்றற்கு மிக உதவியாக இருக்கிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் இந்நூலில் சிறப்பிக்கப் பெற்றுள்ளன. தமிழ்மக்கள் இந்நூலைப் படித்துக் காமாட்சி அம்மையின் கருணைக்குப் பாத்திர மாவார்களாக!

Annamalai University,<br>Annamalai Nagar.

**G. சுப்பிரமணிய பிள்ளை.**<br>**3-6-1959.**

முதற் பதிப்பு, 1000 பிரதிகள்.

# பதிப்புரை

காஞ்சி காமாட்சி அம்மை அகில உலகங்களையும் ஈன்றளிக்குந் தாயாக விளங்குகிறார்கள். இவ்வம்மையின்மேல் **"பிள்ளைத்தமிழ்"** என்னும் பிரபந்தத்தை அருட்புலவர் **காஞ்சி இரா. குப்புஸ்வாமி பிள்ளை, B. A.,** அவர்கள் ஆக்கியுள்ளார்கள். பராசக்தியைச் சதா காலமும் மனனம் செய்யும் அவர்களின் பக்தி யுள்ளத்தில் உருவாகியது இக்காவிய நூல். ஆதலின் இதை அச்சிட்டு வெளியிடுவதை அடியேனின் முக்கிய கடமையாக மேற்கொண்டேன்.

இந்நூல் வந்த வரலாறு, நூல் ஆசிரியரே எழுதி இப்புத்தகத்திற் சேர்த்துள்ள தோற்றுவாயில் விவரிக்கப்பெற்றுள்ளது.

புதுமை, புரட்சி, விஞ்ஞானம், அணுசக்தி இத்தகையன மக்கள் மனதை இக்காலத்தில் கவருகையில் புராணத் தொடர்புடைய இந் நூல் வெளியீடு புதுமையிற் புதுமையாகத் தோன்றலாம்.

அணுவின் சக்தியை யாவரும் உணர்ந்த தாகையால் அணுவிற்கும் அணுவாக உள்ள அம்மையின் சக்திவன்மை எத்தன்மைத்து என்று உய்த்துணரத்தக்கது. அணுசக்தி பல நாட்டு மக்களிடையே நவீன யுத்த தளவாடத் தயாரிப்புக்கும், போட்டிக்கும் சாதனமாகப் பயன்படுவதுபோல் அல்லாமல் பராசக்தியின் சக்தி உலக மக்களை ஒன்றுபடுத்தி, உய்விக்கவல்லது. தெய்வ சக்தி உலகெங்கும் ஒன்றேயாகையால் பராசக்தியை உலகுக்கொன்றே யாய தெய்வம என ஏற்கவும், போற்றவும் ஐயமும் உண்டோ'

அத்தகைய சக்தியே காஞ்சியில் உருக்கொண்டு காமாட்சி அம்மையாக எழுந்தருளி யுள்ளார்கள். இக் காமாட்சி யம்மையின் மேல் ஆக்கப் பெற்றுள்ள **இப் பிள்ளைத் தமிழை** தமிழுலகம் ஏற்கு மாறும் இதைப் பயிலும் அன்பர்கள் எல்லா நன்மைகளையும் எய்து மாறும் அம்மை அருள் புரிவார்களாக!

இப் பதிப்பிற் காணக்கூடிய பிழைகளை அன்பர்கள் பொறுத்து அடுத்த பதிப்பிற் திருத்தி வெளியிடுவதற்கு உதவ வேண்டுகிறேன்.

இப்புத்தகத்தை பக்தி சிரத்தையுடன் அச்சிட்டுதவிய ராஜேஸ்வரி அச்சகத்தாருக்கு அடியேனின் நன்றி உரித்தாயது.

இவ்வெளியீட்டுக்குக் காமாட்சி அம்மையின் அருளும், பெரியோர்களின் அநுக்கிரகமும் அடியேனுக்கு உற்ற துணையாக இருந்தது அடியேன் செய்த புண்ணியமே. இப்பணிக்கு உதவிய யாவர்க்கும் அடியேனின் இதயங் கலந்த நன்றி.

செம்மை யளிக்குந் திருவளிக்குங் காமாட்சி
அம்மை கடைக்க ணருள்.

மன்னார்குடி,
21-10-59.

இங்ஙனம்,
ராஜேஸ்வரி.

உ

காமாட்சி அம்மை துணை.

# காஞ்சி காமாட்சி அம்மை பதிகம்.



உந்திக்கு ளுலகனைத்து முயிர்த்தளித்த வுன்றன்னைப்
புந்திக்கு ளிருத்துதற்குப் போதுமோ போதமர்ந்தார்
வந்திக்கு மரியவளே வடிவுடைகா மாட்சியுனைச்
சிந்திக்கு மடியேற்குத் திருவளிக்குந் திருவுடையோய்! 1

மாவோடு மலர்க்கொன்றை வன்னிகணை யைம்போதின்
காவோடு களிக்கச்சிக் காமாட்சி யம்மையுனை
நாவோடு புகழ்ந்தறியேன் நவின்றுபூ சனைபுரியும்
பூவோடு னடிபோற்றப் புகலளித்தற் கெய்தாயோ! 2

இருளென்னச் சூழ்மாய விருவினைக்குட் கிடந்தரிய
பொருளென்னப் பற்றுதற்குப் புல்லறிவு மில்லாதான்
உருளென்னப் பிறவிதொறு முழல்கின்ற அடியேற்கின்
றருளென்ன வருளினையே அம்மைகா மாட்சியுமை! 3

வேதத்தின் முன்னாய் விஞ்ஞைக்கு மரிதாய்
பூதத்தின் உண்ணின்றாய் போக்குவர வேயிகந்தாய்
நாதத்தின் வித்தாய் நங்கைகா மாட்சிநின்னோர்
பாதத்தின் சிறுவிரலைப் பரந்தவக லிடங்கொளுமோ 4

பண்ணுற்ற வின்மொழியாய் பாலுற்ற வெண்ணகையாய்
எண்ணுற்ற எண்ணமெலா மீடேற்ற வல்லவியே
விண்ணுற்ற எவ்வெவர்க்கும் மேலாய தேவியுனைக்
கண்ணுற்ற வர்க்கினிய காஞ்சிகா மாட்சியுமை! 5

அழுந்தோறும் மகற்கன்னை யகமகிழ்ந்துச் செம்பரிதி
எழுந்தோறும் மலர்கஞ்ச மெனவுளத்தோ டுட்டுவள்போல்
விழுந்தோறும் நின்னடியில் விருப்போடு மெடுத்தணைத்துத்
தொழுந்தோறுங் காத்தியுயிர் தொழுங்காம நாட்டத்தோய்! 6

மதியருளும் மதியேயோ வழிபுகட்டும் ஒளியேயோ
கதியருளுங் கதியேயோ கடவுட்கா மாட்சியுயர்
நிதியருளும் நிதியேயோ நினைத்தடியேன் புகழ்ந்துரையுந்
துதியருளும் படிவேண்டின் துதித்திடுமா றருளுதியே! 7

அரவினொ ராழியணி அம்மையுல கெங்கினுமுன்
உரவினொ டுயிரளிப்பை யொருவனெனக் கொளிப்பமெனக்
கரவினொ ருளங்கொள்ளின் கறைகொளுமுன் புகழுன்னைப்
பரவினொ ரவர்கட்குப் பரிந்தருள்கா மாட்சியுமை! 8

தூற்றுவரா யினுமுன்னைத் தொழுதிலரா யினுமொருவர்
தேற்றுவரா ரும்மிலராஞ் சிறியவர்தந் துயர்கடிந்துச்
சேற்றுவரா லுருவிழியோய் சிறுமையெலாந் தவிர்நின்னைப்
போற்றுவரா லருளுமைநீ புகழ்காம கோட்டத்தோய்! 9

அம்மாவோ யாங்களுயிர்க் காதரமே யென்றென்று
விம்மாவோ விட்டழைத்தல் விண்கிழிக்கு மண்மையுளாய்
சும்மாவோ நீயிருப்பை சுந்தரனே கம்பனொடும்
பொம்மாவோ லக்கமமர் போதுசெவி கேளாதோ! 10

செம்பிட்ட முலைமுழுதுந் திமிர்குங்கு மந்தோய
வம்பிட்ட சிலைவிழியி னருட்பொழியுங் காமாட்சி
எம்பிட்ட முதையுண்டா னிடத்தொருபா லிருந்தோளைக்
கும்பிட்ட அடியேங்கட் குலமுழுது மளிப்பவளே! 11

அம்மை மலரடி வாழ்க!

உ

காமாட்சி அம்மை துணை.

# காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்.

## தோற்றுவாய்.

*ஆத்தாளே வாவென் றழைப்பதன்முன் சேயேனைக்*
*காத்தாயே கச்சியமர் காமாட்சி—எத்தேனை*
*அன்பால் அருகிருத்தி ஆரமுத மூட்டவருள்*
*உன்பால் சுரப்பாய் உவந்து.*

**காஞ்சிமாநகர்**, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்றும் பஞ்சபூதத் தலங்களுள் முதன்மையான பிருதிவி தலமாகவும், முத்தி தரும் ஏழு தலங்களாகிய அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை இவற்றுள் முதன்மையாம் காஞ்சி நகர் என்ற பெயர் பெற்றதும், நகரங்களுள் சிறந்தது காஞ்சி, "நகரேஷு காஞ்சி", என்ற புகழ் படைத்ததும் ஆகும்.

இந்நகருக்கு 1. காஞ்சிபுரி, 2. பிரளயசித்து, 3. சிவபுரம், விண்டுமாபுரம், 5. திரிமூர்த்தி வாசம், 6 பிரமபுரம், 7. காம பீடம், 8. தபோவனம, 9, சகற்சாரம், 10. சகலசித்தி, 11. கன்னி காப்பு, 12. துண்டீபுரம், 13 தண்டகபுரம். என்னுந் திருநாமங்கள் உண்டு. இதைத் திருக்கச்சி, துவாத சாந்தா தீந்முத்தி க்ஷேத்திரம் ஸ்ரீபுரம், காமகோட்டம் என்றும் அழைப்பர்.

இந்நூலில் காஞ்சிமாநகரின் பெயரைப் "புரம்" என்று சிறப்பாக ஆளப்பெற்றுள்ளது.

சமய குரவர் நால்வராலும் பாடப்பெற்றதும் சுந்தரர் கண் பெற்ற சிறப்பு வாய்ந்ததும் கச்சியம்பதி. திருக்குறளுக்குப் பேருரை எழுதிய பரிமேலழகரும், கந்த புராணம் பாடிய கச்சியப்பரும் 63 நாயன்மார்களுள், திருக்குறிப்புத் தொண்டரும், ஐயடிகள் காடவர் கோனும் திருவவதாரம் செய்த புண்ணிய நகரம் இதுவே.

காஞ்சிபுரம் பதினெண்ணாயிரம் கோயில்கள் கொண்டது என்பதாக ஆன்றோர் கூறுவர். "மங்களா சாசனம்" பெற்ற 108 வைணவத் திருப்பதிகளுள் 18,ம் முக்கியமான 1008 சிவத்தலங்களுள் 108,ம் காஞ்சி மண்டலத்தில் அமைந்துள்ளன.

இவ்வெல்லா தேவாலயங்களுக்கும் கேந்திரமாக அமைந்துள்ளது **காமாட்சி அம்மை கோயில்.**

சிவபிரானுக்குப் பஞ்ச பூதத் தலங்கள் அமைந்துள்ளனபோல் அம்பிகைக்கு, 1. அயோத்தியில் பிருதிவி பீடமும், 2. வடமதுரையில் அப்பு பீடமும், 3. மாயாபுரியில் தேயு பீடமு 4. காசியில் வாயு பீடமும், 5. காஞ்சிமா நகரமாகிய இந்த [illegible]

ஆகாச பீடமும் அமைந்திருக்கின்றது. ஆகவே காஞ்சி காமகோட்டம் **பிலாகாச** தலமாக விளங்குகிறது. இந்த பிலாகாசமே அம்மையின் திரு உருவமாக வழிபடப்பெற்று வருகிறது.

காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி, ஆரூர் கமலாட்சி, நாகை நீலாட்சி, என்ற பஞ்ச மூர்த்தங்களில தனிக் கோயில் கொண்டு அமர்ந்த திருக்கோலத்துடன் வீற்றிருப்பது காஞ்சி காமாட்சி அம்மையே.

காஞ்சி மண்டலத்தின் எல்லை வடக்கே திருப்பதியிலுள்ள சுவாமி புஷ்கரணியும், கிழக்கே மகாபலிபுர சமுத்திரமும், தெற்கே தென்பெண்ணை நதியும், மேற்கே விரிஞ்சீபுரத்துக்கு மேற்காக உள்ள பாலாற்றை அடுத்துள்ள "சிலாகிருதம" என்ற மடுவுமாம் என்ப இதற்குட்பட்ட காஞ்சி மண்டலத்துக்குத் "துண்டீர மண்டலம்" என்றும் "தொண்டைமண்டலம்" என்றும் பெயர். இம்மண்டலத் துக்குத் தலைநகர் 'காஞ்சிபுரம்' இந்நகரின் பிரதான தேவதை காமாட்சி அம்மையாகும்.

காஞ்சி காமாட்சி, அங்குசம், பாசம், கரும்புவில் பஞ்சபாணம தாங்கி, முன்பக்கம் பிலாகாசத்துடன் அமர்ந்துள்ளார்கள். அன்பர் களின் கண்முன் நிற்கவேண்டி அம்மையின் திரு உருவப்படம் அடியேன் வரைந்தமைத்த வண்ணம் இப்புத்தகத்தின் முகப்பில் அச்சிடப்பெற்றுள்ளது.

காமாட்சி அம்மையையும் அம்மையின் கோயிலைப் பற்றியும் விவரம் "காமாட்சி விலாசம்" என்னும நூலில் காணலாம்.

பார்வதி சமேதராகப் பரமசிவன் கைலாசத்தில் வீற்றிருந்த சமயம் வலம் வந்த **பிருங்கி** மகரிஷியால உபேட்சை செய்யப்பட்ட உமையவள் இறைவனின் இடப்பாகம் பெறவேண்டித் தவம் புரிய இக்காஞ்சி மாநகரே மிகச் சிறந்ததெனன ஐப்பசி மாத பூர நட்சத்திர தினம் அம்மை இப்பதி அடைந்தனர்கள் என்ப.

அம்மை ஈண்டு அறச்சாலை வகுத்து அதில் இறைவனின் இரு நாழி நெல்கொண்டு 1. ஆதுலர்க்குச் சாலை, 2. ஓதுவார்க்குணவு, 3. அறுசமயத்தார்க் குண்டி, 4. பசுவுக்கு வாயுரை, 5 சிறைச்சோறு, 6. ஐயம், 7. தின்பண்டம் நல்கல், 8. அறவைச் சோறு, 9 மகப் பேறுவித்தல், 10 மகவு வளர்த்தல், 11. மகப்பால் வார்த்தல், 12. அறவை பிணஞ்சுடுதல, 13. அறவைத் தூரியம், 14. சுண்ணம், 15. நோய்க்கு மருந்து, 16. வண்ணார், 17 நாவிதர், 18. கண்ணாடி, 19. காதோலை, 20. கண் மருந்து, 21. தலைக்கெண்ணெய், 22. பெண் போகம், 23. பிறர்துயர் காத்தல், 24 தண்ணீர்ப் பந்தல், 25. மடம், 26. தடம், 27. சோலை, 28. ஆவுரிஞ்சுதறி, 29. விலங்கிற் குணவு,

30. ஏறு விடுத்தல், 31. விலை கொடுத்து உயிர்காத்தல், 32. கன்னிகாதானம் என்ற 32 அறங்களும் வளர்த்து, பரமேஸ்வரரைக் குறித்துத் தவம் செய்ய பரமேஸ்வரர் காட்சி அளித்து அம்மைக்கு இடப்பாகம் தந்தனர் என்பது புராண வரலாறு. இதனை

"விடையின் மேலவர் மலைமகள் வேண்ட
விரும்பு பூசனை மேவிவீற் றிருந்தே
இடைய றாஅறம் வளர்க்கும்வித் தாக
இகப ரத்திரு நாழிநெல் அளித்து"
என்ற பெரிய புராண அருள் மொழியாலும்

1 "ஏல வார்குழ லாளுமை நங்கை
என்றும் ஏத்திவ ழிபடப் பெற்ற
கால காலனை கம்பனெம் மானை"

2 "அற்ற மில்புக ழாளுமை நங்கை
ஆத ரித்துவ ழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பனெம் மானை"

3 "வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை
மருவி ஏத்திவ ழிபடப் பெற்ற
பெரிய கம்பனை"

4 "கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை
கெழுமி ஏத்திவ ழிபடப் பெற்ற
கண்டம் நஞ்சுடை கம்பனெம் மானை"

5 "எல்லை யில்புக ழாளுமை நங்கை
என்றும் ஏத்திவ ழிபடப் பெற்ற
நல்ல கம்பனை"

6 "மங்கை நங்கைம லைமகள் கண்டு
மருவி ஏத்திவ ழிபடப் பெற்ற
கங்கை யாளனை கம்பனெம் மானை"

7 "எண்ணில் தொல்புக ழாளுமை நங்கை
என்றும் ஏத்திவ ழிபடப் பெற்ற
கண்ணும் மூன்றுடை கம்பனெம் மானை

8 "அந்த மில்புக ழாளுமை நங்கை
ஆத ரித்துவ ழிபடப் பெற்ற
கந்த வார்சடை கம்பனெம் மானை"

9 "பரந்த தொல்புக ழாளுமை நங்கை
பரவி ஏத்திவ ழிபடப் பெற்ற
கரங்க ளெட்டுடை கம்பனெம் மானை"

10 "வெள்ளங் காட்டிவெ ருட்டிட அஞ்சி
வெருவி ஓடித்த ழுவவெ ளிப்பட்ட
**கள்ளக் கம்பனை**"
என்ற நம்பியாரூரரின் தெய்வத் திருமறை வாக்குகளாலும்.

"ஏகம் பத்தின் இயல்பாய் இருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்"

"ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
என்ற திருவாசகத் தேன் பனுவலாலும்,

"அருந்தவத்தாள் ஆயிழையாள் உமையாள் பாகம்
அமர்ந்தவன் காண்"

என்று தேற்றமாந்தமிழ்த் தாண்டக வேந்தர் செப்பு மாமறை வாசகத் தாலும் தெள்ளிதின உணரலாம்

இவ்வம்மையைப் பற்றி **ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்** 'சௌந்தர்ய லகரி" என்னும் நூல அருளியுள்ளார்கள். இம்முனிவர் காஞ்சிக்கு எழுந்தருளி நகரைப் புதுப்பித்தும் பிரதான ஆலயங்களை நிர்மாணித்தும், முக்கியமாக காமாட்சி அம்மையாகிய பராசக்தியின் ஸ்ரீ சக்கரயந்திரத்தின் கோணத்தை அனுசரித்து அம்மையின் ஆலயததை நிருமித்தும் அம்மையின் உக்ர நிலையைச் சாந்தப் படுததிய தாகவும் வரலாறு இருக்கின்றது.

ஆதி சங்கர ரவர்களின் வழிவழி வந்த தற்கால பீடாதிபதிகள் ஆததிக வளர்ச்சிக்கும் உலகில் தர்மம் செழிககவும் புரிந்துவரும் தொண்டின் மகத்துவம் சொல்லுக்கு அடங்காதது.

இவ்வூரில் அனேக புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன. காஞ்சியின் தெற்காக ஓடும் பாலாற்றைப் பற்றிக் காஞ்சிப் புராணத்தில் விளக்கம் காணலாம். அதுபோல் "வேதவதி" நதியும் காஞ்சிப் புராண வரலாற்றில் முக்கிய இடம் பெற்றுள்ளது.

இவையல்லால் இத்தலத்தில்

1. பாபம் போக்கிப் புண்ணியமாக்கும் **புண்ணிய** தீர்த்தமும்
2. வேண்டுவார்க்கு வேண்டியதே ஈயும் **இட்டசித்தி** தீர்த்தமும்
3. சகல நன்மைகளையும் தரும் **மங்கல** தீர்த்தமும்
4. தேவர்களின் ஒப்பற்ற காவலையுடையதாகிய **காப்புடைத்** தீர்த்தமும்
5. மூன்று உலகங்களிலும் உள்ள எல்லாத் தீர்த்தங்களையும் தன்னிடத்தே அடக்கியுள்ள **சர்வ** தீர்த்தமும்

6. உலகம் தன்வடிவினதாகிய **உலகாணித்** தீர்த்தமும்
7. சிவபிரான் அணிந்த ஆகாய கங்கையால் நிரம்பியதும் பூவுல கோருக்கு எளிதின் கிடைக்கப்பெற்றதுமாகிய
 **சிவகங்கைத்** தீர்த்தமும்
8. பெருக்கெடுத்து வந்ததால் உமை அம்மையை நடுங்கச் செய்த
 **கம்பா நதித்** தீர்த்தமும்

மிகச் சிறந்த தீர்த்தங்களாகும்.

கம்பா நதி என்பது இதுகால் ஒரு வாவியின் உருவினதாகக் காண்கிறது. இந்நதிக்கரையில் அமமை பரமேஸ்வரரை இலிங்க உருவில் பூசிக்கையில் கம்பாநதி பெருக்கெடுத்துவர அம்மை நடுக் குற்று இறைவனைத் தழுவ அம்மையின் கைவளைத்தழும்பும், தனச் சுவடும் பெற்றுத் தழுவக் குழைந்தனர் இறைவர் என்பது இத்தல விசேட வரலாறு.

காமாட்சி அம்மையின் ஆலயத்தைச் சேர்ந்த **இட்டசித்தி** தீர்த்தத்தில் ஆதி வாரத்தில் நீராட நர்மதையில் நீராடிய புண்ணிய மும் **காயா ரோகணத்தில்** குரு வாரத்தில் நீராட சிந்து நதியில் நீராடிய புண்ணியமும், அம்மையின் கோயிலுக்குள் கர்ப்பக்கிருகத் தின் மேற்காக உள்ள **பஞ்ச** தீர்த்தத்தில் சுக்ர வாரத்தில் நீராட கோதா வரியில் நீராடிய புண்ணியமும் **சக்கர** தீர்த்தத்தில் அம்மை யின் அவதார நட்சத்திரத்திலும், பூர்வ பல்குனி நட்சத்திரத்திலும் நீராட கண்டகி நதியில் நீராடிய புணணியமும் எய்துமென ஆன்றோர் கண்டறிந்த உண்மை.

காமாட்சி அம்மையின் கோயிலிலேயே 108 திருப்பதிகளில் ஒன்றாகிய, 'திருக்கள்வன்' ஊர் என்ற வைணவத்தலம் அடங்கி யுள்ளது. அஃதில்லாமலும் காமாட்சி அம்மையின் கோயிலின் பின் புறம் திருமால் நின்ற திருக்கோலத்துடனும், இருந்த திருக்கோலத் துடனும் கிடந்த திருக்கோலத்துடனும் ஒருவர்கீழ் ஒருவராய் காட்சி அளிக்கின்றனர்.

காஞ்சி மண்டல பிரதான தேவதையான காமாட்சி அம்மை யின் மேல் பிள்ளைத்தமிழ் ஆக்குதல் வேண்டுமென இந்நகர் பிரபல சவுளி வியாபாரியும் ஏகாம்பரநாதர் தேவஸ்தான அறங்காப்பாளரும் நகர நிதி நிர்வாகஸ்தரும் சிவ நேசச் செல்வருமாகிய திருவாளர் **பொ. கோவிந்தராஜ உடையாரவர்கள்** அடியேனுக்குக் கட்டளை யிட்டார்கள். இது காமாட்சி அம்மையின் உத்தரவென்றே இப்பணி யைச் சிரமேற்கொண்டு இப்பிள்ளைத் தமிழை அம்மையின் அருளுக் குக் கருவியாக இருந்து ஆக்கியுள்ளேன். ஒன்றுக்கும் பற்று அடி யேனுக்கும் இப்புண்ணியம் கிடைத்ததே என்று திருவருளை எண்ணி வியககாமலிருக்க முடியவில்லை,

இதுசமயம் பிள்ளைத்தமிழ் என்பது பற்றியும் ஒருசிறு குறிப்பு அவசிய மாகின்றது.

"பிள்ளைத்தமிழ்" பிரபந்த வகையில் ஒன்று. இதைப் 'பிள்ளைக் கவி', "பிள்ளைப்பாட்டு" என்றும் வழங்குவார்கள். பரடப் பெறுந் தெய்வத்தைக் குழந்தை யாகப் பாவித்து அதன் வயதுக் கேற்ப திரு விளையாடல் புரிவதைப் பல பருவங்களாகப் பகுத்துப் பாடப் பெறும் நூல் "பிள்ளைத்தமிழ்" என்ற பெயரினது. அவதார புருஷர் களைப் பற்றிப் பிள்ளைத்தமிழ் இயற்றுதலும் வழக்கில் உள்ளது.

இப் பிரபந்தம் "ஆண்பால் பிள்ளைத்தமிழ்" என்றும் "பெண் பால் பிள்ளைத்தமிழ்" என்றும் இரண்டு பெரும் பிரிவுகளை உடையது அதில் "பெண்பால் பிள்ளைத்தமிழ்" 1. காப்பு, 2. செங்கீரை, 3. தாலாட்டு, 4. சப்பாணி, 5. முத்தம், 6. வாரானை, 7. அம்புலி, 8. அம்மானை, 9. நீராடல், 10. ஊசல் என்பதாகப் 10 பருவங்களை உடையது.

(தெய்வக்) குழந்தையின் இரண்டு மாத வயதிற்குக் காப்புப் பருவமும், ஐந்து மாத வயதிற்குச் செங்கீரைப் பருவமும், எட்டு மாத வயதிற்குத் தாலாட்டுப் பருவமும், ஒன்பது மாத வயதிற்குச் சப்பாணிப் பருவமும், பதினொரு மாத வயதிற்கு முத்தப் பருவமும், பனிரெண்டு மாத வயதிற்கு வாரானைப் பருவமும், பதினெட்டு மாத வயதிற்கு அம்புலிப் பருவமும், ஐந்தாம் ஆண்டுமுதல் ஒன்பதாம் ஆண்டு காறும் சிறு சோறு அட்டல், ல்ல புருஷனைப் பெறுதற்குத் தவஞ் செய்தல், கழங்காடல், அம்மானை ஆடல், பந்தாடல், நீராடு கல், ஊசலாடுதல் முதலிய பருவங்களும் என்பதாக அறிஞர் வகுத் துள்ளார்கள்.

இந்நூல் அடியேனுல அமமையின் உத்தரவுபடி ஆக்க வேண்டு மென்ற ஆசையின் காரணத்தால் ஆக்கப் பெற்றதே யன்றி அதற் கான ஆற்றல் காரணத்தால் ஆக்கப்பெற்ற தின்று. ஆகையால் இதில் காணக் கூடிய சொற்குற்றம் பொருட்குற்றங்களைக் காமாட்சி அம்மையார் பொறுத்துக் கொள்வார்கள் என்றும், மெய்யன்பர்க்ள் அக்குற்றங்களுக்காக அடியேனை மன்னிப்பார்கள் என்றும் நம்பு கிறேன்.

பாக்களை எளிதில் அன்பர்கள் உணருமாறு பாக்களுக்கு அரும்பதஉரையும், பொருளும், அப்பப்பாவின் கீழ் சேர்த்துள்ளேன்.

இந்நூல் எழுத்துப் பிரதி முழுமையும் மனமுவந்து பார்வை யிட் டுதவிய மன்னார்குடி மெய்யன்பர் திருவாளர் வித்வான் **பொ. பெத்தபெருமாள் வன்னியரவர்களுக்கு அடியேன்** நன்றி பெரிதும் உரித்தாயது.

பாக்களை வாசித்து சீர்தூக்கி அணிந்துரை எழுதி உதவிய மன்னார்குடி **District Munsif** ஆக பதவி வகிப்பவர்களும் தமிழன்பரும், சைவத் திருவாளரும், ஆகிய உயர்திரு. **M. ஷண்முக சுப்ரமண்யம்,** B. A., B. L., அவர்களுக்கும், இப்பிள்ளைத் தமிழை ஆராய்ந்து அணிந்துரை ஆகக்கித் தந்துள்ள அண்ணாமலை நகர **Annamalai University** தமிழ் ஆராய்ச்சித் துறைத்தலைவர் பேராசிரியர் வித்வான் உயர்திரு. **G. சுப்பிரமணிய பிள்ளை** M. A., B. L., அவர்களுக்கும் அடியேனின் இதயங்கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

அடியேன் பிறந்த புண்ணிய பூமியாகிய காஞ்சிமா நகரத்து முக்கிய தேவதையாக எழுந்தருளியுள்ள காஞ்சி காமாட்சி அம்மை யின்மேல் இந்நூலை ஆக்குதற்கு அடியேன் செய்த புண்ணியம் அடியேனின் பெற்றோர்கள் செய்த தவப்பயனே ஆகையால் அவர் களின் பாத தாமரைகளை அடியேன் சிரத்திற் சூடி அவர்களுக்கு வணக்கம செலுத்துகின்றேன்.

இந்நூல் முடிவு பெறுதற்கு உற்ற துணையாகிய காஞ்சி காமாட்சி அம்மையின் பாதார விந்தங்களை நினைந்து நினைந்து, வணங்கி, வணங்கிப் போற்றுவன், இந்நூலைப் பயிலும் மெய்யன்பர் களுக்கு அம்மையின் திருவருள் எளிதாக வேண்டுமென்று வேண்டி அம்மையின் திருவடிகளை அடியேனின் சிரத்திற் சூடிப் பணிந்து போற்றுகின்றேன்.

வாழி காஞ்சி வளரறம் வாழியே
வாழி வானந் தருவளம் வாழியே
வாழி காம விழியுமை வாழியே
வாழி மூன்றின் வயத்தினர் வாழியே!

மன்னார்குடி,
29—6—59.

இங்ஙனம்,
**காஞ்சி. இரா. குப்புஸ்வாமி.**

உ

காமாட்சி அம்மை துணை.

# காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்.

## காப்பு

### கற்பக விநாயகன் துதி.

அண்டபகி ரண்டமவை யொன்றிவளர் பல்லுயிர்க
ளாலவையு மூன்லி யுன்னி
ஐந்துகர வேகம்ப னேடேல வார்குழலி
அம்மையின் பால வென்ன
பண்டவன டைந்தவண மேயுலகி னுற்றவவர்
பல்லிடை யூறு நீறு
பண்ணுமா றங்கியுமிழ் கட்பொறிகள் மட்டிலெழ
பம்புமூ வெள்ள நீரான்
வண்டல்செய் தடியர்மனங் கொண்டவவை அன்றடையு
வண்ணமே அருள்வ னென்னும்
வாரணநான் காரணமுந் தேவெனநின் றேயடியர்
வந்தனை யுகந்த பொருணீ
கண்டுமொழி வண்டுகுழல் கெண்டைவிழி தண்டைகழல்
காஞ்சிகா மாட்சி மீது
கசடனறி விலிபிள்ளையந் தமிழ்புனைய கச்சியுயர்
கற்பகக் களிறு காவே!

**அரும்பத உரை**

*கற்பக விநாயகன் = தேவதரு போன்று விரும்பியதைத்தரும் விநாயகக் கடவுள், பகிரண்டம் = பெரிய அண்டங்கள், ஒன்றி = பொருந்தி, ஏல வார்குழலி = வாசனை பொருந்திய நீண்ட கூந்தலையுடைய உமையம்மை, பண்டவன் அடைந்த வணம் = முன்னர் (பழம்) அவன் அம்மையப்பனிடம் பெற்றது போன்று, அங்கியுமிழ் கட்பொறிகள் = கோபாக்கினியால் கண்ணில் எழுகின்ற தீப்பொறிகள், பம்பு = எழுகின்ற, வாரண = யானை முகவ, ஆரணம் = வேதம்.*

**பொருள்**

*சகல உலகங்களிலும் உள்ள உயிர்கள் நின்னை, திருவேகம்பனுக்கும ஏலவார் குழலிக்கும் புதல்வனே என்று துதிக்க அவர்களின் இடையூறுகளைக்கண்ணின் தீப்பொறிகளால் தகித்து, அந்நீற்றை மதநீரால் வண்டல் செய்து முன்னம் நீ கருதிய வாறே பழம் அடைந்தது போல் அடியார்கள் கருதிய யாவும் அடைய அருள்வை என்னும் ஆனைமுகனே, காஞ்சி காமாட்சி மீது அடியேன் பிள்ளைத்தமிழ் பாட நீ காத்தருள்வாயாக!*

# முதலாவது காப்புப் பருவம்.

## திருமால்

விஞ்சைக்கு மிஞ்சுமஞ் சேழினும் மிக்கதோர்
கஞ்சிகம் பாநதிபுடை
விண்ணீல மேதிரண் டொண்கோல மாகநிலை
மின்னிழிந் ததுபோல்வதால்

கொஞ்சிக்கு லாவுவிண் எண்டிக்கு ளுள்ளபெண்
குழவிபா லகரெவர்களும்
கூடிப்பு கழ்ந்திந்த தேவக்கு ழந்தையினைக்
குவலயத் தரசிவளென

அஞ்சிற்ப பாவையிவள் கஞ்சப்ப தந்தோய
அம்மைகா மாட்சியெனவிண்
டந்தணன் மாதவக் கௌதமன் கானிடை
காணக்கி டந்தவமயம்

கஞ்சிக்கு ளேதிருக் கள்வனென் போன்முதல்
காக்குபதி னெண்மர்களும்
காக்கக்கி டந்துபா லாற்றைவி ழைந்துறூஉம்
கண்ணைப்பு ரந்திடுகவே!

**அரும்பத உரை.**

*விஞ்சைக்கு மிஞ்சும் அஞ்சு ஏழினும் மிக்கதோர் கஞ்சி = கலை ஞானத்தால் விளக்குதற் கரிய பஞ்ச பூதத்தலங்களில் முதன்மை யாகவும், முத்தி தரும் ஏழு நகரங்களில் சிறந்த தாகவும் உள்ள ஒப்பற்ற காஞ்சி, கம்பா நதி = கம்பா நதி தீர்த்தம், குழவி பாலக ரெவர்களும் = திக்குப் பாலகரின் பெண் குழ்ந்தைகள் யாவரும், திருக்கள்வன் = திருக்கள்வன் என்னும் பெருமான்.*

**பொருள்,**

*பஞ்ச பூதத் தலங்களில் முதன்மை யானதும், முத்தி தரும் தலங்கள் ஏழினுள் சிறந்தது மாகிய காஞ்சிமா நகரத்தில் கம்பா நதித் தீர்த்தக் கரையில் விண்ணின் நீலம் திரண்டு நிலையாய மின்னல் போன்ற ஒளியுடன் இறங்கி வந்ததே போன்றதால், அதனுடன் கிழக்கு முதலாகத் திக்குப் பாலகர். 1. இந்திரன், 2. அக்கினி, 3. யமன், 4. நிருதி, 5. வருணன், 6. வாயு, 7. குபேரன், 8 ஈசானன் ஆகிய திக்குப் பாலகரின் பெண்கள் கூடிப் புகழ்ந்து இக்குழந்தை காமாட்சி என்ற பெயருடன் நிலத்தில் பாதம் தோய வந்த தேவக் குழந்தை என்றும் உலகத்துக்கு அரசி என்றும் சொல்லக்கூடிய வண்ணம் கௌதமன் ஆசிரமம் அமைந்த வனத்திடை போந்த சமயம் திருக்கள்வன் முதலாக காஞ்சிமண்டல பதினெண் காத்தற் கடவுளரும் அக்குழந்தையைக் காப்பாற்றுவார்களாக!*

## சிவபெருமான்

மண்டுமயல் கொண்டமுனி வண்டுருவின் அண்டர்தொழ
வானுலகி னம்மை மகிழ
மன்னுமொரு முப்பத்து முக்கோடி தேவரொடு
வணங்குதே வக்க ணங்கள்

கண்டுனடி எமதுபுகல் கண்ணுதற் கடவுளென
கயிலேயங் கிரியி லுள்ளான்
காரிருள தேயிரிய வாலொளிய தாயகல
ககனவெளி யூடு நிற்க

சண்டப்ர சண்டமு வாயுடைய நெட்டிலைவேல்
தங்குசெவ் வங்கை யுயர
சாட்டாங்க தண்டனென் றேதொழுது நின்றுவலம்
சத்தியையு பேட்சை செய்து

கொண்டபொழு தச்சபையை விட்டவனி யுற்றசிறு
குழந்தைகா மாட்சி அம்மை
கூடமுடை யோய்தவசி வேடமுடை யோயுடலில்
கூறுகொள வந்து காவே!

**அரும்பத உரை.**

*மண்டுமயல் = அதிகமான பக்தியால் உண்டான மயக்கம், இரிய = கெட, வாலொளி = பெரிய ஒளி, அகல = விலகி நிற்க, ககனம் = ஆகாயம், சண்டப் பிரசண்டம் = வேகத்திலும் வேகமாக, உபேட்சை = அசட்டை கூடம் = அண்ட கூடம், கூறு கொள = இடப்பாக மாகக் கொள்ள.*

**பொருள்.**

*வானோர் தொழவும் உமையவள் மகிழவும், முப்பத்து முக்கோடி தேவர்களும், மற்ற தேவ கணங்களும், நின் திருவடி எமது தஞ்சம் கண்ணுதற் கடவுளே! என்று போற்ற, கயிலை மலையையுடையவன் ஆகிய நீ அகண்ட வெளியில் பிரகாசிக்க, நீ தாங்கும் முத்தலைச் சூலம் பக்கலில் உயர்ந்து நிற்க, பக்தி மயக்குற்ற பிருங்கி மகரிஷி நின்னை மாத்திரம் தொழுது சாட்டாங்கமாக வணங்கி சத்தியை அசட்டை செய்த போது அச்சபையைவிட்டு விலகி வந்த காமாட்சி நின்னுடலில் இடப்பாக மாகக் கூறு கொள்ளுமாறு அவ்வம்மையைக் காப்பாயாக!*

## கற்பக விநாயகன்

இக்குசொலு குக்குவிதழ் மிக்கழகு சொக்குமகள்
இப்பிறவி உய்யு வண்ணம்
இட்டமிக வுற்றவிருள் சுற்றியமெய் பெற்றவெமை
எட்டவெளி யுற்று வாழும்

பக்குவம ளிக்குபுது புத்தமுத மொத்தமலர்ப்
பாதமெளி தாக வருளும்
பட்டிலுநன் மெத்தெனுடல் பொற்குழவி கச்சியமர்
பைங்கிளியை இனிது காக்க

மூக்கனியுண் கட்டிபய றப்பமொடு நச்சினிய
மோதகமொ டெள்ளு ருண்டை
மொச்சையுண தத்திவெகு பத்தரிலம் புக்குலவு
மூடிகனு கந்த தேவை

அச்சிவனு ருற்றிவர்தேர் அச்சினைமு றித்தகரி
ஆனனமொ டுற்ப வித்தாற்
கச்சிறுவ னைக்குறவ ரச்சிறுமி பற்றவருள்
ஐங்கரனை அஞ்ச லிப்பாம்!

**அரும்பத உரை.**

*இக்குசொல் = கரும்பு போல் இனிய சொல், உருக்கும் இதழ் = வடிக்கின்ற உதடு, மூக்கனி = மா, பலா, கதலி, கட்டி = கற்கண்டு, நச்சினிய = விரும்பத்தக்க இனிப்பு உடைய, இலம் புக்குலவு = வீடு வீடாக நுழைந்து உலவுகின்ற, மூடிகன் = பெரிச்சாளி, இவர் = ஊர்ந்து செல்லும், கரி ஆனனம் = யானைமுகம்.*

**பொருள்.**

*இனியசொல்லை வடிப்பவளும், மிகுந்த அழகு உடையவளும் எடுத்த இப்பிறவியி னின்று வீடுபேறடையும் நல்வாழ்வு அடைய விரும்பும் எம்மை இருள்சூழ் பூவுலக வாழ்வி னின்றும் நீக்கி பகல் இரவு இல்லா வெளியில் வாழும்படி யான பக்குவம் அளிக்க வல்ல பாதங்களை யுடைய வளும் மிருதுவான திரு மேனி யுடையவளுமான குழந்தை காமாட்சியைக் காக்கும் பொருட்டு, முக்கனி, கற்கண்டு, பயறு, அப்பம், மோதகம், எள்ளுருண்டை, மொச்சை முதலிய நவதானியம் உண்ண, அன்பர்களின் வீடுகள் எல்லாம் தத்திச் சென்று உலாவும் மூடிகனை வாகனமாக உடைய வனும் சிவன் ஊர்ந்த தேர் அச்சு முறியச்செய்த வனும், வள்ளியை முருகன் மணக்க உதவியவனு மாகிய கற்பக விநாயகனைத் தோத்திரிப் போமாக!*

## குமரவேள்

சத்துவகு ணப்பிரிய சிட்டர்பிற துட்டர்வயின்
தப்பியுல குக்கு ஞானத்
தத்துவம்வி ளக்கியுயிர் நற்சுகப தத்திலுற
சத்திவைப ணித்த வாறே

அந்தமயில் வைத்தகும ரப்பன்வளை யற்குடையன்
அக்குறம கட்கு நேயன்
அத்துவித சொற்பதமெ மக்கெளிதின் சித்திபெற
அக்கணம ருட்கு ணாளன்

சுத்தசிவ பத்திவழு விற்குவடி னுட்படுநர்
சொர்க்கவுல குக்கு ளேக
துத்தியா வுக்குவிதி செப்புமயி லூற்றுகிரி
உட்கதுளை யிட்ட சீலா

கத்திசிர முற்றுலவு மப்பிளைவ கித்தவவன்
கைப்புறமு கக்கு பேதை
கச்சிநகர் மெச்சியமர் பச்சையிள இக்கனைய
கட்டிவளர் தற்த காவே!

**அரும்பத உரை**

*சத்துவம் = முக்குணத்தில் முதற்குணம், சிட்டர் = தெய்வ அடியவர், துட்டர்வயின் = தீயரிடம், அத்துவித சொற்பதம் = கடவுள் வேறு, ஆன்மா வேறு என்று வித்தியாசம் இல்லாததாகச் சொல்லும் உயர்ந்த பதவி, குவடு = கிரவுஞ்சம், விதிசெப்பும் மயில் = நடந்துகொள்ளும் முறையை வகுத்து உரைக்கும் மயூரம்.*

**பொருள்**

*இறைவனின் மெய்யடியார் தீயரிடம் தப்பிப் பிழைத்து உலகினருக்கு ஞானம் புகட்டி உயிர் சுகம் பெற்று வாழ தீயவரை ஒழிக்க வேண்டு மென்று சிவபிராட்டி சத்தி வேலுக்கு உத்தரவிட்ட வண்ணம் அந்த சத்தி வேலை கையிற்றாங்கி வள்ளி மணாளன், அவன் வேறு யான் வேறு என் றில்லாத பதவியை அளிக்க வல்லவன், சிவபத்தியில் வழுவியவர்கள் உய்ய அருளிக் கிரவுஞ்ச மலையைப் பிளந்தவனை பரிசுத்தனே, கங்கை யைச் சிரசில் உடையவனின் பக்கலில் அமர்ந்து கச்சியில் குழந்தையாக அமர்ந்துள்ள காமாட்சி அம்மை வளர்ந்துவர நீ காப்பாயாக!*

## பிரமன்

விண்முதலா அனைத்துலகி னெழில்திரட்டி எடுத்தவதை
மிகுத்ததென எளியோம் காண
விழிக்கமுதை யளிக்கவல தனித்தவனப் புடைத்ததென
விளங்கியகா மாட்சி வானத்

தண்ணுலவு புயலுலவத் தருவளநற் பதியணுகித்
தழையவரு மிறைவி எம்மைச்
சதுர்வடுவி னமையுமுட லதுவகல அருளிளைய
தவமகளை இனிது காக்க

மண்முதலா மற்றுளபூ தங்களினற் பாவையெனும்
வாங்கிவிடு துருத்தி யேபோல்
வாயுவினு லியங்கெமது மாயவுரு வதுவாக்கி
வளருமொரு பான்மை தந்து

பண்ணுபெரு விளையாட்டு நனிநெடுநாள் புரிந்துவநம்
பான்மையினன் செய்த பாவை
பதமழியா விதமருளத் தவமுயலுஞ் சதுமுகனின்
பதமலர்யாம் பழிச்சு வோமே!

**அரும்பத உரை**

*சதுர்வடு = நான்கு குற்றம், தவமகளை = தவம் செய்யும் உமைய வளை, நனி = அதிக, பதம் = நல்ல தன்மை, பழிச்சுவோம் = தோத்தரிப் போம்.*

**பொருள்.**

*சகல உலகங் களிலும், படைக்கப்பட்ட அழகுகளை எல்லாம் ஒன்று கூட்டி எடுத்த ஒப்பற்ற அழகு இப்பூவுலகோ ராகிய அடியேங்கள் காணத் தக்க தாய் காமாட்சி என்ற பெயரோடு காஞ்சிமா நகரத்தில் அடியேமைப் பற்றியுள்ள நான்கு குற்றங்களாகிய நரை, திரை, மூப்பு, சாக்காடு என்பவைகள் விலகும்படி அருள்புரிய வேண்டி ஈண்டு தவம் செய்யும் அவ்வம்மையைக் காக்கும் பொருட்டு, பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்டு துருத்தி போல் இயங்கி வளர்ந்து வரும் பாவைகளைச் செய்யும் விளையாட்டு உடைய பிரமன் அவன் செய்த பாவைகள் பதம் அழிந்து போகாத வாறு பெருந்தவம் முயல்கின்றவ னுகிய அந்த சது முகனின் பாதங்களைத் தோத்தரிப்போ மாக!*

## இந்திரன்

தவத்திறனின் சிறக்குநலம் அனைத்துலகி னுணர்த்துவகை
தரித்ததிரு வேட மாகி
தழைத்ததரு வனத்தினிடை விரித்தசடை படைத்தவவள்
சமர்த்தனரன் நாம மோதி

பவக்கடலில் மிதக்குமிரு நிலத்திலுள மனித்தரவள்
பதப்பரிச மெய்து மாறு
பசித்துமிக மெலித்தவுடல் கறுத்தநெடு கயற்கணினள்
பதிக்குளுயர் காஞ்சி போந்து

சிவத்திடம் விருப்பினொடு பெருத்ததவ மியற்றுதனிச்
சிறப்புடைய காம நோக்கால்
செழித்தமத ஒழுக்குடைய வெளுத்தகரி உகப்பஇகல்
செயக்குருதி வச்ர பாணன்

கவிக்குகுடை நிழற்றுபதி தனக்கிறைவ னெனப்புலவர்
கவிச்சுவையின் பாட லாக்கிக்
களிக்குபுகழ் படைத்தகட வுளுக்குமனஞ் செலுத்துவமக்
கதுப்பினளை இனிது காக்க!

**அரும்பத உரை.**

*தரித்த திரு வேடம்=பூண்ட தவ வேடம், தரு=மரம், பதப் பரிசம்=பாத தீட்சை, இகல்=போர் செய்யும், செயக்குருதி=சிவந்த இரத்தம், வச்ர பாணன்=வச்சிராயு தத்தை உடைய இந்திரன், கவிக் குக்குடை=விரித்துக் கவிழ்த்துப் பிடித்த குடை, பதி=அமராபதி.*

**பொருள்.**

*தவப்பயனால் உண்டாகும் சிறந்த நலத்தை உலகுக்கு உணர்த்தத் தவ வேடம் பூண்டு வனத்தில் விரித்த கூந்தலுடன் சிவபிரானின் பஞ்சாக் கரம் உச்சரித்து மக்கள் அவள் பாத தீட்சையால் நன்மை எய்தும் பொருட்டு, உபவாசத்தால் திரு மேனி வாடி காஞ்சி மா நகரத்தில் சிவபிரானைக் குறித்துத் தவம் செய்யும் அம்மையின் கடாட்சத்தால் வெள்ளையானையை ஊர்ந்து வச்சிராயுதம் கொண்டு போர் புரிந்து வெற்றி கண்டவன் என்று பாவாணர் புகழ்ந்து பாடும் வண்ணம் குடைகவிக்க அமர்ந்துள்ள இந்திரனே, அவ்வம்மையைக் காப்பாயாக!*

## அட்ட இலக்குமி

அருட்குவியல் குவித்தவகல் வெளிக்குள்குடி யிருக்குமவள்
அகத்தினுறு மான்ம கோடிக்
களிக்குமருள் இனித்தமுதை அருத்துநசை உளத்துடையள்
அநித்தமற மன்னு காஞ்சி

ஒருத்திநிக ரொருத்தரிலா தருத்தியொடு எமக்கருளும்
உருக்கமுடை காம கோட்டத்
துடுக்குமுடை இருக்கைதல தறித்தலையில் உகப்பபுர
உருத்திரியை இனிது காக்க

விரைத்துவிரைத் தறுத்துமணி எடுத்துபலன் பெருக்குமதில்
விருப்புகொளு மாதி ஞேடு
மிகுத்தபொரு ளௌதர்க்குமொரு தனித்ததிரு எனத்தகுமொர்
விழுப்பமுடை எண்ம ராவோர்

புரக்குமவர் அகழ்த்துபுவி இடத்துமணி எடுத்துதவி
புரத்தினமர் அம்மை பூணப்
பொருத்துபல புதுப்புதிய பணிக்குமயல் விளைக்குமலர்ப்
பொகுட்டினரை அஞ்ச லிப்பாம்!

**அரும்பத உரை**

*அகம் = வெளியாகிய இடம், அருத்துநசை = ஊட்டுகின்ற ஆசை, அநித்தமற = நிலைபெற்று உள்ள, அருத்தி = அன்பு, தறித்தலையில் = ஆடை செய்யும் இடத்தில், புர உருத்திரியை = திரிபுராந்தகியை, மணி = தானியமணி, அகழ்த்து = பூமியிலிருந்து தோண்டி எடுத்து, மணி = விலையுயர்ந்த கற்கள், பணி = ஆபரணம், பொகுட்டு = தாமரை மலரின் உயர்ந்த உள்பாகம்.*

**பொருள்**

*அருளைப் பெருக் குவியலாகச் சேர்த்து அகண்ட வெளியான இடத்தில் குடியிருந்து அக்குடிக்கு விருந்தினராக வரும் ஆன்ம கோடிகளுக்கு அருளாகிய இன்னமுதை எடுத்து ஊட்டி காஞ்சியில் ஒப்பற்றவளாக ஆடை செய்யும் தறியிடத்திலேயே பட்டாடை பெற்று உடுப்பவளும் தாரகாசூரனின் புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தார காட்சன், கமலாட்சன் என்ற அசுரர்கள் சுவர்க்கம், மத்திமம் பாதாளம் இவைகளில், பைம்பொன், வெண்பொன், கரும்பொன் மதிலரண் வகுத்துச் சஞ்சரித்தவர்களை நகைத்தெரித்தவளுமாகிய திரிபுராந் தகியைக் காக்கும் பொருட்டு, அட்ட ஐசுவரியங்களாகிய, தனம், தானியம், தைரியம் சௌரியம், வித்தை, விசயம், கீர்த்தி, இராச்சியம் இவைகளுக்கான அட்ட இலக்குமிகளும் காமாட்சி அம்மையைப் பல மணிகள் பதித்த ஆபரணங்களால் அலங்கரித்து இன்பம் பயக்க அவர்களை இறைஞ்சுவோமாக!*

## கலைவாணி

கள்ளினவிழ் வெள்ளிதழி கஞ்சமலர் அள்ளியுமிழ்
கந்தமெழ இன்பு கொண்டு
கண்கணிறை தோகைமயில் துள்ளிமகிழ்ந் தாலுவபோல்
கன்னிகலை வாணி யாடி

வெள்ளையணி யோடுபுரள் வெள்ளைமணி தாழ்வடமும்
வெண்தகடோ டாணி கொண்டாள்
வெள்ளிமுளை போதிளைஞர் பள்ளியெழு யாமமதில்
விச்சைபயில் விக்கு நங்கை

துள்ளுமொரு நாதமுமிழ் யாழுடைந ரம்புதற
துங்கமுற ஏழி சையை
தூண்டுகர வல்லிதமி ழோடுமறை பாடுகுயில்
சொல்லுதுடி வெல்லு மிடையாள்

பள்ளிபயில் பாலரவர் உள்குவணம் பண்ணுமகள்
பாலனமு கந்த பாவாய்
பண்ணவனோ டில்லினறம் பண்ணுகலை வாணிபுர
பைங்கிளியை என்று காவே!

**அரும்பத உரை**

*கள் = தேன், அவிழ் = மலர்கின்ற, வெள்ளிதழி = வெள்ளை மடலை உடைய, கஞ்சம் = தாமரை, கந்தம் = வாசனை, ஆலுவ = ஆடுவது, அணி = ஆபரணம், வெள்ளைமணி = முத்து, படிகம், ஆணி = எழுத்தாணி, பாலனம் = பால்சோறு, பால் உண்ணும் அன்னம், பால்போன்ற அன்னம், இல்லினறம் = இல்லறம், ஏன்று = ஏற்று.*

**பொருள்.**

*விரிகின்ற வெண்டாமரை வீசுகின்ற வாசனையால் மகிழ்ந்து, மயில் போன்று ஆடி, வெள்ளை ஆபரணத்தோடு முத்துமாலை பூண்டு, வெள்ளித் தகட்டோலையும், எழுத்தாணியும் கொண்டு, வெள்ளிமுளைக்கும் போது இளைஞருக்குக் கல்வி பயில் வித்து யாழில், சட்சம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைபதம், நிடாதம் என்ற ஏழு இசைகளையும் தூண்டி மறைகளைப்பாடும், துடியிடையாள், பள்ளிப் பாலகர் நினைந்து பாடத்தக்கவள் அன்னத்தை வாகனமாக உடையவள், பிரமனோடு மனையறம் செய்பவள் ஆகிய நீ உமையாகிய பைங்கிளியைக் காப்பாயாக!*

## துர்க்கை

தாவிகயல் பாயழகி ஞலலைக ளேயுயர
தாதுமண மேவு நன்னீர்
தண்ணுலவு வாவிகரை கேவிமறை யோனமுது
தாவெனவே கூவு காலை

காவிமுகை யேவிரியு பூவினிக ராயவிரு
கண்களினு ளன்பு வார
காதலொடு நாதமென ஓதுமினி தாங்கவிதை
காழியவ ஞேது வண்ணம்

மாவினுயர் வானநரை யாமெருது ஏறிமுனம்
வார்க்குமரு ளமுது தந்த
வள்ளன்மை யோய்மகிடன் உள்குந்தி றத்தினெழு
மங்கைதிரி சூலி யுலகிற்

பாவமெமை யேயணுகா வாறுதவு தேவியுமை
பாலகிய ளாகு மிந்தப்
பச்சிளையள் மெச்சுபதி கச்சியினி லேயமரும்
பைங்கிளியை இனிது காவே!

**அரும்பத உரை**

*தாது = பூவின் மகரந்தப் பொடி, மேவு = பொருந்து, வாவி = தடாகம், மறையோன் = திருஞான சம்பந்தன், காவிமுகை = கருக்குவளை மொட்டு, வார = ஒழுக, காழியவன் = சீகாழி திருஞானசம்பந்தன், வள்ளன்மை = ஈகைத்தன்மை, மகிடன் = மகிடாசுரன், உள்கும் = நினைக்கும.*

**பொருள்,**

*கயல்கள் பாய்வதனல் அலைகள் உயரும் தடாகத்தின் கரையில் நின்று "அம்மை யப்பா" என்று கூவி அழுதபோது அவன் கண்களில் அன்பு நீர் பெருக தேவாரம் பண்ணிசையோடு பாடும்வண்ணம் சீகாழியில் திருஞான சம்பந்தன் முன் விடைமீது ஆரோகணித்து திருவருட் பாலமுது தந்த ஈகைக் குணம் படைத்தவளே! மகிடாசுரன் கினைந்து போற்ற நின்ற திருக்கோலத்துடன் காட்சி அளிக்கும் திரி சூலியே! பாவம் எங்களை அடையாதவாறு உதவி புரியும் தேவியே! பைங்கிளியாகிய காமாட்சி அம்மையைக் காப்பாயாக!*

## சத்த மாதர்கள்

சுத்தபரி பாகநிறை சித்தமுடை யோர்பரவ
துப்புரவி ஞேடரிய தவழுக்கிச்
சொர்க்கமொடு வாழ்வினுயர் நற்சுகமு மேயடைய
துர்க்கையவ தாரிபவ மதுபோக்கிக்

கத்துகழ லோடிடையின் கெச்சையொடு பாதமலர்
கக்குமொலி யோகடலை யிலதாக்கிக்
கச்சிபதி யேயமரு பச்சைநிற மாகவரு
கைப்பிளைய தாமவளை நனிகாக்க

தத்துபுனல் வாழுமனம் பக்கியர சாண்மைவிடை
தர்க்கியக டாமகிடன் மதவூற்ருன்
சத்தமிடு கோலமயில் தக்கயினை ஊருமவர்
சத்தியமர் சீயமகிழ் எயிருத்தாள்

ஒத்தெழுவ ராயமமர் நிட்டைதவ யோகநெறி
யுற்றசிவ காமியுளம் மகிழ்வாக்கி
ஒக்கநட மாடியிரு கைக்குரவை யாகிவலம்
உற்றஎழு மாதரடி முடிசேர்ப்பாம்!

**அரும்பத உரை**

*பரிபாகம் = பக்குவம், நிறை = நிறைந்த, துப்புரவு = ஒழுங்கு, ஊக்கி = முயன்று செய்து, கைப்பிளை = ஏந்தும் குழந்தை, அனம = அன்னம், பக்கியரசு = கருடன், மதஊற்றுன் = யானை, சத்தியமர்சீயம் = வலிமை பொருந்திய சிங்கம், சத்திக்கு வாகனமாகிய சிங்கம், ஆயம் = கூட்டம், குரவை = கைகோத்து ஆடும் ஆட்டம்.*

**பொருள்,**

*பரிபக்குவம் நிறைந்த மனமுடையோர் பரவி ஒழுங்கான முறையில் தவம் முயன்று, நல்வாழ்வு, சுகம், மோக்கம் அடைய உமையம்மை மெய்யன்பர்களின் பாபத்தைப் போக்கி, பாதத்தில் சப்திக்கும் அணிகளைப்பூண்டு பச்சை நிறமாகக் கச்சிப்பதியில் ஏந்து குழந்தையாகப் போந்துள்ளவளைக் காக்கும் பொருட்டு, அன்னம், கருடன், விடை, மகிடன், யானை, மயில், இவைகளை ஊரும், பிராமி, நாராயணி, மகேஸ்வரி, காளி, இந்திராணி, கௌமாரி இவர்களும் சிங்கத்தை யுகந்த வராகியும் அம்மையை மகிழ்வித்துக் குரவைக் கூத்தாடும் ஏழு மாதர்களின் பாதமலரை நம் சிரத்திற் சூடு வோமாக!*

*முதலாவது காப்புப் பருவம் முற்றிற்று.*

## இரண்டாவது செங்கீரைப் பருவம்.

---

மரகத மாடக வயிரம ணிப்பல
வைத்தகு டம்போல
வளருரு தாரையோ டகலுறு சூரிய
மண்டல மேலாக

கரகமெ டுத்துயர் அகலில டுக்கிபின்
கால்கொடு மேலூக்கிக்
ககனவெளிக்குளே திரியவி டச்சுழல்
காமவி ழித்தேவி

அரகர வென்பவ ரிதயநி றைந்தவர்க்
காதர மோடாள்வான்
அணிமயி லென்னுமொ ரொயிலுடை அம்மையின்
ஆடலு கந்தாட

அரவுமு டிப்பத புனிதன்ம கிழ்ந்திட
ஆடுக செங்கீரை!
அணிமணி முத்தமொ டுரைதர அம்மைநீ
ஆடுக செங்கீரை!

**அரும்பத உரை**

*மரகதம் = பச்சைமணி, ஆடகம் = பொன், தாரை = நட்சத்திரம், கரகம் = மண் பாத்திரம், அகல் = அகண்ட ஆகாயம், ஊக்கி = எழுப்பி, ஆதரம் = அன்பு, அணி = அழகு.*

**பொருள்.**

*மரகதம், வயிரம் முதலிய விலையுயர்ந்த கற்களையும், பொன் முதலிய உயர்ந்த உலோகங்களையும் தன்னுள்ளே வைத்த குடங்கள் போல பல நட்சத்திரங்கள், சூரியர் ஆகிய அண்ட கோளங்களை ஒன்றின் மேல் ஒன்ருகப் பாத்திரங்களை அடுக்கியதை ஒப்ப அடுக்கி அதைக் காலால் உதைத்து வான வெளியில் சுழலச் செய்து, பரமசிவன் நின் ஆடலைக்கண்டு ஆனந்தக் கூத்தாடவும் காளிங்க நிருத்தம் செய்யும் கிருட்டினன் மகிழ்ந்தாடவும் காஞ்சி காமாட்சி அம்மையே செங்கீரை ஆடுக!*

வானநெ டுங்கவி கைக்குளி ருக்கையின்
மாயிரு ளங்கேக
வாலொளி யேழெழு திங்களெ ளுஞ்சுடர்
வாசிர முன்னுல

கூனல்வெ ளிக்கெழி லாயவு டுக்குல
கோதைய ணிந்தார்போல்
கோலநெ டும்புவி மாதுபெ ருந்தவங்
கூடுவ ணங்காஞ்சி

கானின ருந்தவ வேடமொ டுந்தனி
காரிகை தன்னேடு
காமமெ ழுந்தரன் ஆகமி ரண்டற
காண்பொழு தங்கெய்த

ஆனினு கந்தத வச்சிறு பைங்கிளை
ஆடுக செங்கீரை!
அங்கரம் நன்கசை யும்படி பெண்பிளாய்
ஆடுக செங்கீரை!

**அரும்பதவுரை**

*கவிகை = குடை, வாசிரம் = இருப்பிடம், கூனல் = வளைவு, கோதை = பூமாலை, கோலம் = அழகு, கான் = காடு, காரிகை = பெண், இரண்டற = இருவர் உடல் இரண்டு அன்றி ஒன்றாக, காண்பொழுது = காணக் கூடிய நேரம், ஆனின் உகந்த = பசுவின் ஐந்து உகந்த.*

**பொருள்,**

*வானாகிய பெரிய குடையின்கீழ் அமர்ந்து இருள்நீக்கும் ஒளியாகிய சந்திரன் இருக்கையின்முன் தொங்கவிடப்பட்டாற்போல் ஆட, வான வெளியில் தோன்றும் நட்சத்திரங்கள் புவிமாதுக்கு மாலைகள் அணிவித் தாற் போன்று அமையுமாறு தவஞ் செய்த அப்பூமாதேவியின் சிகர மாகிய காஞ்சியில் தவவேடம் பூண்டுத் தனித்திருக்கும் அம்மையாகிய நீயும் அரனும் இரண்டற ஒன்றாகக் காணக்கூடிய சமயம் நெருங்க, பசுவின் ஐந்தும் உகந்த காமாட்சி அம்மையே செங்கீரை ஆடுக!*

## செங்கீரைப் பருவம்

திங்களி ளம்பிறை கங்கையெ ழுந்ததிர்
செஞ்சடை யோனுட
செங்கதி ரோனெழு வண்ணமெ ழுந்தருள்
சேவக னின்றுட

பொங்கிவ யம்பெறு சூலியொ டும்படர்
பூமிபு ரண்டாட
புந்தியி னின்றபெ ரும்பிளை மாமுகன்
பூவடி யோடாட

தங்கியி யங்குயாழ் அங்கைய மர்ந்திசை
தந்தர ம்போடு
தாளமி குங்கர மாடுப தந்திமி
தாமென வேயாட

அங்கைநி லந்தழு வுந்துளி ராகுபெ
ணுடுக செங்கீரை'
அம்பிகை கஞ்சியி னன்பின மர்ந்தவள்
ஆடுக செங்கீரை!

**அரும்பத உரை**

*திங்கள் = சந்திரன், செங்கதிர் = சூரியன், சேவகன் = முருகன், படர் = பரந்த, புந்தி = மனம், மாமுகன் = விநாயகன், திமிதாம் = ஒலிக்குறிப்பு, நிலம் = நிலமடந்தை, துளிர் = மாந்துளிர், பச்சையும், சிகப்பும் கலந்த துளிர் இலை.*

**பொருள்,**

*பிறைச் சந்திரனும் கங்கையும் அமைகின்ற செஞ்சடைப் பரமசிவன் ஆடவும், இளஞ்சூரியன்போல் எழும் முருகன் ஆடவும், ஆரவாரத்துடன் எழுந்து வெற்றிகொள்ளும் திரிசூலி ஆடவும், அவளுடன் பூமாதேவி ஆடவும். நெஞ்சிற் குடிகொண்ட பெரிய பிள்ளையாகிய விநாயகன் பாதத்தைத் தூக்கி ஆடவும் யாழுடன் தாளத்தை ஒலித்து 'திமிதாம்' என்று கலைமகள் நடமிடவும், கைகளை நிலத்தில் ஊன்றி காஞ்சி காமாட்சி அம்மையே செங்கீரை ஆடுக!*

குமரித்து றைக்கிறைவி கொழிநித்தி லக்குவைகள
கொண்டவ னுயர்த்தி வேலை
குரையப்பி னுக்கடியில் மலையிற்கொ டிப்பவள
கூலங்கொ ணர்ந்து யர்த்தப்

பமரக்கு வட்டிலெழு நறவிற்க லக்கீழுத
பாலியா றென்னு மங்கை
பரவிக்கொ ணர்த்தபுர நகரிற்ப டுத்தொளிரு
பைம்பொனின் நாரி ழுத்துக்

குமரப்ப திக்குள்வளர் மகளிர்க்கி னித்தவுமை
கொஞ்சுங்கு ழந்தை பூண
குழுமிக்க ரத்தினெடு புனையத்தொ டுத்தபல
கோவைமி விலங்க வாங்கித்

திமிரக்கு முற்குநறு தயிலப்ப சைக்குழவி
செங்கீரை ஆடி யருளே!
சிமயச்சி ரத்துதவழ் மதலைத்த வச்சிறுமி
செங்கீரை ஆடி யருளே!

**அரும்பத உரை**

*குமரித் துறைக்கிறைவி = தென்குமரி முனைக்கு இறைவி, நித்திலம் = முத்து, வேலை = சமுத்திரம், கூலம் = சமுத்திரத்தில் கிடைக்கும் முத்து பவழம் போன்ற விலையுயர்ந்த மணிப்பொருள், பமரம் = வண்டிசை, திமிரக்குழல் = கறுத்தகுழல், சிமயம் = மலை.*

**பொருள்.**

*குமரித் துறைக் கிறைவி கொழித்து எடுத்த முத்தக் குவியல்களைக் கொண்டு வந்து சேர்க்கவும், கடலுக்கடியில் பவழ மலைகளில் கிடைக்கும் பவழங்களைக் கொண்டுவந்தும், வண்டிசை செய்யும் மலையில் உண்டாகும் பாலாறு தன்னுடன் கொணர்ந்த பொன்னால் நார் இழுத்துக் கொடுக்கவும், குமரப்பதியாகிய காஞ்சியில் உள்ள மகளிர் முத்தமாலை, பவழமாலை தொடுத்துக் கொடுக்க வாங்கி அணிந்தும், கறுத்த குழலுக்கு, நெய்ப்பசை யிட்டும் மகிழும் குழந்தை காமாட்சியே!, செங்கீரை ஆடுக!*

## செங்கீரைப் பருவம்

மொக்குளதன் உச்சியினிற் றச்சனள வுக்குசமை
முற்றநெடு மாடி வானம்
முட்டமதி யோடுவிளை யாடுமகிழ் வாகுவணம்
முந்திதவ மாக்க கில்லேம்

இக்குவல யத்துளுயிர் விக்குபொழு திற்பிரியும்
என்னுமொரு வாழ்வு தன்னில்
இச்சைபெரி தாகுமதி அற்புதநி கழ்ச்சிசெய
ஏழையே மெண்ணு மெண்ணம்

நக்கனவ னேடுநட மொக்கபுரி வோயுணர்வை
நச்சுமிவர்க் கன்பு காட்டி
நற்பதமெ மக்கருளி முத்திதர வேயுலகில்
நண்ணியிவ ணெய்து பாதம்

செக்கரெழ வந்துதவழ் கச்சியம்ப திக்குடையோய்
செங்கீரை ஆடி யருளே!
சிக்குமுடி முக்கணனுர் சித்தமகிழ் விக்குகொடி
செங்கீரை ஆடி யருளே!

**அரும்பத உரை**

*மொக்குள் = நீர்க்குமிழி, யாக்கை நிலையாத தன்மை, தச்சன் = பிரமன், சமை = அமைக்கின்ற, முற்ற = முழுமையும், நக்கன் = பரம சிவன், நச்சுமிவர்க்கு = விரும்புகின்ற இவ்வடியார்க்கு, செக்கரெழு = சிவப் பாக.*

**பொருள்,**

*நீர்க்குமிழியின்மேல் உயர்ந்த மாடி வீடு கட்டி அதனுள் இருந்து உயர ஏறி நிலவோடு விளையாடும் புண்ணியம் முன் சன்மத்தில் செய்ய வில்லை. நிலையிலாக் காயத்தினராகிய யாம், பெரிய ஆசையோடு இப் பிறவியிலிருந்தே முத்தி வீடு அடைய நினைக்கும் எண்ணம், பரமசிவனேடு நடம்புரியும் அம்மையே நீ உணர்வை, அதனல் யாம் விரும்பிய வண்ணம் முத்திதர இம் மண்ணுலகம் வந் தெய்திய காமாட்சி அம்மையே நின் பாதம் சிவப்பத் தவழ்ந்து செங்கீரை ஆடுக!*

## செங்கீரைப் பருவம்

பன்னுமறை சொன்னதமிழ் அன்னைவரு தென்பொதிகை
பண்டைநாள் விட்ட கன்று
பாண்டியர சோடுதமிழ் ஆண்டஅவை யேநிறுவு
பாய்கயற் கண்ணி யாகி

நன்குமலர் கந்தமிகு மென்னுமினி தாயதமிழ்
நாறுதீங் கண்ணி யாக்கி
நாற்றிசையின் சாற்றுமொழி நாற்றமெழ வேத்துவணம்
நண்ணியித் தொண்டை எய்தி

மன்னுபுகழ் காமவிழி யாளுடலஞ் செய்யழகின்
மாலையின் பொலிவு வீக்கி
வாசமெழ வேயணியு மாலைபுனை வார்குழலி
வார்க்குதே னமுது தன்னல்

தென்னவென வண்டொலிசெய் தின்புசெயுங் கஞ்சியுமை
செங்கீரை ஆடி யருளே!
திங்கள்முக நங்கைநின தங்கைநில மங்கையுற
செங்கீரை ஆடி யருளே!

**அரும்பத உரை.**

*வரு=முதன் முதலாக (பூமிக்குத்) தென்னாட்டில் வந்திறங்கும், தமிழ் ஆண்ட அவை=தமிழ்க் கடவுளால் ஆளப்பட்ட சங்கம், கயற் கண்ணி=மதுரை மீனாட்சி, கண்ணி=தமிழ்ப் பாமாலை, ஏத்துவணம்= போற்றும்படி, தொண்டை=தொண்டை நாடு, வீக்கி=மிகுதி யாக்கி, தென்னவென=ஒலிக்குறிப்பு, தென்ன என.*

**பொருள்,**

*முதன் முதலாக பொதிகை மலையில் வந்து இறங்கி, பிறகு வடக்கே மதுரைக்குப் போந்து மீனாட்சி என்ற பெயரோடு மதுரையையும், ஆங்கு நிறுவப்பட்ட தமிழ்ச் சங்கத்தையும் ஆண்டு, தமிழ் மாலை புனைந்து, தொண்டை நாடு எய்தி, காமாட்சி அம்மை யாகிய நின் அழகினால் அம் மாலையின் அழகை அதிக மாக்கும்படி அம்மை நீ அணிய அதன் இன்பத் தால் அருள் சுரப்ப மக்கள் பேரானந்தம் அடையச் செய்யும் காமாட்சி அம்மையே செங்கீரை ஆடுக!*

பன்னகமென் பள்ளியொடு வெண்பனியின் தண்வரையும்
பங்கயப் போதி ருப்பும்
பாவைபுவி யாமிளைய மாதுகர மேயமைய
பார்த்துளம் நையு மளவில்

சென்னியொரு ஆயிரவ னென்னுமர வேந்திமுடி
சேர்க்குமப் பார சுமையின்
செங்கணவன் நொந்தயர்வின் சிந்துமணி அந்தமிகு
செம்பொனின் வைத்தி ழைக்க

நன்னர்செயும் வண்ணமதின் மின்னுபணி தன்னினசை
நஞ்சிறு நங்கை கொண்டு
நாடியவை யாவுமணி மேனியுட னேதவழு
நாரிகா மாட்சி அம்மை

சென்னிநடு வின்குழலை செஞ்சடைய தாயுடையோய்
செங்கீரை ஆடி யருளே!
தென்னன்சிவ னென்னுமிறை வன்கனிவின் முன்னிழிய
செங்கீரை ஆடி யருளே!

**அரும்பத உரை.**

*பன்னகம் = பாம்பு, தண்வரையும் = வெள்ளியங்கிரியும், பங்கயப் போதிருப்பும் = தாமரைமலர் ஆசனமும். செங்கணவன் = செங்கண் அரவு. மின்னுபணி = பிரகாசிக்கின்ற அணிகலன்கள், சென்னிநடு = உச்சி.*

**பொருள்**

*அறிதுயில் மாயோன் கிடந்த பாம்பையும், பரமேஸ்வரன் எழுந்தருளிய வெள்ளியங்கிரியையும், பிரமன் அமர்ந்துள்ள தாமரை மலரையும் தாங்குகின்ற பூமாதேவியின் கரங்களைக் கண்டு மனம் வாடிய ஆயிரம் முடியுடைய அரவு அப்பூமா தேவியைத் தாங்கும் மிகுந்த பாரத்தின் காரணமாக அயர்ந்து தன் ஆயிர மணிகளையும் சிந்த அவைகளைக் கொண்டு இழைத்த அணிகலன்களை அணிந்த திருமேனியை யுடைய காமாட்சி அம்மையே, உச்சியில் குழலை முடிந்துள்ளவளே! செங்கீரை ஆடுக!*

மதிபல கதிரவிழ் பகலவர் தமைஇழை
மாண்பான் கண்கூசும்
வடிவினே டொளிர்சுட ரவைமுடி யணியுமோர்
மந்தா னங்கொண்டு

பதிமணி யவைதிகழ் சுடிகையோ டகலணி
பண்பூ ணாரத்தாள்
படுவுடு கொடுதொடு வடமொடு படர்தரு
பைந்தா ரங்கோதை

மதிநவ மணிபொருந் தணிபல இடையின்ம
லிந்தே மின்வீச
மலரடி அணிகழ லொலியெழு தகைமைம
கிழ்ந்தோய் காமாட்சி

திதிதிமி யெனஇசை செயுமிரு பதமகள்
செங்கோ செங்கீரை!
திருமகள் புவிமகள் கலைமகள் பரமென
செங்கோ செங்கீரை!

**அரும்பத உரை**

*மதி = சந்திரன், பகலவர் = சூரியர், மந்தானம் = மகிழ்ச்சி, அகல் = அகண்ட மார்பு, மதிநவமணி = மதிக்கத்தக்க நவமணி.*

**பொருள்.**

*பல சந்திரர்களையும், பல சூரியர்களையும் வைத்து இழைக்கப்பட்டதால், கண் கூசும்படியான அமைப்புடன் ஒளிவீசும் சுடரணிகளை அணிந்து மகிழ்ச்சி கொண்டும், பதிக்கப்பட்ட மணிகள் பிரகாசிக்கின்ற சுடிகையும், மார்பில் ஆரமும் அணிகின்றவள், விழுகின்ற நட்சத்திரங்களால் தொடுக்கப்பட்ட மாலையுடன், மலர்மாலை புரளும் மார்பை உடையவள், விலையுயர்ந்த மணிகள் பொருந்திய மேகலை போன்ற அணிகள் திருவரையில் ஒளிவீசத் தக்கவள் ஆகிய காமாட்சியே, நீ பாதத்தில் அணிந்த கழல் ஒலிக்க திதிதிமி யென ஆடுகையில் பாதம் சப்திக்க செங்கீரை ஆடுக!*

ஒழுகமு திழியத ரமலரி னிதழெ௵
ஒல்குஞ் செவ்வாயோ
டுருள்கரு விழியசை வதினவை செயலற
ஒன்றே ஒன்ருகி

விழுசடை முகமதி தவழ்தரு முகிலென
விண்ணேர் கொண்டாட
விரைசெறி குழலம ரறுபத முரலுவி
ருந்தா லின்பாகி

புழுகுறழ் தடமுலை நெகிழ்வதி னறுமணம்
பூங்கா வென்ருகி
புகலிரு கரமொடு பதமல ரசைபிடி
போன்றே சாய்ந்தாட

பசமுமணி எனஉதிர் வியர்வைநன் னுதலெழ
செங்கோ செங்கீரை!
திருவினர் தொழுதினி தமர்புர முடையவள்
செங்கோ செங்கீரை!



**அரும்பத உரை**

*'ஒழுகு அமுது இழி அதரம் அலரின் இதழென எனப் பிரிக்க, ஒல்கும் = துவளும், விரை = பூந்தேன், புழுகு = வாசனை, உறழ் = பொருந்திய*

**பொருள்.**

*மலரின் இதழ்கள் தேனைச் சொட்டுவதுபோல் வாயிதழ் துவண்டு அமுதைச் சொரியும் செவ்வாயுடன் கண்ணேட்டமுடைய இரண்டு கரு விழிகளும் நீ அசையும் வேகத்தினல் ஒரு விழியெனத் தோன்ற, ஆடுகையில் நின் முகத்தில் விழுகின்ற கூந்தல் சந்திரனைத் தவழ்கின்ற புயல் இதுவென வானவர் கொண்டாட நீ சூடிய புட்பத்தில் மொய்த்த வண்டுகள் பாடும் இசையால் இன்ப மடைந்து மார்பிற் பூசிய வாசனை, மார்பு அசைவதின் மணம் வீசும் பூந்தோட்டம் போன்று வாசிக்க, பிடி தன் நான்கு கால்களும் சாய்ந்தாட ஆடுவதுபோல் நீ அசைய, வியர்வை நினது நெற்றியில் முத்துக்கள்போல் எழுந்துவிழ காமாட்சி அம்மையே செங்கீரை ஆடுக.*

குருமையி னருமொழி அருளிய குருமுனி
குன்றே கொண்டுதே
குளிர்வளி தவழ்வதி னெழுதரு குருகுமி
குந்தே கூகூஇ

தருநிழ லொடுமுகி லதுஇம முகிழ்வதின்
தந்தா மென்றாடு
தலமிசை சிகையுடை மயிரொடு மதகெழு
சங்கீ தத்தோடு

வருமொரு பிடிதவழ் கருமலை யதுவென
வந்தோய் இப்பூவின்
வடிவுயர் பவளிரு நிதியுடை யவளென
மண்ணோர் பண்பாடுந்

திருவுடை பதியெனு புரமமர் மடமயில்
செங்கோ செங்கீரை !
திகழுல குயநெறி யதுகொளு மழகுரு
செங்கோ செங்கீரை !

**அரும்பத உரை.**

*குருமை = பெருமை, குறுமுனி = அகத்தியன், குன்று = பொதிகை, குளிர்வளி = தென்றல், கூகூஇ = கூகூ எனக் கூவி, இமம் = குளிர்ச்சி.*

**பொருள்.**

*பெருமை பொருந்திய அரிய தமிழ் மொழியை உலகினுக்கு அருளிய அகத்தியன் வதியும் பொதிகைமலை தன்னிடத்தே இருந்து வீசுகின்ற தென்றல் காரணமாக உற்பத்தியாகின்ற குருகுகள் கூவ மரநிழலில் முகில் தருகின்ற குளிர்ச்சியின் பயனாக சிகையுடைய ஆண் மயில் தோகை விரித்து ஆட மதகில் நுழைந்து செல்லும் சலம் தருகின்ற இசையோடு, பிடி யெனவும், மலைகார்ந்து வந்தது போன்றும் இப்பூவுலகின் வந்தவள் பெரிய நிதியாகிய அருட்செல்வத்துக்கு இறைவியெனப் பூவுலகோர் இசைத்தோதக் கூடிய பெருநல முடையவளே, காஞ்சி காமாட்சியே செங்கீரை ஆடுக !*

*இரண்டாவது செங்கீரைப் பருவம் முற்றிற்று.*

## மூன்றாவது தாலப் பருவம்.

நூற்றேழு தலம் வீற்றோர் திருவொடு
நொடிக்குந் தவநெறியான்
நோற்றே பலவுயிர் காப்பாள் மகவென
நுவலும் பிலதலமாய்ப்

போற்றும் புரமிதில் வீற்றுள் தனையவர்
புகழ்ந்தே அருகணைந்து
பொலியும் பலமணி புனைவித் தயர்வற
புகலப் பலமொழிகள்

காற்றுந் துயில்கொள வையம் பொறைகொளும்
கணமுந் துயில்வையெனின்
காத்தற் கொருவரிங் கிலரென் பதுஉயிர்
கருதுந் தரமுணர்வாய்

சாற்றுந் தபவனம் வேட்டும் மடமயில்
தாலோ தாலேலோ!
தவமிக் கினிதமர் தனிகற் பகதரு
தாலோ தாலேலோ!

**அரும்பத உரை**

*நொடிக்கும் = புகழ்ந்து பேசப்பெறும், பிலதலம் = பிலாகாச தலம், உயிர் = உயிர்த்தொகை, வேட்டும் = விரும்பும்.*

**பொருள்.**

*நூற்று ஏழு தலங்களிலும் வீற்றிருக்கின்ற தாயர்களும் பரம பதத்தில் வீற்றுள்ள சிதேவியும் ஆக நூற்றெண்மரும் கூடிப்போய் அம்மையாகிய நீ பல்லுயிர்களையும் காத்து நோன்பு நோற்கும் பிலாகாச தலமாகிய ஸ்ரீபுரத்தில் வீற்றிருக்கையில் நின்னைப் புகழ்ந்து நின் திரு மேனியை மணிகளால் அலங்கரித்து நின் அயர்வு நீக்கப் பல இனிய மொழிகள் பேசிட, காற்று சற்று துயின்றாலும் உலகம் அஃதின்றி சற்று பொறுத்துக்கொள்ளும், ஆயின் நீ துயின்றால் காத்தற்கு யாரும் இன்றி உயிர் வாழாது என்பது உணர்ந்தவளே காஞ்சியாகிய தபோவனம் மகிழ்ந்த காஞ்சி காமாட்சி அம்மையே உன்னைத் தாலாட்டுவோமாக!*

அண்டங் கடந்தெழு பிண்டங் களுக்குமப்
புறமாய் அமையுமுயர்
ஆணிப் பொனம்பல மானத் தனித்ததொர்
அகலிற் பிணைபுவன

உண்டை நிலப்பரப் பென்னும் புனைப்பெயர்
உடலுய்த் தொடுக்குமிலில்
உண்டோ எனுஞ்சிறு மென்சீர் நுசுப்புடை
உமையா ளெனுங்குழவி

கண்டே மெனத்தகு வண்ணங் கிடந்துகண்
களிநீர் துளும்பிவிழுங்
கண்ணுய் எழிற்கிது ஒன்ருய்ப் படைப்பருங்
கவினுற் றணைநகருள்

தண்டா ளிறைக்கிட மொன்ருய்ப் பொருந்துவை
தாலோ தாலேலோ!
சான்ரோர் தொடுக்கிலே காண்போ தசைத்திட
தாலோ தாலேலோ!

**அரும்பத உரை**

*அண்டங்கள் = கோளாகாரங்கள், பிண்டம் = உயிரோடுங்கூடிய உடல், ஆணி = மேன்மையான, உண்டை = உருண்டை, தொடுக்குமில் = தொட்டில், நுசுப்பு = இடை, குழவி = குழந்தை, துளும்பி = அலேந்து.*

**பொருள்**

*அண்ட பிண்டங்களுக்கு அப்பாலாய், மேன்மையான அழகிய அம்பலமாகிய வெளியில் பிணைக்கப்பட்டுள்ள உருண்டையான நிலப் பரப்பாகிய தொட்டிலில், உண்டோ இல்லையோ எனத்தகும் மெல்லிய இடையினள் ஆகிய குழந்தை உமையவள் நீ நிடீரென்று தோன்றியவ ளாகக் கிடந்து கண்களில் அன்பு நீர்த்துளி ததும்பிக் கிடக்க ஒப்பற்ற எழில் உடையவளாய், படைப்பதற்கு அரியளாய், காஞ்சியில் அடியார்க்கு தண்ணென்ற நிழல் தரும் திருவடிகளையுடைய இறைவனுக்கு இடத்தில் அவனுடன் ஒன்ருகப் பொருந்தும் காமாட்சி அம்மையே, உன்னைத் தாலாட்டுவோமாக!*

வரப்பே உயரள் ளற்பழன
வளப்பங் கெழுநெற் கதிர்கவிய
மல்குங் கதலி வான்கிழிப்ப
வண்ப லாமா கதிர்விழுங்க

சுரப்பான் மிக்க கயப்புறங்கள்
சுவைசேர் புன்செய்ப் பலன்களெலாம்
தோன்றும் நிலமா மகளுடுக்கத்
துகில்போர்த் தன்ன எழில்விளைக்க

இரப்போ ரஃகு கச்சியினுள்
ஈன்ற ளென்ன முப்பழமோ
டின்ன ரமுதம் எவ்வுயிர்க்கும்
எடுத்தே யூட்டி அறம்வளர்த்துப்

புரப்போய் காம கோட்டமெனும்
புரத்தோய் தாலோ தாலேலோ!
பொன்மே னிக்கு ளொருபாகம்
பொறுத்தோய் தாலோ தாலேலோ

**அரும்பத உரை**

*அள்ளல்=சேறு, பழனம்=வயல், வளப்பம்=வளமை, கெழு = பொருந்திய, சுரப்பால் = ஊற்றினால், கதிர்=சூரிய ஒளிக்கதிர், அஃகு= குறைந்த, புரப்போய்=காப்போய், புரத்தோய்=காஞ்சிபுரத்தை இட மாக உடையவளே.*

**பொருள்.**

*வரப்பு உயர்ந்த சேற்று வயலின் வளமை பொருந்திய நெற்கதிர் வளைந்து செழிக்க, மிகுந்து உயரமான வாழை வானைப் பிளக்க, பலாவும் மாவும் கதிரவனின் வெளிச்சத்தை விழுங்க, ஊற்றுநீர் அதிகரித்த கயங்க ளின் பக்கத்தில் புஞ்சைப் பலன்களெல்லாம் பூமகளுக்கு வண்ணச் சேலை போர்த்தது போல் அழகு செய்ய, வேண்டும் என இரப்போர் இல்லாத கச்சிப் பதியில் தாயைப் போன்று அடியார்களுக்கு முப்பழ மோடு அன்னம் அளித்து அறம் வளர்த்து மக்களைப் புரக்கும் காமாட்சி அம்மையே உன்னைத் தாலாட்டுவோமாக!*

தாமம் புனையி லிங்கவுருச்
சாமி யவன்பாற் சிந்தையொடு
தவம்பூண் டிறைஞ்சி அஞ்செழுத்தைச்
சாற்றித் திருநீற் றுன்பொலிந்து

நேமத் தொழுகி சாந்தணிந்து
நெடுங்கூ ரூசி நுண்முனையில்
நிமலற் கன்பாய் அமர்ந்துருகு
நெஞ்சத் தோடத் தத்துவற்குக்

காமம் பெருக்கு மந்திரத்தைக்
காலைப் பொழுதும் நண்பகலும்
கதிர்வீய் போதும் நடுநிசியும்
கசிந்துச் சரித்தே ஆவுதியின்

ஓமம் புகைய வாசமுகில்
உகந்தோய் தாலோ தாலேலோ!
உம்ப ருலகின் உயர்கச்சி
உறைவோய் தாலோ தாலேலோ!

**அரும்பத உரை.**

*தாமம் = மாலை, நேமம் = நியமம், ஆவுதி = ஓமாக் கினியில் பெய்யும் நெய், வாசம் = வாசனை.*

**பொருள்.**

*மாலை சூடிய இலிங்க உருவாக அமைந்த பரமேஸ்வரனிடம் பொருந்திய சிந்தையோடு, தவம் பூண்டு தொழுது 'நமசிவாய' என்னும் ஐந்து எழுத்தையும் ஓதி திருநீறு அணிந்து, நேமத்தோடு சாந்தணிந்து, ஊசி முனையில் அமர்ந்து நின்மலனாகிய அப்பர மேஸ்வரன்மேல் அன்பாகி தன்பால் அவருக்குக் காமம் உண்டாக்கிப் பெருக்குதற்கான மந்திரத்தை காலை, நண்பகல், மாலை, இரவு, எப்போதும் உச்சரித்து ஆகுதியின் வாசம் பொருந்திய புகைப் படலத்தை மகிழும் காஞ்சி காமாட்சியே உன்னை தாலாட்டுவோமாக.*

வானே வெளியி லியங்குகிற
வளியே நிலனே வெண்மதியே
வயங்கும் பரிதி முதலாய
வகைசே ருடுக்க ளின்றொகையே

ஆனே முதலாம் பல்லுயிர்க
ளனைத்து மாய தோருயிரே
ஐம்பூ தங்க ளென்பவற்றுள்
அணுவுற் றிருக்கும் நுண்பொருளே

ஊனே நிறைந்த எவ்வுயிர்க்கும்
உரித்தா யுள்ள வுண்ணிறைவே
ஓங்கு மொளியே எவ்வவர்க்கும்
ஒன்றே யாகி எப்பொருளும்

தானே யாகுங் காமவிழித்
தலைவீ தாலோ தாலேலோ!
தவமுற் றவர்வாழ் திருக்கச்சித்
தலத்தோய் தாலோ தாலேலோ!



**அரும்பத உரை**

*வளி = காற்று, வெண்மதி = வெண்ணிலா, வயங்கும் = ஒளிர்கின்ற, பரிதி = சூரியன், உடு = நட்சத்திரம், ஆன் = பசு, ஐம்பூதங்கள் = பஞ்ச பூதங்கள, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன.*

**பொருள்,**

***வானே, வானில் இயங்கும் வளியே, நிலம் சந்திரன் சூரியன் உடுக்கள் இவைகளின் தொகையே, எந்த ஆன்மாவுக்கும் பொதுவாகிய உயிரே, ஐந்து பூதங்களி னுள்ளும், அணுவுற்றிருக்கும் நுண்ணிய பொருளே, எவ்வுயிரினுக்கும் உரித்தாகிய ஊனில் நிறைந்தவளே, ஓங்கிய ஒளியே, யாவரும் கடவுள் ஒன்று என்று சொல்லக் கூடிய தன்மையளே நீ படைத்த எப்பொருளும் நீயே ஆனாய் எனத் தக்கவளே, காமாட்சி அம்மையே, உன்னைத் தாலாட்டு வோமாக!***

ஊழா கியகாழ் வித்தெடுத்திவ்
வுலகி லொருசால் விதைக்கவது
ஊன்றோய் யாக்கை எனும்பயனை
உறுமா றுக்கி மாற்றுருவின்

ஏழேழ் பிறவி யாமெடுத்தும்
எமைவிட் டகலா தடுத்தடுத்தீண்
டெம்முட் கிளைத்து யாக்கையினை
எரியிட் டழித்தும் பட்டிலதால்

சூழே கம்பத் தவ்வடியார்
தோன்றாத் துணையே அவ்வினையைத்
துணைநின் விழிவேற் படைகொண்டு
துளைத்துக் களையுந் திறனுடையோய்

வாழி ரென்று வாழ்த்துமெங்கள்
மணியே தாலோ தாலேலோ!
வண்டார் பொழில்சூழ் திருக்கச்சி
மகிழ்வோய் தாலோ தாலேலோ!

**அரும்பத உரை**

*ஊழ் = பழவினை, கிளைத்து = பெருகி, எரி = தீ, பட்டிலதால் = அழிந்து போகாததால்.*

**பொருள்.**

*பழவினையாகிய விதையை ஒருமுறை இம் மண்ணுலகில் விதைக்க அது யாக்கை என்னும் விருட்சத்தைக் கொடுக்கிறது. இது உரு மாறி மாறிப் பிறந்து, தாவரம், ஊர்வன, நீர் வாழ்வன, பறவை, விலங்கு, மக்கள் தேவர் என்ற பல பிறவிகளும் எடுத்து வினை பெருகிக் கொண்டே போகிறது. யாக்கையை எரித்தும் அவ்வினை பாழ்பட்டிலது. இதனால் வருந்தும் அடியார்களின் தோன்றாத் துணையாக உள்ளவளே! நின் கூர் அயில் விழியாகிய படையினால் வினையைப் பொடித்து விலக்கி இருவினை சேரா நல்வாழ்வு வாழ்வீர்களாக என்று வாழ்த்தியருளும் காமாட்சி அம்மையே உன்னைத் தாலாட்டுவோமாக!*

வார்க்கும் ககனப் பாலமுதே
　　வையத் தமுதப் பாற்கடலாய்
　வான்றோய் முகிலே விண்கிழிய
　　　வளர்ந்தோன் கிடந்தங் கவ்வமுதை

ஈர்த்துக் கொடுவந் தித்தலத்துள்
　　இருத்தப் பழனத் தெவ்வுழியும்
　எய்யும் மலர்க்கை வாளியினன்
　　　இயன்று வளர்த்த செங்கரும்பைச்

சேர்க்கும் கையாள் மலர்க்கணையைச்
　　சிவன்றன் உள்ளத் தூடுருவிச்
　சென்றங் கவனைக் கச்சியுறச்
　　　செயும்பே ராற்றல் கொண்டுதலத்

தீர்த்தக் கரையில் நோன்பியற்றுந்
　　திருவோய் தாலோ தாலேலோ!
　சிவமா மதனிற் பங்குகொளும்
　　　திறலோய் தாலோ தாலேலோ!

**அரும்பத உரை.**

*ககனம் = ஆகாயம், வளர்ந்தோன் = நெடியமால், எவ்வுழியும் = எந்த இடத்திலும்.*

**பொருள்.**

*காமதேனு வாகிய தெய்வப்பசு சொரிந்த பாலமுதே பூமியிற் பாற் கடலாக அமைய விஷ்ணுவே வான்முகிலாக அந்தப் பாற்கடலில் படிந்து அதை முகந்து கொண்டு வந்து இக்கச்சியம் பதியில் வயல் தோறும் மழையாகப் பொழிந்து பாய, மன்மதன் முயற்சிசெய்து அவ்வயல்களில் கரும்பை வளர்க்க அக்கரும்பைக் கையில் ஏந்தி அதில் மலர்க்கணையைத் தொடுத்து சிவனுடைய உள்ளத்தில் அக்கணை பாய்ந்து அச்சிவபிரானைக் கச்சியம் பதியில் நின்னிடம் உறும்படிச் செய்யும் மிகுந்த ஆற்றல் படைத்து தீர்த்தக் கரையில் நோன்பு இயற்றும் காமாட்சி அம்மையே உன்னைத் தாலாட்டுவோ மாக!*

கமலஞ் செழித்த வாவியினிற்
களிக்கு மெருமை தம்நிரைகள்
கடிநீர் கலக்கு மவ்வாற்றான்
கண்துஞ் சாத வார்கயலும்

தமமுட் சிலம்பு கார்நுணரும்
தடத்துட் கிடக்கும் மேதிமடி
தடிக்குங் காம்பின் வாயிருத்தித்
தந்தம் வயிறுண் டாருவணம்

அமருங் கருமா தந்தறியில்
அயருங் காலை வார்க்கமுதம்
ஆங்கு வகுத்த பூம்பொழிலி
னகத்தே ஓடி வண்டிசைப்ப

சுமங்கள் பூப்ப சடைமுடியில்
சுமப்போய் தாலோ தாலேலோ!
தொண்டைக் கணிசெய் கச்சியமர்
சுகமே தாலோ தாலேலோ!

**அரும்பதவுரை**

*கமலம் = தாமரை, வாவி = தடாகம், நிரை = கூட்டம், கடிநீர் = புது மணம் பொருந்திய சலம், தமமுட் சிலம்பு கார் நுணரும் = இருட்டில் சப்திக்கும் கறுத்த தவளைகளும், ஆருவணம் = நிறையும்படி, தறி = கட்டுத் தறி, சுமங்கள் = மலர்கள்.*

**பொருள்,**

*தாமரை செழித்து மலர்ந்த தடாகத்தில் விளையாடிக் களிக்கும் எருமைக் கூட்டங்கள் நீரைக் கலக்குவதால் தூக்க முறாத கயல்களும், இருட்டில் சப்திக்கும் தவளைகளும், நீரிற் கிடந்த எருமைகளின் முலைக் காம்பில் வாய்வைத்து வயிறார உண்டபின், அவ்வெருமைகள் தம் கட்டுத் தறியில் கிடக்கையில் வடிக்கும் பால் பக்கத்தில் உள்ள பூம்பொழிலிற் பாய்ந்து வண்டுகள் சப்திக்கும் வண்ணம் மலரும் புட்பங்களைச் சூடும் காமாட்சி அம்மையே உன்னைத் தாலாட்டுவோ மாக!*

வைவா ணெடுங்கண் செஞ்சடைச்சி
வாரங் குலவு மங்கயற்கண்
வண்ணங் கண்ட வாவிகயல்
மருவும் பெடையோ வெனமயங்கி

சையோ கையினை நோக்கியெழுஞ்
சமயத் தாங்கு வானவெளி
தாவும் பைங்கால் வெண்குருகு
தம்மை யுண்ணப் போந்ததெனக்

கையாற் றுங்கும் மலர்க்கணையை
கண்மூன் றுடையான் தன்னகத்திற்
காம மெழுப்பி ஏவுவதைக்
காணும் கயலுட் பாய்ந்தொளியச்

செய்வாய் கச்சிச் சிறுகுழவித்
தேவீ தாலோ தாலேலோ!
திருமா லனுக் கிளையளனுஞ்
செல்வீ தாலோ தாலேலோ!

**அரும்பத உரை.**

*வை = கூர்மையான, வாரம் = அன்பு, வாவி = தடாகம், பெடை = பெட்டை, சையோ கையினை = பரமேஸ்வரனுக்கு இன்பந்தரும் பராசக்தி யாகிய காமாட்சி அம்மையை.*

**பொருள்.**

*கூர்மையான வாளைப்போன்ற கண்களையுடையவளும் சிவந்த சடையை உடையவளுமாகிய தவசி காமாட்சி அம்மையின் கண்களைக் கண்டு வாவியில் உள்ள கயல்கள் அவைகளைத் தம் பெடையெனக் காதல்கொண்டு ஆங்குச் செல்ல வேண்டி நீரில் பாய்ந்து அம்மையை நோக்கிச் செல்லும் போது, அம்மை பரமசிவனிடம் ஏவி விடும் மலர்க் கணையை ஆகாய வெளியில் பாயக் கண்டு அக்கயல்கள் தம்மைப் பிடித்து உண்ணும் வெண்குருகு என அம் மலர்க் கணையைக் கண்டு அச்சமுற்று நீருக்குள் பாய்ந்து ஒளியச் செய்யும் குழந்தை காமாட்சியே உன்னைத் தாலாட்டுவோமாக!*

அடுக்குந் தொகைசேர் அக்கரங்கள்
அரும்புஞ் சொல்லாய்ச் சொல்லினமர்
அருட்பே றென்னுஞ் செல்வமெலாம்
அளிக்கக் கண்டு தொண்டர்குழாம்

தொடுக்கும் புகழ்ப்பா மாலையினுள்
துளிக்கும் பொருளை ஒருங்கெடுத்துச்
சுவைத்துத் திளைக்குந் திருவுடைய
சுரும்பே போன்று காதலொடு

படுத்துச் சேக்கை யுண்ணுகர்ந்து
பயன்துய்த் ததனல் இனிதெய்தி
. பத்தர்க் கரிய பொங்கலுணப்
பரிவான் றருவ மென்னுமொழி

கொடுக்கும் வாக்கா மிசைகூட்டுங்
கொடியே தாலோ தாலேலோ!
கோயில் கொண்டு கஞ்சியிடம்
கொண்டோய் தாலோ தாலேலோ!

**அரும்பத உரை.**

*அக்கரங்கள் = எழுத்துக்கள், அரும்பும் = சொல்லாக உண்டாகும், துளிக்கும் = துளி துளியாகச் சொட்டுகின்ற, சேக்கை = படுக்கை. நுகர்ந்து = தேனை யுண்டு.*

**பொருள்,**

*தமிழ் எழுத்துக்களால் ஆன சொல்லில் தொக்கி இருக்கின்ற அம்மையின் அருட்பேற்றை அச்சொற்கள் அன்பர்களுக்குத் தரக் கண்ட அடியவர் அச்சொற்களைக் கொண்டு செய்யும் புகழ்ப்பா மாலையினுள் துளி துளியாகப் பெருக் கெடுத்த அருள் வெள்ளத்தைச் சுவைத்து மலர் மாலையில் இன்புறும் வண்டு பிறருக்கும் தேனை அளிப்பதுபோல, அப் புகழ் மாலை தொடுத்துள்ள சொன்மலர் தொறும் படுத்து இன்பம் அனுபவித்து அனுபவித்த இன்பத்தைப்பிறருக்கும் அளிப்பதாக வாக்கு கொடுக்கும் இனியமொழி பகர்பவளே, காஞ்சி காமாட்சியே, உன்னைத் தாலாட்டுவோமாக!*

*மூன்ருவது தாலப் பருவம் முற்றிற்று.*

## நான்காவது சப்பாணிப் பருவம்.

மாதவஞ் செய்யுந ரரனிடம் பெறுவர
வன்மையின் அந்த தேவை
வஞ்சிக்க வேயெண்ணு மதிசயங் கண்டுனது
மாவளைக் கைக ளார்ப்ப

சீதரன் முக்கணன் றிகைவுறும் பொழுதத்துஞ்
சென்னிகை ஒட்டு போதும்
சென்றவர்க் கின்புசெய் பரிபவம் உணர்தொறும்
செவ்விதழ் நக்கு பூப்ப

காதலான் வேதனைக் கடிமணம் புரியுமக்
கால்கலை வாணி தன்னைக்
கைப்பிடித் தன்பிறுற் றழுவுத லிலாதவன்
கட்டிபோல் நாக்கி ருத்திச்

சாதகஞ் செய்தமி ழதுகண்டு விருகையாற்
சப்பாணி கொட்டி யருளே!
தம்பிரா னுகமு டிடம்பகிர் தவமகள்
சப்பாணி கொட்டியருளே!

**அரும்பத உரை**

*ஆர்ப்ப = சப்திக்க, சீதரன் = விஷ்ணு, முக்கணன் = பரமசிவன், பரிபவம் = எளிமை, சென்னி = பிரம்ம கபாலம், நக்குபூப்ப = எள்ளி நகைக்க. கட்டி = கற்கண்டு. சாதகம் = பயிற்சி.*

**பொருள்,**

*தவச்சிரேட்டர்கள் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்து அப் பரமசிவனிடம் பெறுகின்ற வரத்தின் மகிமையால் அப்பர னுக்கே வஞ்சகமாக நடப்பது கண்டும், அச்சமயம் என்ன செய்வது என்று உணராது சிவபிரான் கலக்கமுறுவது கண்டும், அவன் கையில் பிரம்ம கபாலம் ஒட்டிக்கொள்ள அதை எப்படி நீக்குவது என்று திகைத்ததைக் கண்டும், விஷ்ணு சிவனுக்காகப் பரிந்து உதவியது கண்டும், மணம் செய்துகொண்ட பிரமன் தன் மனைவி கலைமகளை உடலுறத் தழுவாமல் கற்கண்டைச் சுவைப்பதுபோல் அக்கலைவாணியை நாக்கில் வைத்துப் பிரமன் தமிழ்மறை பயில்வதைக் கண்டும், கைவளையல்கள் ஆர்ப்ப காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

ஆறுமுக னேடுகுற மாதொடுக ளித்துவிளை
யாடுபோ தங்க மொன்றி
அம்மையவ ளாரமுத மென்னுமது வாய்பொழிய
அள்ளியுண் ணற்கு வாயின்

ஊறுநசை யோடினிய கோவையித ழேபருக
உள்ளங்க ளிக்கு செவ்வேள்
ஒன்றுமுக மின்னதென ஐயுறுவ னவ்வளவில்
ஓடிக்க ரந்து நிற்ப

மாறுபடு சிந்தையொடு மஞ்சையிலி வர்ந்துகுற
வள்ளியைப் பின்றொ டர்ந்து
வாவுமுரு கோர்ஙைவிழி காணுபொழு தெள்ளிநகு
வாயிதழ் கள்ளு திர்க்க

சாறுமிழ இக்குவய லூறுவள கச்சியுமை
சப்பாணி கொட்டி யருளே!
தாவுகுயில் பாடமயி லாடுநகர் மேவுமகள்
சப்பாணி கொட்டி யருளே!



**அரும்பத உரை**

*ஓடுகுறமாது = ஓடிவிளையாடுகின்ற வள்ளி, அங்க மொன்றி = உடலோடு உடல் பொருந்தி, நசை = ஆசை, செவ்வேள் = முருகன், கரந்து = மறைந்து, மாறுபடு = வேறுபட்ட, மஞ்சை = மயில், வாவு = பாய்ந்து செல்லும்.*

**பொருள்.**

*ஆறுமுகக் கடவுள், ஓடி விளையாடுகின்ற வள்ளியுடன் களித்து விளையாடும்போது உடலோடு உடல் பொருந்தி வள்ளியின் வாயின் ஊறலை அவள் உதட்டில் சுவைக்கும் ஆசை கொண்டு தன் ஆறு முகங்களில் எந்த முகத்தை வள்ளியின் முகத்தோடு வைத்து வள்ளி வாயின் அமுத பானம் செய்வது என்று சந்தேகமுற்ற அப்போது வள்ளி விளையாட்டாக ஓடி மறைய ஆறுமுகன் அதுசமயம் ஏமாற்ற மடைந்த மனத்துடன் வள்ளி எங்குற்றாள் என்று மயில்மீது ஏறிப் பாய்ச்சலாகச் சென்று தேடுவதைக் கண்டு ஏளனமாகச் சிரித்து குழந்தை காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

## சப்பாணிப் பருவம்

சங்கறுத் தொள்வளைகள் சங்கரிக் கங்கையில்
தங்குமா றிட்டு பெற்ற
சௌபாக்கி யப்பெருஞ் செல்வச்செ ருக்குடைய
தாமரை மேய மாது

தங்கும்பு யற்கடவு னெங்கும்நி றைந்தபொருள்
தண்கடல் மச்ச மாகி
சாலவட் டத்திகிரி யூதுசங் கேந்திபின்
தன்கரம் நழுவ விட்டுச்

செங்கணுன் கூர்மமுற் றெய்துமு னவ்விரு
செஞ்சுட ரணிகள் பூண்டு
செங்கரத் தின்னபடி யேயணியு கைவளை
திங்கள்காண் போதி லாழி

சங்கங்கு விக்குமலை என்னச்சி லம்புவணம்
சப்பாணி கொட்டி யருளே!
தண்ணென்தி ருக்கச்சி தங்குங்கு லக்கொடீ!
சப்பாணி கொட்டி யருளே!

**அரும்பத உரை**

*ஒள்வளைகள் = ஒளியோடுக் கூடிய வளையல்கள், சௌபாக்கியம் = அட்ட ஐசுவர்யம், மிகுந்த பாக்கியம், புயற்கடவுள் = விஷ்ணு, ஆழி = சமுத்திரம்.*

**பொருள்.**

*சங்குகளை அறுத்து பிரகாசிக்கின்ற வளையல்களாகச் செய்து பரமேஸ்வரியின் கையில் என்றும் அணியும்படி கொடுத்து அதனால் அட்ட ஐசுவரியங்களையும் அடைந்த இலக்குமி மார்பில் தங்கிய புயற் கடவுளாகிய மகாவிஷ்ணு மச்சாவதாரம் எடுத்துவந்து, சங்கு சக்கரங் களைப் போட்டுவிட்டு மறைந்தபோது அவைகளை வளையல்களாகப் பயன் படுத்தி அதுபோலவே மகாவிஷ்ணு ஒவ்வொரு அவதாரத்திலும் செய்து இப்படியே கையில் நிறைய வளையல்கள் பூண்டு, பூண்ட வளையல்கள் சந்திரனைக்கண்ட சமுத்திரம் அலைகள் பெருக்கத்தினுல் சப்திப்பதுபோல் சப்திக்கும் வண்ணம் காஞ்சி காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

கஞ்சங்க றங்கஇடை மின்னின்று வண்டலைய
காற்சிலம் பொத்தி சைப்ப
காடுகுழல் போதுதிர வாடியிசை பாடிகலை
வாணிபர தம்ப யின்று

செஞ்சொற்க லைப்பொதிகை தன்னிற்பி றந்தஇளந்
தென்றற்க ளித்து மாங்கு
தேனிழிந ரம்பிருப தோடொன்று கூடியாழ்
செங்கரங் கொண்டு மீட்ட

பஞ்சொத்த கஞ்சமலர் கன்றும்ப டிக்கொட்டி
பண்ணின்க ரங்க ளார்ப்ப
பாகொழுகு வாயமு தோடுவிழி வார்க்கமுது
பாயநின் அன்ப ரார்க்குத்

தஞ்சந்த ருட்கடலெம் கஞ்சிப திக்கிறைவி
சப்பாணி கொட்டி யருளே!
சைவந்த ழைக்கமழை பெய்யும்ப யிற்குழவி
சப்பாணி கொட்டி யருளே!

**அரும்பத உரை**

*கஞ்சம் = கைத்தாளம், கறங்க = ஒலிக்க, காடுகுழல் = குழற்காடு, போது = புட்பம், பரதம் = பரத நாட்டியம், செஞ்சொற்கலைப் பொதிகை = இனிய தமிழ் பிறந்து வளர்ந்த பொதிகை மலை, கஞ்சமலர் = தாமரை மலர்.*

**பொருள்.**

*துருவம், மட்டியம், உருபகம், சம்பை, திரிபுடை அடதாளம், ஏக தாளம் என்ற தாள ஒலிகளை எழுப்பும் கைத்தாளம் ஒலிக்க இடை மின்னலை விட துவண்டு அலைய, இதற்கு ஒப்ப காலில் அணிந்த சிலம்பு சப்திக்க, குழலில் சூடிய மலர் உதிரும்படி ஆடி, இசைபாடி, தென்பொதிகையிலிருந்து தமிழ்க் கலையுடன் உண்டாகிய இளந்தென்றல் வீசக் களித்து இருபத்தொரு நரம்போடு கூடிய பேரியாழ் வாசித்து நின்னிடம் கலைவாணி பரத நாட்டியம் பயிலும்படி நின் மெல்லிய மலர்க் கரங்கள் கன்றும் படிக்குக் கொட்டி கைகள் சப்திக்கவும், வாயமுதத்தோடு கண்ணின் அமுது கலந்து பாய நின் அடியார்க்கு அவர்கள் தஞ்ச மென்ற பொழுது அருள்புரியும் காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

நெய்யிட்ட காட்டுநடு வேயொழுகு கந்தமணி
நெற்றியிற் றிலக மோடு
நெட்டாழி யாயகரு ணைக்கடையி லிடைபுகு
நீள்புயற் றுரை யாக

மையிட்ட கண்ணவையி ற்றுள்ளிட்ட அமுதினை
வாரியுண் கழும லத்து
மாமறைக ளைன்குமறை ஆண்டபிளை ஏழிசையின்
வண்டமிழ்ப் பாட லோத

கையிட்ட மின்வட்ட பொற்றள மோடொலிசெய்
கல்லெனுஞ் சப்த மீந்து
காழியற் கன்றுதவு கஞ்சங்க ளோநோக
கஞ்சிகா மாட்சி அம்மை

தையிட்ட தாளவொலி கைகொட்டி யேமகிழ
சப்பாணி கொட்டி யருளே!
சைவந்த ழைக்கமழை பெய்யும்மு கிற்குழலி
சப்பாணி கொட்டி யருளே!



**அரும்பத உரை**

*நெய்=கூந்தல் நெய், கந்தம் = வாசனைத்தைலம், அறை = சொல்லிய, ஆண்டபிள்ளை = திருஞான சம்பந்தர், தை = தாளக்குறிப்பின் ஒன்று.*

**பொருள்.**

*கூந்தல்நெய் இட்ட குழற்காட்டிலிருந்து வடிந்த வாசனையோடுக் கூடிய அந்த நெய் நெற்றியில் இட்டுள்ள கத்தூரி திலகத்தோடுங் கலந்து வெள்ளம் போற் கண்ணிற் பொழிய அமுதம் நிறைந்த நின் கண்ணுக்குத் தீட்டிய மையோடுக் கூடிய அக்கருணைக் கடலைப்பருகிய சீகாழி திருஞான சம்பந்தன் ஏழு இசையுடன் கூடிய தேவாரம் பாடுதற்குத் துணையாகத்தாளமும், அதற்குச் சப்தமும் கொடுத்து உதவிய காரணத் தால் நின்னிடம் தாளமின்றி கைத்தலங்கள் நோக கஞ்சி காமாட்சி அம்மையே "தை" என்ற சப்த மெழச்சப்பாணி கொட்டுக!*

மேகமுட னாடுமுழு சோமனையுண் டாறலைகொள்
வேகமுறு நங்கை யுண்டு
வேதமணி காடுசடை யூடுழையு லாவிவிளை
யாடியெழு நாக மிப்பால்

தாகமொடு மாதிருவர் காமநுகர் ஆறுமுகன்
தாணுசிவ பால னேவு
சத்தியயி லாலசுரர் உட்கவெளி வானுலகு
தாவுதிற லோனி வர்ந்த

வாகனம யூரமொயி லானஉரு வானலகில்
வாயினுற உய்த்து வாங்கி
வள்ளுகிரொ டேகொடிய கால்களிடை யேபுரளு
மாறுபடு கால முன்னி

சாகவுண வாலமர்த போதனர்கள் சூழ்தவசி
சப்பாணி கொட்டி யருளே!
சைவந்த ழைக்கமழை பெய்யும்மு கிற்குழலி
சப்பாணி கொட்டி யருளே!

**அரும்பத உரை**

*சோமன் = சந்திரன், ஆறு அலைகொள் வேகமுறு நங்கை = ஆகாய கங்கை, ஊடு உழை = உள் இடத்தில், தாகம் = ஆசை, தாணு = சிவ பெருமான், வள் உகிர் = வலிய நகம், சாகம் = இலை, கீரை முதலியன,*

**பொருள்.**

*மேகத்துடன் ஆடுகின்ற பூரண சந்திரனையுண்டு அலையோடுங் கூடிய ஆறுகிய நங்கை என்னும் ஆகாய கங்கையை உண்டு, சிவபிரானின் சென்னியில் சடைக் காட்டில் முற்காலத்தில் உலவிய பாம்பு, இப்போது சிவபிரானின் குமாரனாகியவனும், இரண்டு மாதரின் காமத்தை நுகர்கின்ற வனும், சக்திவேல் கொண்டு அசுரரை வென்று வீழ்த்திய வனுமாகிய சிறியவன் ஊர்ந்த மயூரம் அப் பாம்பை சிவன் சடையிலிருந்து வாயினால் வாங்கி வலிய நகங்களோடுங் கூடிய பாதங்களிடையே புரளும்படிச் செய்யும் காலம் நேர்ந்தமையைப் பற்றி நினைந்து, தபோதனர்கள் வாழும் கச்சியில் தவக் கோலத்துடன் அமர்ந்த காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

தட்டுமு ழக்கொலி வெட்டவெ ளிக்குள்த
கர்த்துகி ழித்தேக
தப்புசி றும்பறை சில்லரி பாண்டிலின்
தாளமொ டுஞ்சேர்த்துக்

கொட்டுமி டைத்துடி யாழ்முர சத்தொடு
கோனுகு ழற்கொண்டு
கூட்டுமி சைக்கமை பாட்டுமி டற்றுமொர்
கூட்டமெ ழுந்தாட

அட்டநெ டுந்திசை கட்டுத றிக்கயம்
அத்தமெ டுத்தாட
ஆடுபெ ருங்கிரி போலவ சைந்திடு
ஆட்டுக ரங்கொண்டு

கொட்டும லர்க்கொடி யொத்தப சுங்கிளை
கொட்டுக சப்பாணி !
கொத்துவி ளக்குயர் கச்சிசு டர்க்கொடி
கொட்டுக சப்பாணி !



**அரும்பத உரை.**

*முழக்கொலி = முழக்குகின்ற ஒலி, சில்லரி = நாகசுரம், பாண்டிலின் தாளம் = பிரமதாளம் எனப்படும் பெரிய தாளம் தரும் இனிய தாளஒலி, இடைத்துடி = இடையை உடையதுடி, யாழ் = நரம்புக் கருவியின் இனம், கோனுகுழல் = கோணைக் கொம்பு, மிடற்று = வாயினால் பாடும், அத்தம் = துதிக்கை, கொட்டு மலர்க்கொடி = மலர்களைச் சொரிகின்ற மலர்க்கொடிக் கொம்பு.*

**பொருள்**

*தட்டி முழக்கிய தோற்கருவியின் ஒலி வெட்ட வெளியைக் கிழித்துக் கொண்டு செல்லும்படி, தப்பு, சிறுபறைகள் கொட்டப்பட்டு சப்திக்க அத்துடன் பிரம்ம தாளமும் யாழும் ஒக்க இசைத்து, அடிக்கப்பட்ட துடி முரசம் இவைகளுடன் கோணைக் கொம்பும் நாகசுரமும் ஊதப்பெற இப்படியாக இசைக்கப்பட்ட, தோல் துளை, நரம்பு, கஞ்ச வாத்தியங்களுடன் ஒக்க வாய்ப்பாட்டு பாடுகின்ற பெண்கள் கூட்டம் எழுந்து ஆடவும், அட்டதிக்கில் உள்ள யானைகள் தங்கள் துதிக்கைகளைத் தூக்கி ஆடவும், பெரியமலை அசைந்தது போல் இரண்டு கைகளையும் அசைத்து காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

## சப்பாணிப் பருவம்.

வங்கிய வொண்பிறை செஞ்சடை தங்கிம
கிழ்ந்தபெண் தன்னோடு
வானுற வேவளர் காமநெ டுங்கடை
மாதிட மாய்ச்சேர

நங்கைய வர்க்குளெ ழுந்தபெ ரும்பகை
நஞ்சமர் கண்டத்தான்
நன்றல வென்றுவெ றுக்கினு மன்னவர்
நட்பினி ருந்தாரில்

வங்கபெ ருங்கடல் கங்கைபு குந்திட
மைவணி மண்ணெய்த
வார்சடை யோன்றனி யாய்த்தவ மாக்கும
னத்துடை யோனென்று

கொங்கவிழ் காஞ்சிபொ ழிற்சுக பெண்பிளை
கொட்டுக சப்பாணி!
கூடமி டத்தவன் கூடுமி டத்தவள்
கொட்டுக சப்பாணி!

**அரும்பத உரை**

*செஞ்சடை தங்கி மகிழ்ந்த பெண் = கங்கை, வங்கிய = வளைந்த வங்கம் = உப்பு.*

**பொருள்.**

*வளைந்த பிரகாசமான பிறைச் சந்திரன் உலவும் செஞ்சடையில் தங்கி மகிழ்ந்த கங்கை யோடு வானெலாம் வளர்ந்த காம விழியாள் ஆகிய உமையம்மை இடப் பக்கத்திற் சேர இவர்கள் இருவர்களுக்குள் உண்டான பெரும் பகையைக் கண்ட பரமேஸ்வரன் அத்தகைய பகைமை நல்ல தல்ல வென்று வெறுப்பினுங் கூட அவர்கள் நட்போடு இல்லாமல், கங்கை சமுத்திரத்திற் குதித்தாள், உமையம்மை மண்ணிற் சிறந்த கஞ்சியில் வந்து குதித்தாள். பரமசிவன் ஏகாங்கியாகத் தவஞ் செய்ய மனந் துணிந்ததைக் கண்டு காஞ்சி காமாட்சியே சப்பாணி கொட்டுக!*

மிண்டுயிர் வாழ்சம ணென்னும தத்தினர்
வீயவ னன்னீரில்
வெற்றிபெ றச்சிவ சத்திய ளித்தருள்
விப்பிர ரோடப்பர்

மண்டல மீதுயிர் தன்பதி யேயடை
வண்ணமெ டுத்தோதி
வானிடை நீடிய மால்வரை யேயென
வந்தவர் தம்மூடே

பண்டுபி றந்துவ ளர்ந்துத வழ்ந்திவண்
பன்னுதி ருக்கச்சி
பத்தரி டைச்சிவ பத்திவ ளர்க்குமெம்
பச்சையி ளம்பிள்ளாய்

கொண்டலு யர்ந்துபொ ழிந்தக ளிப்பொடு
கொட்டுக சப்பாணி!
கூடுப சுந்தளி ரன்னக ரங்கொடு
கொட்டுக சப்பாணி!

**அரும்பத உரை**

*மிண்டுயிர் வாழ்சமண் = மதத்திளுல் வாழும் சமண மதத்தினர், வீயவனன்னீரில் = கனல் சோதனையிலும், சலசோதனையிலும் தொலைய, சிவசத்தி = சிவனும் சத்தியும், விப்பிரன் = திருஞானசம்பந்தன்.*

**பொருள்.**

*மதத்திளுல் உயிர்வாழ்ந்த சமணமத வாதியர் தொலையும்படி அவர்களைக் கனல், சல சோதனையில் வெற்றிபெறும் வண்ணம் சிவனும் சத்தியும் இவ்வுலகத்துக்கு அளித்த திருஞான சம்பந்தரும் அவருடைய அப்பரும் நீரையும் நெருப்பையும் எதிர்த்த வன்மையுடன் மண்ணுலகத்தில் உயிர்கள் தன்பதியை அடையும் வழிகளை எடுத்துரைத்து வான் அளாவிய மலைகள் போன்று தோன்றுமவர்களுக்கு இடையில் முன் பிறந்து வளர்ந்து கச்சிக்கு வந்துள்ள காமாட்சி அம்மையே தொண்டர்களுக்குச் சிவ பக்தியை வளர்த்துச் சப்பாணி கொட்டுக!*

பூதலத் திறையவர்க் கன்புசெய் யடியவர்
போற்றுவ தோரான்மா
பூதமந் திரஇலிங் கந்திர வியமெனப்
பூசையஞ் சுத்தங்கள்

ஆதரித் திருமையி னிட்டுமுப் பொருளவை
ஆக்கிவீட் டிற்புக்கு
மந்நெறிப் படியினின் றுய்குவ ரெனவெணு
மவ்வெண மோராதார்

காதலித் தறுசுவை யுண்டியிட் டுடலினைக்
கட்டுடை யாற்போர்த்தி
கட்டிலிற் றழுவுநங் கைச்சுகங் களியுறக்
கண்டதை எள்ளிப்போய்

கூடதலற் பழுவம டப்பிடி பொருமகள்
கொட்டுக சப்பாணி !
கோபுர மொடுமதி லாலய முடைமகள்
கொட்டுக சப்பாணி !

**அரும்பத உரை**

*பூசையஞ்சுத்தங்கள் = ஆராதனைக்காய ஐந்துசுத்தங்கள், இருமை யின் = பெருமையுடன், முப்பொருள் = அறம், பொருள், இன்பம் —வீடு = சொர்க்கம், அறுசுவை = உவர்ப்பு, புளிப்பு, கைப்பு, இனிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, கூடதலற் பழுவ மடப்பிடி பொருவுமை = குளிர்ந்து இருண்ட வனத்தை யிடமாக உள்ள இளம் பெண் யானையை ஒத்த உமையம்மை.*

**பொருள்.**

*இம்மண்ணுலகில் இறையவர்க்கு அடியவர், ஆன்ம சுத்தம், மந்திர சுத்தம், இலிங்க சுத்தம், திரவிய சுத்தம், பூத சுத்தம் என்னும் ஐந்து சுத்தங்களோடும், அன்பு செய்து, அறம், பொருள் இன்பம் ஆய முப் பொருளும், ஆக்கி மோட்ச வீடு எய்தும் நன்னெறியில் மக்கள் நிற்பார்க ளென்ன அம்மையாகிய நீ எண்ணுங்கால், மக்கள் உண்டி, உடை, நங்கை யர் மோகம், களித்தல் என்னும் நான்கு சிற்றின்பங்களில் ஆழ்ந்து வாழ்க்கையை வீணாக்குவதைக்கண்டு எள்ளிக் காமாட்சி அம்மையே சப்பாணி கொட்டுக!*

*நான்காவது சப்பாணிப் பருவம் முற்றிற்று.*

## ஐந்தாவது முத்தப் பருவம்.

அரும்புநுனி சிலம்புவரி அலம்புமது நிரம்புகுழல்
அகங்குளிர விரும்புமுமை மிக்கக் ருபாகரி
அறஞ்செயவிங் கமர்ந்துகொடை மிகுந்தவணம் தருந்தவசி
அருங்குணிதண் இலந்தைகரை நிற்குஞ் சடாதரி

கரும்புமொழி துலங்குவிழி இலங்குமணி புலம்புகழல்
கலம்பகமெல் லுடம்புதனில் அப்பும் மனோன்மணி
கரும்புசிலை மலர்ந்தகணை விளங்குகர மலங்குசநீள்
கருங்கயிறு நிமிர்ந்தகரந் தங்குந் தபோதனி

சுரும்புமுரல் வனங்கமழ தடங்குலவு வளங்கொழிய
துலங்குமொரு அணங்கெமது கண்ணுக் குளாளவள்
சுடர்மவுலி புனைந்தமுடி அருங்குதலை மடப்பெண்ணொடு
துளிர்துளவர் நெருங்கியுயர் முத்தங் கொடாயென

விரும்புமெம துளங்குலவு மிளங்குழவி எனும்பரிவு
மிகுந்தவது மகிழ்ந்துனது முத்தம் பெணேயருள்!
வெருண்டகலை இரண்டுவிழி பொருந்துமென மருண்டவிழி
விருந்துசமை அரும்பதநன் முத்தம் பெணேயருள்!

**அரும்பத உரை**

*அலர்பு = வழிகின்ற, இலந்தை = குளம், கலம்பகம் = கலவைச்சாந்து, மலங்குசம் = மல் அங்குசம், வலிமை பொருந்திய அங்குசம், தடம் = தடாகம், மவுலி = கிரீடம், கலை = மான்.*

**பொருள்.**

*வண்டுகள் மலர்களில் உண்டு உமிழ்ந்த தேன் அபிடேகத்தால் உள்ளங் குளிர்ந்தவள், மிகுந்த கருணை உடையவள், தவஞ்செய்து முப்பத்திரண்டு அறங்களும் புரிந்து கம்பா நதிக்கரையில் அமர்ந்துள்ளவள், ஒளி பொருந்தியதும், சப்திக்கக்கூடியதுமான அணிகளணிந்து கலவைச் சாந்து திருமேனியில் அப்பியவள், சடாமுடியை உடையவள், நற்குண முடையவுள், கரும்புவில், மலர்க்கணை, பாசம், அங்குசம் ஏந்திய கரத்தினள், வனத்தில் அமர்ந்துள்ள பெண், எமது கண்களில் உள்ளவள், மாயோன் நூற்றெண்மரும் தங்களுக்கு முத்தம் கொடுக்கவேண்டுமென்று வேண்ட முத்தம் தருக !*

## முத்தப் பருவம்.

இருட்டறையு ளொளித்துதிரக் கருக்குழியி லுதித்தவுரு
இருக்குபொழு தருத்துவுண வுண்ணும் நிணுசயம்
இயற்றுமறு தலத்தொடது தசக்கயிறு பிணிக்கசதை
இரத்தமிர தசுக்கிலமெ லும்புஞ் சதாநிணே

வுருத்துமிட முடற்சரும மெனத்தகுமிப் பொருட்களமை
உருக்கொடெழு மருத்தரவர் உள்நின் றுலாவிட
ஒழுக்குடைய மலச்சலதி யுதக்குநவ பிலத்தொடமர்
உடற்குநசை மிகுத்துடையெம் உள்ளங் குலாவிய

விருத்தன்சிவ நிருத்தனிடம் பொருத்துமுளம் படைத்தெதையும்
வெறுத்துமக மியற்றிவனம் வைகுந் தபோதனர்
மிகுத்தியல்கொண் டருச்சனைசெய் தவத்தினளுக் கருத்துகனி
விருப்பின்மது அகழ்த்தகிழங் கின்னும் பழாவகை

பருப்புமலர் துளிர்த்ததளிர் செழித்தஇலை சமித்திவைகள்
படைத்தவர்கள் செழிக்குவணம் முத்தம் பெணேயருள்!
பணித்தசிலை தொடுத்தமலர்க் கணைக்கிறைவ ருளத்தினிடம்
பகுத்துடலை அளிக்கவல முத்தம் பெணேயருள்!

---

**அரும்பத உரை**

*அறுதலம் = மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, தசக் கயிறு = அத்தி, அலம்புடா, இடை, காந்தாரி, குஹூ, சங்கினி, சிகுவை, சுழிமுனை, பிங்கலை. புருஷன், சத்த தாதுக்கள் ஆகிய, சதை, இரத்தம், சுக்கிலம், இரசம், மூளை, எலும்பு, தோல், எழு மருத்தர் = எழுகின்ற பத்து வகைக் காற்றுக்கள் ஆகிய அபானன், உதானன், கிருகரன், கூர்மன், சமானன், தனஞ்சயன், தேவதத்தன், நாகன், பிராணன், வியானன், மகம் = யாகம், மிகுத்தியல் = வில்வம்.*

**பொருள்,**

*இருண்ட உதரத்தில், உதிரக்குழியில், உற்பத்தியாகி அங்கு ஊட்டப் படும் உணவை அருந்தும் கரு ஆறு ஆதாரத்துடன், தசநாடிகளால் கட்டப்பட்டு, சத்த தாதுக்களால் ஆன உருவில் பத்து காற்றுக்கள் உள்ளே உலாவ நவத்துவாரத்தோடுங் கூடிய உடம்பின்மேல் ஆசைவைத் துள்ள எம்முள்ளத்தில் கலந்த சிவனிடத்தில் சிந்தையை நிலை நாட்டி மற்றெதையும் வெறுத்து யாகம் செய்து வனத்தில் வாழும் தபோதனர், பரமேசுரனுக்கு வில்வார்ச்சனை செய்யும் காமாட்சி அம்மையாகிய உனக்கு, கனி, மது, கிழங்கு, காய், மலர், தளிர், இலை, சமித்து இவை களைத் தருவித்துக் கொடுக்குமவர்கள் செழிக்கு வண்ணம் முத்தம் தருவாயாக!*

மலைக்கரசி தனத்திலெழு கடற்பருகு முகிற்குழவி
மகிழ்ச்சியொடு கறக்கமுதம் என்னக் கலாவிநன்
மணத்தொடுவாய் கடற்கடைமந் தரத்தைநிகர் சுழற்றியுமிழ்
வடிக்கமிழ்து சுவைத்திடுநா நன்னர் சுலாவிட

கலைச்சுருதி எனக்குதலைச் சொலைப்பொழியும் இதழ்க்கனிகள்
கடற்கரையொத் தெவர்க்குமளித் தின்பம் பராவிட
களித்தடியர் தமக்கமுது கொடுத்தவர்தம் பிறப்புததி
கடக்கவல தனிக்கருணை அன்பின் கொடாயென

நிலைத்தநகர் எனத்தகுமிப் புரத்திலிறை யவர்க்குநிதம்
நெறிப்படிநின் றருக்கியநீர் தந்தும் பதாம்புயம்
நினைத்துபுனல் விடுத்துமவர் குடிக்கமுத மளித்துமிக
நெடிக்கலவை விளக்குமலர் சொல்லும் நிவேதனம்

இலைப்படிகம் குடைக்கவரி அசைச்சிவிரி நிருத்தமிசை
இனித்தபுகை யொடுக்கருவி யின்பம் நலாரதி
எடுத்துணுமவ் விடத்தினிடர் தவிர்த்தகரங் குவித்தவரோ
டிணைத்திறுக அணைத்திடுமம் முத்தம் பெணேயருள்!

**அரும்பத உரை**

*கலாவி = கலந்து, சுலாவிட = சுழற்றிட, மந்தரம் = மந்தரமலை, பராவிட = பரவிட, பிறப்பு உததி = பிறவிப் பெருங்கடல், இலைப்படிகம் = தட்டையாகிய முகம் பார்க்கும் கண்ணாடி, நலாரதி = நல் + ஆரதி, நல்ல ஆலாத்தி.*

**பொருள்,**

*மலைக்கு அரசியாகிய உன் தாயின் தனங்களில் உண்டாகிய பாற் கடலைப் பருகும் முகில்போன்ற குழந்தை நீ மகிழ்ந்து நின்வாயினுள் ஊற் றெடுக்கும் அமுதமும் கூடிய அந்தக்கடலில நாவாகிய மந்தரமலை கடைய, அந்தவாயினின்றும் மறைகள் உண்டாக. அதை எவர்க்கும் அளித்து இன்பம் உண்டாகும்படி வாயின் அமுதத்தையும் கொடுத்து அதன் பயனால் அடியார்களின் பிறப்பு நீங்க அருள்புரிய வேண்டுமென்று அடியார்கள் வேண்ட நிலையாகிய காஞ்சியில் இறையவர்க்கு அருக்கியம், பாத்தியம, ஆசமனீயம், கந்தம், புட்பம், நைவேத்தியம், தூபம், தீபம், ஆலத்தி, கண்ணாடி, குடை, சாமரம், ஆலவட்டம், நிருத்தம், கீதம், வாத்தி யம் ஆகிய பதினாறு உபசாரமும் செய்து, அவரைத்தொழுது, முன்னால் அவர் உண்ட விடத்தை நெஞ்சுக்குள் செல்லாதபடி தடுத்த அந்தக் கரங் களால் அவரை அணைத்துத் தரும் ஒப்பற்ற முத்தத்தை அடியேங் களுக்குக் குழந்தையாக காமாட்சி அம்மையே முத்தம் தருக!*

சுரபியைந் தவைகலந் தாட்டுநின் மலிமிகச்
சுவைமிகு பஞ்சா மிர்தம்
சுளைபலா கதலியோ டொட்டுமாங் கனிவகை
துளித்தவின் சாற்றி னோடு

விரவுசெங் கன்னலின் சாறுநெய் நறவுடன்
வெண்கட்டி பொடியு மிட்டு
வெம்மையின் பாகுசெய் தெடுத்துபக் குவமுடன்
விமலரோ டுண்டு மிச்சில்

நரர்களுக் கிட்டேழு உலகினுக் கிட்டுயிர்
நற்பதத் துற்று வாழ
நசையுற்றெ டுத்தூட்டி மகிழுந்த யாபரி
நளினவின் இதழ்சி வப்ப

பரமசற் குணவதி குழவிசங் கரியுமை
பவளவாய் முத்த மருளே!
படிமிசை யுயர்புரக் கச்சியுற் றமர்சிவை
பவளவாய் முத்த மருளே!



**அரும்பத உரை**

*சுரபி ஐந்து = ஆன் ஐந்து, விரவு = கலக்கின்ற, கன்னல் = கரும்பு, மிச்சில் = உண்டு மிகுந்த எச்சில், நளினம் = தாமரை.*

**பொருள்.**

*ஆனின் ஐந்து (கோசாணம், கோமூத்திரம், பால், தயிர், நெய்) கலந்து பரமசிவனுக்கு அபிடேகம் செய்து, தேன், பால், வாழைப்பழம், சருக்கரை, நெய் கலந்த பஞ்சாமிர்தமும் முக்கனியின் சாற்றினோடு கலந்த கருப்பஞ்சாறு, நெய், தேன் இவைகளுடன் கற்கண்டு பொடிதூவி இளஞ் சூட்டின் பாகுசெய்து எடுத்து அப்பரமசிவனுக்கு நிவேதனம் செய்து நீயும் உண்டு, மிகுந்ததை நரர்களுக்கும் ஏழு உலகினருக்கும் விநியோ கித்து அவர்கள் யாவரும் அப்படி உண்டதனால் நன்மையுற ஆர்வமுற்று அவ்வினிய பாகை யாவர்க்கும் ஊட்டி மகிழ்கின்ற தயாபரியே உன் தாமரை போன்ற வாயிதழ் சிவப்ப முத்தம் தருக!*

## முத்தப் பருவம்.

அம்மையின் அருள்விழைந் தவர்புகழ் கல்வியும்
அவாவுநல் வெற்றி மக்கள்
ஆடக முண்ணுநெல் நல்லூழ்நு கர்ச்சியும்
அறிவழ கோடு பெருமை

செம்மைசேர் இளமையும் துணிவுநோ யின்மையும்
திண்ணிய வாழு நாளும்
நேகமோ டுள்ளத்தி னுறமிவை எய்திடத்
திருவருள் தந்த மென்று

கம்மிடங் கொண்டிவண் போந்துத வழ்ந்தெழுங்
காமுறு நோக்கி யுன்றன்
கஞ்சமென் செவ்விதழ் பூப்பவோ ரின்சொலால்
கசிந்துபாய் அமுத மூறி

பம்புமே கம்பொழிய இன்பினே கம்பமுமை
பவளவாய் முத்த மருளே!
படிமிசை யுயர்புரக் கச்சியுற் றமர்சிவை
பவளவாய் முத்த மருளே!

**அரும்பத உரை**

*ஆடகம் = பொன், கம் = ஆகாயம், பம்பு மேகம் = மிகுதியாகக் கிளம்புகின்ற மேகம்.*

**பொருள்,**

*அம்மையே, உன் அருளை விரும்பினவர்கள், புகழ், கல்வி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ். நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள், வலிமை, இப்பதினாறும் பேறும் எய்த அருள் தந்தனம் என்று ஆகாயத்தினின்றும் இறங்கி வந்த உன் மலர்வாய் பூப்ப இனிய சொல்லால் உன் வாயிலிருந்து கசிந்து எழும் அமுதம் ஊற்றெடுத்து அதன் காரணமாக மேகம் மழை பொழிய ஏகம்ப முற்ற காமாட்சி அம்மையே நின்பவழவாய் முத்தம் தருக!*

### முத்தப் பருவம்.

அன்பெனு மூறல்பி லிற்றும வர்ப்பொகுட்
டகமெனு மாச னத்தில்
ஆங்கெம துள்ளமு ருக்கியெ டுக்கவ
மைந்தசிங் கார உருவைச்

சொன்மலர் தூவிய ருச்சனை செய்துது
தித்துப்ப ணிந்து தொழவே
சுடரொடு தோன்றுமு ருக்கொடு நின்றவுன்
தோற்றமெம் முள்ளம் நிறைய

நின்மன மன்பின்ம லர்ந்தத வின்றெழு
நிரஞ்சன மாய நறவு
நிட்கள மகத்துவ மிகுத்தியாம் காணவணம்
நிருபணம் தந்து செவ்வாய்

பன்மணி முத்துசின் மயவமு தேயுதிர்
பவளவாய் முத்த மருளே!
படிமிசை யுயர்புரக் கச்சியுற் றமர்சிவை
பவளவாய் முத்த மருளே !

**அரும்பத உரை**

*ஊறல் = ஊற்று, பிலிற்று = துளித்து விழும், மலர்ப் பொகுட்டு = மலரின் உள், நிரஞ்சனம் = நிறைவு, நறவு = தேன், நிட்களம் – களங்கமற்ற, நிருபணம் = காட்சி, சின்மய = ஞானமய.*

**பொருள்,**

*அன்பு என்னும் தேனை வடிக்கின்ற மனமாகிய மலர் ஆசனத்தில் அடியேங்கள் உள்ளத்தை உருக்கி எடுத்து அமைத்த உருவை இருத்தி எமது சொல்மலர் கொண்டு அருச்சித்து, துதித்துப் பணிந்து எழ, அது போது, ஒளி யோடு தோன்றும் நின் திரு உருவம் எம் உள்ளத்தில் நிறைய உன் உள்ளத்தில் அடியேங்கள் மேல் ஊற்றெடுத்து நிறைந்த அன்பாகிய தேனை பரிசுத்தமாகிய மனத்திலேயும் ஆகிய அடியேங்கள் காணத்தக்கவாறு காட்டி காமாட்சி அம்மையே உன் செவ்வாயின் ஞானமயமாகிய முத்துக்கள் உதிர முத்தம் தருக !*

**முத்தப் பருவம்.**

அடலரி பிடரியி லிவர்தர வலமென
அக்கக னத்திடையி
லதிர்முழ வொடுபறை துடியிசை இடியென
அச்சமெ ழுப்பவொலி

குடமுழா அடிபட தமருக முரசுகு
ரைத்தக டற்கதியாய்
குடைமுகி லெனநிழ லுதவமின் விருதுகு
லப்பெணெ டுத்துவர

நடமிடு மறுவர்கள் திமிதிமி எனவெந
டித்துபு றத்தசைய
நடையிடு மகதியர் பரமென அவர்வயின்
நச்சும னத்தினளாய்

முடியணி சிறுபிளை புரமமர் பரசிவை
முத்தம ளித்தருளே !
முகிழிள மலரிதழ் தருசுக நிதியருள்
முத்தம ளித்தருளே !

**அரும்பதவுரை**

*அடல் அரி = வலிமை பொருந்திய சிங்கம், இவர்தர = ஊர்ந்துசெல்ல அறுவர்கள் = ஆறு மாதர்கள், அவர்வயின் = அவரிடம், நச்சு = விருப்பு.*

**பொருள்.**

*வலிமை பொருந்திய சிங்கத்தின்மீது ஏறி வலமாக வான வெளியில் செல்லுகையில், முழவு, பறை, துடி, குடமுழா, தமருகம், முரசு இவைகள் சப்திக்க, முகில் குடையென நிழல்தர பிரகாசிக்கின்ற கொடிகளை குலப் பெண்டிர் பிடிக்க, சரசுவதி, இந்திராணி, இலக்குமி, அதிதி, அநசூயை, அருந்ததி ஆகிய ஆறு மாதர்கள் 'திமிதிமி' என நடனமிட்டு பக்கத்தில் செல்ல, பூலோகத்தில் நடந்து செல்லும் திக்கற்றவர்கள் நின்னைப் பரமென, அவர்களிடம் அன்பு வைத்து குழந்தை காமாட்சியே முத்தம் தந்தருள்க!*

மதிமீன் கரியின் வெண்மருப்பு
வாழை கமுகு செங்கரும்பு
வளரும் செந்நெல் இப்பியிவை
வழங்கும் முத்தும் கண்படுநீர்

முதலை நந்து வாலுடும்பு
முகிழுங் கமலம் சங்கரவு
மூங்கி லேனக் கொம்பமர்சூல்
முகிலுஞ் சிந்து முத்தவையும்

பதமென் நங்கை கட்கழுத்தும்
பைங்காற் கொக்கும் தேவரமர்
பசுவின் பற்க ளென்றிவையும்
படுமுத் தெவையும் முத்தலவே

முதுமைக் கச்சிப் பைங்குழவி
முத்தம் தருக மெல்லிதழ்வாய்
மூர லிதழ்கள் முத்துதிர்க்க
முதல்வீ முத்தந் தந்தருளே

**அரும்பத உரை.**

*மதி = சந்திரன், கரி = யானை, மருப்பு = தந்தம், கமுகு = பாக்கு, இப்பி = சிப்பி, கண்படுநீர் = கண்ணீர் வடிக்கும், நந்து = நத்தை, ஏனம் = பன்றி, சூல்முகில் = கறுத்த மேகம்.*

**பொருள்.**

*சந்திரன், மீன், யானைத் தந்தம், வாழை, கமுகு, கரும்பு, நெல், சிப்பி, முதலை, நத்தை, உடும்பு, தாமரை, சங்கு, அரவு, மூங்கில், பன்றியின் கொம்பு, மேகம், நங்கையர் கழுத்து, கொக்கு, பசுவின் பல் இவைகள் தரும் முத்துக்கள் முத்துக்கள அல்ல, (ஆகையால் அவைகளை அடியேங்கள் விரும்பினோம் அல்ல) முதுமையாகிய காஞ்சி புரத்தில் எழுந்தருளி இருக்கும் காமாட்சி அம்மையே நின் வாய் முத்தம் தருக!*

உவர்நீ ரார்கலியோ
டமுத ஓதப் பால்நிறைவும்
அமல நன்னீர்ப் புணரியினோ
டாநெய் யாய அலைபுனலும்

ததிநீட் பரவை வாரலையும்
தண்டேன் வேலை செங்கருப்பஞ்
சாற்றி னுததி யாகுமிவை
தருமுந் நேவையு மரித்தெடுத்து

சுதிசேர் பண்சொல் இளங்குழவி
துலங்கச் சென்னி யணிமுதலா
துணையாம் பாதத் தணிவரையில்
தொடுத்த முத்தந் திருவுருவோய்

புதிதாஞ் சைவக் கடற்கிறைவி
முத்தந் தருக! கச்சியுமை
மூர லிதழ்கள் முத்துதிர்க்க
முதல்வீ முத்தந் தந்தருளே



அரும்பத உரை

*உவர்நீர் = உப்புநீர், —ஆர்கலி, புணரி, அலைபுனல், ஓதம் = சமுத்திரம், ததி = தயிர், பரவை, வேலை, உததி = சமுத்திரம், சுதிசேர் பண் யாழ் நரம்பிற் பொருந்திய பண், துலங்க - ஒளிவிடும்படி.*

பொருள்.

*உப்புநீர்க் கடலும், பாற்கடலும், நல்ல சலக் கடலும், நெய்க்கடலும் தயிர்க்கடலும், தேன்கடலும், கருப்பஞ் சாற்றுக் கடலும் தருகின்ற முந்நேவையும் அரித்தெடுத்து சுதியிற் பொருந்து பண்ணென மதலை மொழி பேசுகின்ற குழந்தை காமாட்சி அம்மையாகிய நீ சென்னி அணி முதலாக திருவடி அணிவரையில் அம் முத்துக்களைத் தொடுத்து அணிந்த அழகிய திரு உருவத்தை உடையவளே பழமையாகிய சைவக் கடற்கு இறைவியாகிய காமாட்சி அம்மையே முத்தம் தருக!*

## முத்தப் பருவம்

தொகைதண் டமிழோ தக்கடலில்
சுவைத்தங் கரித்த தண்முத்தும்
துதிசெங் கஞ்ச மலர்நின்று
சொரிவெண் மணியும் இந்திரன்றன்

தகைசால் பன்னி வானிநெடு
தனுவங் குதிர்க்க சேர்த்தெடுத்த
தண்ணுர் முத்தும் அம்பரத்தில்
தடத்தே அதிதி பெறுமுத்தும்

வகைசேர் தவமத் திரிமனையாள்
வானின் குவித்த ஒண்முத்தும்
மதியம் உதிர்க்க அருந்ததியாள்
வாரி யெடுத்த முத்துமுதிர்

முகைசெங் கஞ்ச மலர்வாயோய்
முத்தந் தருக! கச்சியுமை
மூர லிதழ்கள் முத்துதிர்க்க
முதல்வீ முத்தம் தந்தருளே!

**அரும்பத உரை**

*தொகை தண் தமிழ் = தொடுக்கப்பட்டதும் குளிர்ச்சி பொருந்தியது மான தமிழ, வெண்மணி = முத்து, வானின் நெடுதனு = வானவில், அதிதி = காசியபன் மனைவி, அத்திரிமனையாள் = அநசூயை, அருந்ததி = வசிட்டன் மனைவி.*

**பொருள்.**

*தமிழ்க் கடலில் கலைமகள் அரித்தெடுத்த முத்தும் செங் தாமரையிலிருந்து இலக்குமி எடுத்த முத்தும், வான வில்லி லிருந்து இந்திராணி எடுத்துச் சேர்த்த முத்தும், வானத்தில் தடத்திலிருந்து அதிதி அரித்தெடுத்த முத்தும். அநசூயை மேகத்தினிடமிருந்து சேர்த்த முத்தும், சந்திரனிலிருந்து அருந்ததி எடுத்த முத்தும், ஆக இந்த ஆறு மாதர்களும சேகரித்த முத்துக்களையும் ஒருங்கே தரக் கூடிய நின்வாய் முத்தத்தை காமாட்சி அம்மையே தருக!*

*ஐந்தாவது முத்தப் பருவம் முற்றிற்று.*

## ஆறுவது வருகைப் பருவம்

உலகி லுயரு மிமயத்தி
லுருசா லரசு புரிந்தாரு
மொருவ னிடத்தே மகளாகி
உயர்மா வடிக்குச் செலுந்தேவி

இலகிவ் வரையி னெடுஞ்சார
லெழுநீர்ச் சலதி யுன்றோழன்
இமிழுஞ் சடையி லணிவானவ்
வெழிற்கண் டுவந்து புலன்வென்று

பலமா தவரச் சிவஞ்பாதம்
பணிந்தங் கவன்பால் மயல்கொண்டு
பரமென் றடைய தவமாக்கல
பரிவா னுகர வருகென்ன

மலையத் துவசன் அறைகூவும்
மதலைச் சிறுமி வருகவே!
மதில்சூழ் தலமாந் திருக்கச்சி
மகிழ்வோய் வருக வருகவே

**அரும்பத உரை**

*சலதி = ஆறு, இமிழும் = அலையுடையதாய்ச் சப்திக்க, மயல் = ஆசை நுகர = அனுபவிக்க, அறைகூவும் = கூவி அழைக்கும்.*

**பொருள்.**

*உலகத்தில் உயர்ந்த மலையாகிய இமயத்தில் சிறப்புடன் அரசு புரிபவனிடத்தில் மகளாய்ப் பிறந்து காஞ்சி மாவடிக்குச் செலலும் தேவியே! இம்மலைச் சாரலில் உண்டாகும் கங்கை உன் தோழனாகிய சிவன் தன் முடியில் அணியத்தக்கது. ஆதலால் அந்த கங்கையின் எழில் இங்கே நன்கு காணததக்கது என்றும், இங்கு மாதவர்கள் பலர் நின்னைப்போல் புலனை வென்று தவம் செய்வது காணத்தக்கது என்றும், ஆகவே இங்கு வர வேண்டும் என்றும், மலையரசன் அழைக்கத்தக்க குழந்தை காமாட்சியே வருக!*

தாயே அடியா ரடிசூடுந்
தன்னைப் பில்லா சிறியேன்யான்
தன்னை யொப்பாரிலதாய
தன்மைப் பெரியோ யுளையானாய்

நாயே னின்னை யொருபோதும்
நாடிக் கொண்டாள் எனவேண்டேன்
நாளுங் குணமே யுடையாய்நீ
நன்றே செய்தற் குளையன்றே

நீயே பரமென் றுணராது
நெடுநாட் டெய்வம் பலரென்று
நெஞ்சத் திருத்தி யெய்த்தேனென்
நினைவுட் கடவு ளெனநின்றாய்

காயே எனுமென் மனத்துள்ளே
கனிபோன் றுள்ளாய் வருகவே
கச்சிப் பதியிற் றளியுற்றக்
காமக் கண்ணாய் வருகவே!

**அரும்பத உரை**

*அடியாரடி = நின்னடியாரின்பாதம், உளையானாய் = இருக்கின்றனை, நாயேன் = நாய் போன்றயான், நாடி = விரும்பி, கொண்டாள் = மகளைக் கொண்டு ஆட்கொள், வேண்டேன் = வேண்டிக் கொண்டேன் அல்லன் காயே எனுமென் = காயே எனத்தக்க என்னுடைய, தளி = கோயில்.*

**பொருள்**

*தாய் போன்றவளே, அடியேன் நின் அடியாரின் அடி சூடும் சிறியேன். என் சிறுமைக்கு ஒப்பு கிடையாது. ஆனல் நீயோ நின்னை ஒப்பாரில்லாத பெரியவள். அப்படி இருந்தும் அடியேனை நின் மகளை ஆட்கொள்ள வேண்டுமென வேண்டாதிருக்கையில் அடியேனுக்கு நீயே பரிந்து நன்மை புரியும் பெருங்குணம் படைத்துள்ளாய், அப்படி இருந்தும் உன்னைப் பரம்பொருள் என்று உணராத சிற்றறிவுடையேன் வேறு பல தெய்வங்களைத் தெய்வங்களாக எண்ணி வருந்திய அடியேனின் நெஞ்சத்துள் நீயே தனிக்கடவுள் என்று வந்து நிலை பெற்றனை, அங்ஙனம் நிலவி என் கனியா உள்ளத்தைக் கனிவித்துள்ள காமாட்சி அம்மையே அடியேன் கண்முன் வருவாயாக!*

நீரே புற்கு விதையாகும்
நெடுங்கார் போன்றெவ் வுயிர்கட்கும்
நீயோ ருயிராய் இருத்தியால்
நின்னை யல்லா லுயிருண்டோ

யாரே நின்னை அறிவார்கள்
அறிந்தா ரென்பார் மனத்துள்ளே
அடங்கா தோங்கி நிமிர்ந்தோய்நீ
அன்பர்க் குள்ளத் தடங்குற்றாய்

பேரே கோடி படைத்தோயுன்
பெயரொன் றுரைத்தற் கியலாவிப்
பேதைக் கிரங்கி வருகென்னப்
பெற்றோ யுன்ற னருகெய்தற்

கோரே னென்ப துணர்தியால்
உன்சேய்க் கருள வருகவே!
உலகம் யாவும் தனியீன்ற
உமைகா மாட்சி வருகவே



**அரும்பத உரை.**

*புற்கு = புல்லுக்கு, நீர் = மழை, நிமிர்ந்தோய் = உள்ளத்துள் அடங்கா வாறு பேருருவ முடையோய், பேதை = அறிவிலி, வருகென்ன — வருக என்று அழைக்க, சேய் = மகன்.*

**பொருள்.**

*மழைத்துளிகளே புல்லுக்கு விதையாகி உயிரளிப்பது போன்று எல்லா உயிர்களுக்கும் நீயே உயிராக உள்ளாய். உன் பெருமையை யார் உணர வல்லார்கள்! உன் தன்மையை உணர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் அவர்களின் உள்ளத்தில் அடங்கா வண்ணம் பேருருவம் எடுத்துள்ளாய். ஆயின் நின்னிடம் அன்பு உடையார் உள்ளத்தில் அடங்கி இருக்கின்றாய். உனக்குக் கோடிக்கணக்கான பெயர்கள் உலகத்தினர் வழங்கினும் ஒரு பெயரையேனும் பக்தியுடன் சொல்லும் திறனில்லாதவன் முன்வர வேண்டுமென்று வேண்ட நின்னிடந்தெரிந்து தேடிவர இயலாதவன் இப்பிள்ளை என்பது உணர்ந்தனை யாகையால் காமாட்சி அம்மையே, நீயே அடியேன் முன் வருவாயாக!*

கூடங் கடந்துப் பேரண்டக்
கூட்டங் கடந்து விண்கிழித்த
கோடு கடந்துச் சீவருளம்
கூடிக் கலந்து மன்னியமர்

மாடங் கடந்துப் பூதமவை
வண்ணங் கடந்து கன்னெஞ்ச
வன்மை தகர்த்து மும்மலத்தின்
மாசு தவிர்த்துத் தவங்கிடந்த

வேடங் கலைத்துப் புரத்தினெடு
வீதி கடந்துச் சிவனிடத்தோர்
விதங் கலந்துத் தாள்தகர்த்து
வீட்டிற் புகுத்தும் அன்புடையோய்

பாடஞ் செய்மென் குதலைமொழி
பழகுங் குழவி வருகவே!
பதியிற் சிரமாங் கச்சியமர்
பாவாய் வருக வருகவே!

**அரும்பத உரை**

*கூடம் = அண்ட கூடம், கோடு = இமய மலையினுச்சி, கைலாச மலையினுச்சி, மாடம் = சபா மண்டபம், பூதம் = பஞ்ச பூதம், மும்மலம் ஆணவம், காமியம், மாயை.*

**பொருள்.**

*அண்டங்களையும், பேரண்டங்களையும் கடந்து, விண்ணைக் கிழித்தெழுந்த இமயத்தையும், கைலாசத்தையும் கடந்து உயிர்களின் உள்ளத்திற் கலந்து அதையும் கடந்து மன்னி இருக்கின்ற சபா மண்டபத்தைக் கடந்து, பஞ்ச பூதங்களின் தன்மையைக் கடந்து எமது கல் நெஞ்சத்தின் திண்மையைப் பிளந்து மும்மலத்தின் குற்றந் தவிர்த்து, தவவேடத்தைக் கலைந்து காஞ்சி நகர் வீதி எல்லாம் கடந்து சிவனிடத்தில் ஒரு பாகம் கலந்து மோக்க வீட்டின் தாளைத் தகர்த்து அதனுள் எம்மைப்புகு அருளும் அன்பு உடையவளே, குதலை மொழி பயிலும் காமாட்சி அம்மையே வருக*

குணமுஞ் செயலும் பலவாய
கோமூன் றுடையா ரவருள்ளும்
கொடிதா மரையோன் அளியாதான்
கோல மாயோன் கிடந்திட்டான்

கணங்கட் கிறைவ னுனையல்லால்
காத்தற் கியலா னவனில்லின்
கண்ணுறா ணட்டி உலகூட்டும்
காதற் கொருத்தி யெனுமன்னாய்

மணத்துட் பூவுண் மதுநரம்பின்
மகர யாழு ளதனிசையுண்
மாயப் பொறிகட் புலனைந்துண்
மறைவுற் றுள்ள வதுவென்னே?

பணங்கக் குமணி பதிக்கின்ற
பணிபூ ணுடையாய் வருகவே!
பதியிற் சிரமாங் கச்சியமர்
பாவாய் வருக வருகவே!

---

**அரும்பத உரை**

*கோ = கடவுள், கொடி தாமரையோன் = மகாவிஷ்ணுவின் உந்திக் கமலத்துறையும் பிரமன், அளியாதான் = உலகுக்கு ஊட்டாதவன், கோலம் = அழகு, கிடந்திட்டான் = படுத்துக்கொண்டான், கணங்கட் கிறைவன் = பூதகணங்களின் தலைவனான பரமசிவன், காதல் = அன்பு, பணம் — படத்தையுடைய நாகம், பணி = ஆபரணம்.*

**பொருள்.**

*சத்துவம், ராஜசம், தாமசம் என்ற முக்குணங்களும், படைத்தல் காத்தல், அழித்தல் என்ற மூன்று செயல்களையும் உடைய மூன்று கடவுளரில், பிரமன் தான் படைத்த உயிர்களைக் காப்பாற்ற மாட்டாதவன் விஷ்ணு எக்காலத்தும் படுத்துள்ளான், பரமசிவன் உலகுக்கு ஊட்ட இல்லக்கிழத்தியாகிய உன்னையே எதிர்பார்த்துள்ளான். ஆகையால் அவன் இல்லத்தில் அமுது செய்து உலகமனைத்துக்கும் ஊட்டுதற்கு நீ ஒருத்தியே உள்ளாய், அத்தகைய நீ அடியேங்கள் காணுவண்ணம் பூவினுள்ளும், அதன் மணத்துள்ளும், யாழிலும், அதன் இசையினுள்ளும் பொறியினுள் உள்ள புலன்களினுள்ளும் மறைந்துள்ளாயானால் அடியேங்கள் நின்னைக் காண்பதெங்ஙனம்! நாகமுமிழ்ந்த இரத்தினம் இழைத்த ஆபரணங்களைப் பூண்ட காமாட்சி அம்மையே அடியேங்கள் காணுமாறு வருவாயாக!*

சொற்கோத் தெடுத்த தொன்மறைகள்
சூழ்ந்தா தார மெனப்பற்றி
துதித்தங் கார்த்த தெனமலரிற்
சூடக் கிடந்த அணிகலன்கள்

பொற்பா டகமும் சிலம்புமொலி
பொலங்காற் சதங்கை நூபுரமும்
புலம்புந் தண்டை ஒண்கழலும்
பொற்பாம் பாத சாலமவை

விற்கோ டிரண்டிற் றொடுத்ததெனும்
விழிவேற் கிலக்காய்த் தத்துவனை
விருப்பிற் கொண்ட பைங்கிளியுன்
மென்கஞ் சத்தி லொலிக்குவணம்

பற்பா வலர்க்குப் பரிசளிக்கும்
பண்போய் வருக! இப்புவன
பதியிற் சிரமாங் கச்சியமர்
பாவாய் வருக வருகவே!

**அரும்பத உரை**

*மலர் = பாதமலர், பொலன் = அழகிய, மேன்மையான, புலம்பும் = ரப்திக்கும, பொற்பு = பொலிவு, விற்கோடு இரண்டில் = இரண்டு புருவங் களாகிய வில்லில், இலக்கு = குறிப்பு, கஞ்சம் = பாத தாமரை.*

**பொருள்.**

*சொற்களால் ஆன நான்கு வேதங்களும் நின்பாதங்களை ஆதார மெனப்பற்றி ஆங்கு ஒலித்தனபோல் நின்பாதங்களில் அணிந்த பொற் பாடகம், சிலம்பு, காற் சதங்கை, பாதக் கிண்கிணி, தண்டை, கொடையின் சிறப்பு காட்டும் காலணி இவைகளாகிய பாத அணிகலன்கள், நின் புருவ மாகிய இரண்டு வில்லில் விழியாகிய இரண்டு அம்புகளைத் தொடுத்து அந்த அம்புகளுக்கு இலக்காகச் சிவபெருமானை விரும்பிய பசுங்கிளியே, உன் பாதங்களில் சப்திக்க பாவலர்க்கு அருளாகிய பரிசு தர காமாட்சி அம்மையே வருக!*

காலைக் குணக்கில் அத்திகிரி
கரத்தோன் எழுப்ப அத்திகிரி
கண்ணின் றெழும்போ துடுத்த
கரியி னுரிவை அகற்றியுச்சி

வேலைப் போதில் முனம்வனதம்
விரிநீர்க் கழனி தொறும்வளர்ந்து
விண்தோய் தெங்கின் விழுக்குலையில்
விசும்பூர் பரிதி நீர்பருகி

மாலைச் சேக்கை யுறுபோது
மதிய மெழுந்து கோட்டநடு
வளுவற் காத லுளமெழுப்பும்
மடலூர் தென்றல் அசைந்துலவும்

சோலைச் சுகமே இனிதுநுகர்
தோகாய் வருக! சச்சியமர்
துரியங் கடந்த பெருவாழ்வின்
தாயோய் வருக வருகவே!



**அரும்பத உரை**

குணக்கில் = கிழக்கில், **அத் திகிரி** = திருமாலின் (**அந்தச்**) **சக்கரம்**, அத்தி கிரி = யானைமலை, கரியின் உரிவை = யானைத் தோலை, வனதம் = தாமரை, நீர் = இளநீர், சேக்கை = படுக்கை, கோட்டம் = காம கோட்டம், மடல் = பூவிதழ், வளுவல் = இளமை.

**பொருள்.**

காலையில் கிழக்கில் சக்கரபாணியாகிய விஷ்ணு எழுப்ப அத்திகிரியினின்று எழும்போது கரியின் உரியை அகற்றி உச்சிப்போதில் முன் தாமரை மலர்ந்த வயலில் தென்னை வளர்ந்து வான் முட்ட ஓங்கி இருக்க அதில் உண்டாகிய குலைத்தெங்கில் இளநீர் பருகும் சூரியன், மாலையில் படுக்கைக்குச் செல்லும்போது சந்திரன் எழுந்து இளமைக்கு உரிய காதலை உயிர்களிடத்தே எழுப்ப மடலோடுங் கூடிய புஷ்பச்சோலையிலே தென்றல் வீசும் நற்சுகத்தை அனுபவிக்கும் காஞ்சி காமாட்சியாகிய மடமயிலே வருக!

கொடுக்கக் குறையா நிதிபெற்றும்
கொடுக்கா திருப்பை எனினெற்குக்
கொடுத்தாற் பிழையென் றிருந்தாயோ
கொடுக்குங் கரந்தான் வலித்ததோ

மடுக்குஞ் செவிக்குட் குறைகேட்டும்
வாளா யிருத்த லதுகண்டால்
வன்னெஞ் சத்தா யெனவையம்
வையா தென்று நினைத்தாயோ

எடுக்கப் பெயர்க்கும் திருப்பாதம்
ஏழைக் கருளற் குறுமென்றென்
றெண்ணிக் கொண்டித் தனைகாலம்
இறுமாந் திருந்தேன் புரத்தாங்குத்

தொடுக்குஞ் சாலத் திருப்பாதந்
தோன்றும் படியே வருகவே!
துணைநோ காமுன் எடுத்துன்னைத்
தோளி னணைப்பன் வருகவே!

**அரும்பத உரை**

*நிதி = பர ஞானத்தைத் தரும் அருள். மடுக்குஞ் செவி = கேட்கும் காது, குறை = அடியேங்களின் வருத்தங்களை, வாளா = பரிகாரம் ஒன்றும் செய்யாது, வன்னெஞ் சத்தாய் = வலிய உள்ளத்தை உடையவள், வையாது = நிந்திக்காது, இறுமாந்து = மகிழ்ந்து, புரத்தாங்கு = காஞ்சிபுரமாகிய அங்கு, சாலம் = பாத அணிகலம், துணை = இரண்டு திருப்பாதங்கள்.*

**பொருள்,**

*கொடுக்கக் கொடுக்கக் குறையாத தன்மையதாகிய அருள்நிதியை நீ பெற்றிருந்தும் அடியேனுக்கு அதைக் கொடுப்பது பிழையென்று இருந்தனையா, அல்லது பலருக்கும் அருள் கொடுத்துக் கொடுத்துத் திருக்கரங்கள் நொந்தன வாகையால் கொடா திருந்தனையா? அடியேங்களின் தேவைகளை இவையென்று அடியேங்கள் சொல்லியும் காதில் வாங்காமல் பேசாமல் இருப்பதுபற்றி உலகம் நின்னைக் கன்னெஞ்சம் படைத்தவள் என்று நிந்திக்காமல் இருக்கும் என்று நினைத்தாய்? நின்பாதம் பெயர்வதைக் கண்டால் நீ அடியேங்கட்கு அருளுதற்காக வருகிறாய் என்றே இதுகாறும் இறுமாந்திருந்தேன். ஆகையால் கச்சிப்பதியாகிய அங்கு பூட்டிய பாதசாலம் விளங்கப்பெற்ற திருவடிகள் அடியேங்கள் முன் தோன்றும்படி காஞ்சி காமாட்சி அம்மையே வருவாயாக!*

துவளுஞ் செவிக்குண் டலமசைய
சுடர்கட் டுவடம் மிடற்றெளிர
சோதிப் பரிதி யுடன்பிறையும்
சுடிகை முத்த மும்புரள

பவளத் தொடையல் மணிவடமும்
பனி முத் தாரம் வச்சிரம்நற்
பச்சைக் கோமே தகம்பொருத்திப்
பதித்த மாலை யுடனசைய

கவளக் கரிமா திரங்கடொறுங்
கதிகெட் டணிபன் மணிஒலித்துக்
கச்சிப் பதிக்குக காப்புடைநீ
கலினென் றடிவைத் தெழவெருண்டு

தவளச் சலதி மதம்பொழியத்
தருவோய் வருக ! அம்பரமென்
தலத்துற் பவித்த இளம்பிடியெந்
தலைவீ வருக வருகவே '

### அரும்பத உரை.

சுடர் கட்டு வடம் = பொற்றும்பு, மிடற்று = கழுத்தில், சோதிப்பரிதி = பிரகாசிக்கின்ற சூரியன், சுடிகை = நெற்றிச்சுட்டி, பனி = குளிர்ச்சியான, கவளம = வாயினளவினதாக உணவு உண்ணும், கரிமா திரங்கள்தொறும் = யானைகள் எட்டுத்திக்குகளிலும், வெருண்டு = பயந்து, தவளச் சலதி = வெள்ளையானநீர், மதம் = கன்னம், கபோலம், பீஜமாகிய மூலிடத்தி லிருந்து பொழியும் மத நீர்.

### பொருள்.

துவள்கின்ற செவியி லணிகின்ற குண்டலங்கள் அசைய கழுத்தில் பிரகாசிக்கின்ற பொற்றும்பு அசைய. சூரிய சந்திர பிறையும் நெற்றிச் சுட்டியும் புரள, மார்பில் அணிந்த பவளமாலை, மணிவடம், முத்து மாலை அசைய, அவைகளுடன் வச்சிரம், பச்சை, கோமேதகம் இவைகள் வைத் திழைத்த மாலை அசைய, கிழக்கு முதலாக உள்ள அட்டதிக்கு யானைக ளாகிய — 1. ஐராவதம், 2, புண்டரீகம், 3, வாமநம், 4. குமுதம், 5. அஞ்சநம், 6. புஷ்பதந்தம், 7. சார்வபௌமம், 8, சுப்பிரதீகம் என்ற இவை, தாம் அணிந்த மணிகள் ஒலித்து கச்சிப்பதி காமாட்சி அம்மை யாகிய நீ காலணி ஒலிக்க அடி எடுத்து வைப்பது கண்டு அச்சமுற்று மும் மதமும் சொரிய காஞ்சி காமாட்சி அம்மையே வருக !

## வருகைப் பருவம்.

பெண்ணே பரமா னந்தபெரும்
பெருக்கே வருக! விழைந்து பெறும்
பேறே இமய மலைபயந்த
பிள்ளாய் வருக! அகிலமெலாம்
பெற்றோய் வருக! புகழ்பரந்த
பெயரோய் பெருகு நலமளிக்கும்
பெரியோய் வருக! உயிர்த்தொகையின்
பெட்பே வருக! அடியவர்தம்

எண்ணே இயங்கு மெங்கெங்கும்
இருந்தாய் வருக! ஆதிகடை
இல்லாய் உலகின் சமயமெலாம்
இகந்தாய் வருக! எண்ணலர்க்கும்
இனியாய் வருக! அருமந்த
என்றாய் அளித்த உலகனைத்தின்
இறைவீ வருக! இறைஞ்சுமெமை
ஏற்பாய் வருக! மறைபகரும்

பண்ணே பற்றும் பற்றிலர்தம்
பற்றே வருக! களிப்பருளும்
பண்போய் அடியேம் பெறவரிய
பதமே வருக! ஆதிபரா
பரையே வருக! அமுதமருட்
பரிசோய் வருக! அருள்பழுத்த
பழமே எழுமைப் பிறவியினற்
பயனே வருக! இருளகற்றும்

கண்ணே மணியே இடர்தவிர்க்கும்
காப்பே வருக! அறம்வளர்க்குங்
காரே பயிலுங் கலைஞானக்
கடலே வருக! காலமெலாங்
கடந்தாய் வருக! இளம்பிடியின்
கன்றே கலைஞர் எழுதரிய
கவினே கச்சிக் காமநெடுங்
கண்ணாய் வருக! வருகவே

### அரும்பத உரை

*விழைந்து = விரும்பி வேண்டி, பெட்பே = அன்புக் குரியவளே, எண்ணே = மதிக்கத் தக்கவளே, இகந்தாய் = கடந்தவளே, எண்ணலர்க்கும் = நினைக்காதவர்கட்கும், அருமந்த = அருமருந்தன்ன, என்றாய் = என் தாயே, அளித்த = பெற்ற, இறைஞ்சும் = போற்றும், மறைபகரும் = வேதப்பொருளின், பண்ணே = இசைவடிவானவளே, பரிசோய் = தகைத் தன்மையவளே, காரே = மழை போன்றவளே, இளம்பிடி = இளைய பெண் யானை, கவினே = அழகு உடையவளே, காமநெடுங் கண்ணாய் = அன்பு மிகுந்த நீண்ட கண்களை உடைய காமாட்சி அம்மையே.*

*ஆறாவது வருகைப் பருவம் முற்றிற்று*

## ஏழாவது அம்புலிப் பருவம்.



அகமுடை யரனிட மமருமெ மிறைவித
    னகமுளைந் தவனியுற்ற
  அமயமொண் ணமுதுமிழ் நயனம விடமிருந்
      தகலுவை யென்னுமந்நாள்

முகனிருந் தகல்வெளி யுலவிசெம் மனனமர்
    முருகிள அம்மை யின்பால்
  முதிர்பசை யினனெனுங் குறியிது வெனவுரை
      முயல்தவழ் மதிய மென்போய்

திகழுல கருளமு துணவூட் டிலையமை
    திருவுடைச் செல்வி கச்சிச்
  சிறுபிளை சிவையவ ளொடுகளி துணையொரு
      செவிலியிங் கில்லை கண்டாய்

அகவுமெய் யடியவர் சுகமுற இறைவியொ
    டம்புலீ ஆட வாவே!
  அணிமயி லொயிலுமை யெனுமிளங் குழவியொ
      டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை**

அகம் = இடம், அகம் உளைந்து = மனம் வருந்தி, அமயம் = சமயம் நயனம் = (இடக்) கண், முருகிள அம்மை = அழகும் இளமையும் பொருந்திய அம்மை, பசை = அன்பு, அகவு = அழைக்கின்ற.

**பொருள்,**

அம்பலமாகிய பெருவெளியை இடமாக உடைய அரனிடத்தில் அமருகின்ற இறைவி தன் உள்ளம் வருந்தி பூமிக்கு வந்தபோது அமுதகிரணன் ஆகிய நீ அரனின் நயனம் என்ற இடத்திலிருந்து ஆகாய வெளிக்கு அகன்றது என்பது நீ அம்மையின் பால் காட்டும் அன்பிற்கு அடையாளம் ஆகும், இத்தன்மை உடைய மதியமே, உலகை மெல்லாம் உண்ணக்கூடிய அருளமுதைச் சமைத்துத் தரும் கச்சிக் காமாட்சிக்குத் துணையாகத் தாதியர் யாரும் இல்லையாதலால் நீ அவளுடன் ஆட வருவாயாக!

கலைமுழு துடைமதி யமெனினு மிழிவொடு
கசனவெ ளிக்கு ளோடுங்
கதியுடை யவனென மனமுடை வதினுணும்
கறைமிடற் றேனி டத்தில்

நிலைபெறு வகையிது வெனுமுறை தவமுயல்
நெறியினில் நின்றி யற்று
நியதியொ டுயர்பத மடையுமொர் வழிபுகல்
நிமலையொ டாடல் செய்யின்

தலைவனி னுடலொடு சரிசம மெனுமுமை
தவசிகா மாட்சி போன்று
தணலொடு பரிதியும் விழியென மகிழ்பவன்
றனையடை யாற்றல் பெறுவாய்

அலைமுகி லினிலொளி பனியுமிழ் விரிகதிர்
அம்புலீ ஆட வாவே!
அணிமயி லொயிலுமை யெனுமிளங் குமரியொ
டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை**

*கலைமுழு துடை மதியம் = எண்ணிரண்டு கலை களும நிரம்பிய சந்திரன், மனம் உடைவது = உள்ளம் தளர்வது.*

**பொருள்.**

*கலை முற்றிய முழுச் சந்திரனாகியும் நீ ஆகாயத்தில் திக்கற்றவன் போல் வான வெளியில் ஓடும் நிலைமை உனக்கு உற்றதே என்று நீ மனந் தளர்வதை விட கறை மிடற்று அண்ணலோடு நிலை பெற்று இருக்கும் முறை இது வெனக் காணுந் தவம் புரியும் அம்மையுடன் ஆடுவாய் ஆகில் பரமசிவனின் ஆகத்தில் சரிசமமான ஒரு பாதி பங்குகொள்ளும் காமாட்சி அம்மையைப்போல், பரமசிவன் கண்ணென அணியும் சூரியன், நெருப்பு இவைகளோடு சந்திரனாகிய நீயும் கண்ணெனப் பொருந்தும் ஆற்றல் பெறுவாய், ஆதலால் காமாட்சி அம்மையுடன் ஆட வருவாயாக!*

நவமக ளுருவுமை சடைமுடி யுயர்சிவை
தனிமுக வழகி னொப்பச்
சமைமதி எனமனம் மகிழ்வது முறையல
தலமுணர் உண்மை கேணீ

பவமுனஞ் செயுமதன் பயனென முகமதிற்
படர்படை நோய கற்ற
பதிதிரு நகரெழு புனலெழு தினமுமெய்
பலபகற் படிந்து முண்டும்

சிவனுடல் பகிர்மகள் மறைபகர் கடவுளெஞ்
சிவைசிவை என்று கூவித்
திருவலம் வநவதொ டடிபணிந் தெழவருட்
செயும்விளை யாட்டு வந்தே

அவசமொ டிருளகல் வணமருள் மகளுட
னம்புலீ ஆட வாவே!
அணிமயி லொயிலுமை யெனுமிளங் குழவியொ
டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை**

*உரு உமை = அழகிய உமையவள், சமை = அமைகின்ற, அவசம் = பரவசம்.*

**பொருள்,**

*சடை முடியுடன் தவம் செய்யும் உமையவளுடைய ஒப்பற்ற முகத்துக்கு நிகராக அழகுடைய முகம் உடையவன் என நீ மகிழ்வது முறையல்ல. இதன் உண்மை யாதெனில் முன்செய்த பாவத்தின் பயனாக உன் முகத்தில் படாகின்ற படைநோயே காரணம். இந்த நோயை அகற்ற கச்சியிலுள்ள ஏழு தீர்த்தங்களிலும் ஏழு தினங்களிலும் முழுகி அந்த நீரை யுண்டு உமையவளை "சிவை, சிவை" என்று கூப்பிட்டு வலம் வந்து அடி தொழுது, அவள் செய்யும் திரு விளையாட்டில் வசப்பட்டு உன் உடற் படை அகல அருளும் அக் காமாட்சி அம்மையோடு ஆட வருவாயாக!*

## அம்புலிப் பருவம்

பிறைமதி எனமுடி மிசைநகர் பொழுதரன்
பெருமித மோடு வைப்பன்
பெருகுமவ் வமயமங் ககலுற எறியுமப்
பிழைபுரி சடைய னஞ்சுண்

கறையமர் மிடறன லுருமுழு தரவுமிழ்
கருவிடங் கொள்பி டாரன்
கலைவளர் பொழுதினில் மருவுநஞ் சவனொடு
கலவுபுன் நெஞ்ச மோடு

மறைமுடி யடவியில் ஒளிவிடு வையெனுமம்
மடமைகண் டுலக மெள்ளும்
மழுவக லெரிவெயி லிரவியென் றிவரொடு
வதியவெப் பெய்து வாயென்

றறவுரை மொழிசிவை புரமமர் உமையுட
னம்புலீ ஆட வாவே!
அணிமயி லொயிலுமை யெனுமிளங் குழவியொ
டம்புலீ ஆட வாவே!

**அரும்பத உரை**

*பெருமிதம் = களிப்பு, அகல் = அகண்ட வானவெளி, அடவி = காடு.*

**பொருள்,**

*பிறையாக வேணியில் நகர்ந்து கொண்டிருந்த சமயம் மிக மகிழ்ச்சியோடு நின்னை வைத்து, நீ கலையிற் பெருகும்போது வெளியில் எடுத்து வீசிவிடும் குற்றம் செய்பவன், நஞ்சு உண்டதனும் கறை மிடறுடையன், உடல் முழுதும் கக்கப்பட்ட பாம்பின் விடம உடைய பாம்புப் பிடாரன், நீ கலையில் வளர்ச்சி அடையும்போது விடம் பொருந்திய அச் சிவனோடு கலந்திருக்கும் கீழ்மையான எண்ணத்தோடு அவனுடைய மறைமுடிச் சடைக் காட்டில் நின் பூரண ஒளியைத் தருவது என்னும் உன் அறியாமையைக் கண்டு உலகம் பரிகாசம் செய்யும், அதுவும் அல்லாமல் மழுவகலும், நெற்றியில் நெருப்பும் வலக்கண்ணைச் சூரியனையும் உடைய அவனுடன் இருப்பாயானால் உனக்கு வெப்புநோய் எய்தும், இந்த நல் வார்த்தையைச் சொல்லும் காமாட்சி அம்மையுடன் ஆட வருவாயாக!*

## அம்புலிப் பருவம்

மதலையெ னுருவினொ டடர்சடை முடியினில்
வருமொரு நாள்தொ டங்கி
வளருரு நிலவென நினையளி முதல்வியின்
மடியிலி ருந்து போந்தாய்

மதனெனு மிளையவர் மருவலெங் கிலரென
மன முடை மாத ரரின்
மலரம ளியிலிடர் புரியமு தகிரண
மதியவர்ச் சாப மதனல்

அதியமு குடையவ னெனவுல குரைபொழு
தரவுண என்ணி யெய்த
அவலமொ டகல்வெளி அலைவதின் நலமுற
அமலையெங் கச்சி வாழும்

அதிகுணி விகசித மலர்விழி யுமையுடன்
அம்புலீ ஆட வாவே!
அணிமயி லொயிலுமை யெனுமிளங் குழவியொ
டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை**

*உரு நிலவு = முழு நிலவு, மதன் = மன்மதன், மருவ = கூட, மனம் உடை = மனம் தளர்ந்த, அவலம் = வருத்தம், விகசித = மலர்கின்ற.*

**பொருள்.**

*பிறையாகத் தோன்றிய காலம் முதற்கொண்டு பூரண சந்திரனாக வளரும் வரையில் உன்னை ஈன்ற தாயின் மடியில் இருந்து பிறகு வான வெளிக்குச் சென்றாய். பருவ மங்கையரைக் கூடுதற்கு மன்மதனைப் போன்ற இளைஞர் இல்லை என்று வருந்தும் மாதர்களின் முன் அவர்கள் வருத்தத்தை அதிகரிக்கும் உன்னைக் கண்டு அம்மாதர் உன்னைச் சபிக்கும் காரணத்தால் பருவகாலத்தில் உன் உருவைக் கண்டு உலகோர் புகழும் போது உன்னை அரவு உண்ணுதற்கு வரும் என வருந்துவதை விட உனக்கு நன்மை உண்டாகும் வண்ணம் காமாட்சி அம்மையுடன் ஆட வருவாயாக!*

ஒருபதி தனிமனை யவளொடு வதிவதிவ்
வுலகினின் நீதி யென்ப
துயருல கினுமுள ததுவுணர் வையெனினும்
உடுபதி யாய நீயோ

இருபதொ டெழுவரை கலவிசெய் தவரவர்
இலமிலஞ் சென்று வைகல்
இனியவ ருளுமொரு மனையவ ளுணர்பொழு
திகழ்வினின் கேண்மை கொள்ளாள்

தருபதி பருவனெண் ணிலவொளி இரவினிற்
றனிமையி னுலாவ நோக்கித
தலமெழி னுறையுநர் எளிநகை புரிவதின்
தலைவியொ டாட உய்வை

அருபத மருளுமெம் புரமம ருமையுட
னம்புலீ ஆட வாவே!
அணிமயி லொயிலுமை யெனுமிளங் குழவியொ
டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை.**

*வைகல் = தங்கல், கேண்மை = உறவு, தருபதி = இன்பந்தரும் மணாளன், எளி நகை = பரிகாசத்துடன் சிரித்து. அருபதம் = அரிய பதவி, புரம் = காஞ்சிபுரம்.*

**பொருள்.**

*ஒரு புருஷன் ஒரு மனைவியுடன் வாழ்தல் உலக ந்யாயம், இது வானுலகத்துக்கும் பொருந்தும். அப்படி இருக்க தக்ஷ முனிவரின் குமாரிகளாகிய நின் இருபத்தேழு மனைவிகளுடன் ஒவ்வொருத்தியுடன் ஒருநாள் தங்குவை என்பதை மற்றவர்களில் ஒருத்தி உணர்வாள் ஆனால் பிறகு உன் உறவை எவ்வொருத்தியும் கொள்ளாள். பிறகு உன் பருவ உருவத்தோடு இரவில் தனியாக உலாவ நேரிடும். இதைக் கண்டு உலகம் உன்னைப் பரிகாசம் செய்யும், இதைவிட நீ அரிய பதவி தந்தருளும் காமாட்சி அம்மையுடன் ஆட வருவாயாக!*

கந்திப்ப ரந்தசங் கக்கடற் பாவையின்
கருப்பந்து தித்து வந்த
காரணத் தான்மனி தற்கொப்ப நின்னுடல்
காணரை குட்ட முதலா

நிந்தாப்பி டிக்குமக் கட்டங்க விர்ந்துமுன்
புரி வினைக டந்தும்
நீடுஞ்சு கப்பேற டைந்துநல் வாழ்வுற
நெஞ்சம்ப டைத்த நிலவே

முத்திக்க ரும்பதி கச்சிப்பு ரந்தனில்
முற்றதவ ஞாகி டந்த
முக்கட்சி வைக்குநின் குற்றங்க விர்க்குமு
யற்சிமிக் குண்டு பெறுதி

உத்துச்ச முற்கிது சொற்கிளிப் பிள்ளையொ
டம்புலீ ஆட வாவே!
அத்தநா ரிசுரர்க் கொத்தகா மாட்சியொ
டம்புலீ ஆட வாவே!

**அரும்பத உரை**

*கத்தி = அலையுடன் சப்தித்து, கடற்பாவை = கடலாகிய மகள், குற்றம் = உடற்குற்றம் 18, அவை 1. பசி, 2, நீர்வேட்டல், 3. பயம், 4. வெகுளி, 5. உவகை, 6 வேணடல், 7. நினைப்பு, 8. உறக்கம், 9. நரை, 10. நோப்படுதல், 11. மரணம், 12. பிறப்பு, 13. மதம், 14. இன்பம், 15. அதிசயம், 16. வியர்த்தல், 17. தேகம், 18, கையறவு, அத துச்சம் = கிரகம் நிற்கும் நல்லுச்சம்.*

**பொருள்.**

*சப்தித்து பரந்துள்ளதும், சங்குகளை உற்பத்திச் செய்வதுமாகிய பாற்கடலாகிய பாவையின் கருப்பத்தில் நீ உண்டாகியதால், மக்களுக்கு உண்டாகக்கூடிய குற்றங்களெல்லாம் உன்னையும் பிடிக்கும். அந்தக் குற்றங்களைத் தவிர்க்கவும நீ செய்த வினைகளைத் தீர்க்கவும நீடிய சுகம் பெறவும் நலவாழ்வு உறவும் நினைக்கும் நிலவே, முத்தி தரும் தலங்களுள் முதன்மையாம் காஞ்சிபுரத்தில் முழுதவம் செய்யும் முக்கண் சிவைக்கு உன்னைப்பற்றும் குற்றக் குறைகளைத் தவிர்க்கும் முயற்சி மிக உண்டு. ஆதலால் அம் முயற்ச்சியின் பயனைப் பெறுக, இது உனக்கு நல்ல சமயம், காஞ்சி காமாட்சியுடன் ஆட வருவாயாக!*

கூடிக்க ளித்துநின் னேடுந்த வழ்ந்துறூஉம்
குழவிகார் மேக மென்போன்
கோதண்ட மேபிடித் தாரும்பி னைத்தகர்
குறும்பிற்க ளிப்ப னிங்கோ

ஓடிப்பி டித்துடன் ஆடிக்க் ளிக்கவோ
ஒண்டொடி யார்க ளின்றால்
உன்னையெம் மம்மைவா வாவென்ற ழைத்துனக்
குற்றபைந் தொடையு மணியும்

சூடிக்க ளிக்குபோ தோடும்பு துப்புது
நயபட் டாடை போர்த்தி
துங்கமுத் தாரஞ்சி வப்புநற் றுழ்வடஞ்
சுடர்மணி பணியு மணிவித்

தாடிக்க ளிக்குநற் கோலப்பொ ருட்டரூஉ
மம்மையோ டாட வாவே!
அத்தநா ரீசுரர்க் கொத்தகா மாட்சியொ
டம்புலீ ஆட வாவே!

**அரும்பத உரை**

*குழவி = குழந்தை, கார்மேகம் = கறுத்த புயல், கோதண்டம் = வில், தகர் = பிளக்கும், குறும்பு = விளையாட்டான பொல்லாங்கு.*

**பொருள்,**

*உன்னோடு கூடிக் களித்துத் தவழ்கின்ற மேகமாகிய குழந்தை (சில சமயங்களில்) வில் ஏந்தி உன்னை அம்பால் எய்து இரண்டாகப் பிளந்து விடுவதாகக் குறும்பு செய்து களிப்பான். இங்கோ அம்மையுடன் ஓடிப் பிடித்தாட ஒருவரும் இல்லை. ஆகையால் உன்னை எங்கள் காமாட்சி அம்மை "வா வா" என்று அழைத்து உனக்கு, மாலை, மணி, புஷ்பம், பட்டாடை, முத்தாரம், பவழவடம், மற்றும் அணிகலன்கள் கொடுத்தும் விளையாடுவதற்கான அழகு சாமான்கள் எல்லாம் கொடுத்தும் உதவும் காமாட்சி அம்மையோடு ஆட வருவாயாக!*

ஏற்றம்ப யக்குபே ரின்பங்கொ டுத்தருள்
இன்னமு தஞ்ச மைத்தாங்
கேதந்த விர்த்துவி ருந்துசெய் மாதேவி
ஏகம்ப வாணன் முன்றில்

வீற்றம்பொற் கூழொண்ம ணிக்கறி அட்டியுண்
வெண்ணிலாச் சோற மைத்து
விண்ணின்றி ழிந்தமு துண்டென்னொ டாடவா
வெண்ணிலா என்றும் வாரா

சீற்றத்தி னேடுள மாற்றம்பொ ருந்துதி
ருட்டிசெ லுத்து மாற்றான்
சிற்றின்ப மஞ்சநொ றுங்கவிழ்ந் தன்பினின்
சிந்தமு தெய்க்கு வண்ணம்

ஆற்றற்கு நீயஞ்சி ஏத்திப்பு கழ்க்கச்சி
அம்மையோ டாட வாவே!
அத்தனா ரீசுரர்க் கொத்தகா மாட்சியொ
டம்புலீ ஆட வாவே!



**அரும்பத உரை**

*ஏதம் = துன்பம், அட்டி = சமைத்து, திருட்டி செலுத்து மாற்றான் = பார்த்ததனால.*

**பொருள்**

*பெருமை தரத்தக்க இனிய அமுது சமைத்துப் பிறவித் துன்பம் நீங்குமாறு விருந்து செய்கின்ற அம்மை ஏகம்ப வாணனின் முன்றால் வீற்று பொற்கூழ் சமைத்து நவமணிக்கறி ஆக்கி வெண்ணிலாச் சோறு பண்ணி அம்புலீ! விண்ணின்று இழிந்து வந்து நிலாச் சோறுண்டு அம்மையுடன் ஆடி பேரின்பம் அடைய 'வா' என்று அழைப்பினும் வாராத கோபத்தால் அம்மை முனிந்து நோக்க அதன் பயனாக, சிற்றின் பம் நுகரும் இடமாகிய கட்டில் தொறும உன் அமுத கிரணம பாழாகும வண்ணம் அம்மை செய்து விடுவார்கள. அதற்கு அஞ்சி அம்புலியே காமாட்சி அம்மையுடன் ஆட வருவாயாக!*

மேகச்சி றுவனக் காடற்கு ளானென
மெல்லிகா மாட்சி நின்னை
விண்ணின்றி றங்கிவந் தாடென்ற ழைப்பினும்
விட்புலத் தின்று மகலாய்

காகத்தி னுக்கருள் வோனப்பு யற்றனைக்
காழக மென்று கந்து
காகுளிக் குத்தகு நாகத்து மீதுற
கண்பிசைந் தேக்க மடைவாய்

மோகந்த ரத்தகு தோற்றம்ப டைத்தநீ
முற்றும்வ னப்பி ழக்க
முக்கணன் வைத்தநனா யிற்றையாங் கேயெழ
மூட்டுவன் சிந்தை கொள்ளில்

ஆகத்தி னேடுற்ப வித்தநன் னம்புலீ
அம்மையோ டாட வாவே!
அத்தம்ப குத்தநாற் கொத்துக்க ளிக்குகா
மாட்சியோ டாட வாவே!

**அரும்பதவுரை**

*சிறான் = சிறுவன், காழகம் = உடை, காகுளி = மெத்தை.*

**பொருள்.**

*உன்னோடு ஆடுவதற்கு மேகமாகிய சிறுவன் உளான் என்ற காரணத்தால் உன்னை ஆகாயத்தினின்றும் இறங்கிவந்து அம்மையுடன் 'ஆடவா' என்று அழைப்பினும் ஆடவந்தா யில்லை. விஷ்ணு உன் தோழனாகிய மேகத்தைத் தன் ஆடையாக எடுத்துப் போர்த்துக் கொண்டு உன் விரோதியாகிய பாம்பின்மேல் சயனம் செய்து கொண்டால் உனக்குத் துணை இல்லை என்று துக்கப்படுவாய், அது அல்லாமலும் அர்மை வருந்தக் கண்ட பரமசிவன் உன் அழகை இழக்குமாறு தன் வலக் கண்ணாகிய சூரியனை எழச் செய்வான், ஆகையால் அழகோடும் தோன்றிய அம்புலியே, காமாட்சி அம்மையுடன் இன்னே ஆட வருவாயாக!*

*ஏழாவது அம்புலிப் பருவம் முற்றிற்று.*

## எட்டாவது அம்மானைப் பருவம்.

செம்பொனு ருக்கியெ டுத்துதி ரட்டியொண்
 சீதள நன்மணிகள்
செப்புமு றைப்படி வைத்துபொ ருத்திய
 செங்கழங் கங்கைகொடு

உம்பரி ருக்கையுள் சென்றுவ ருமபடி
 ஊக்கவு மம்மனைகள்
ஒண்கதிர் திங்களெழு வண்டமெ ழுந்திழிந்
 தோங்கியெ ழுந்தரனுர்

நம்மிட மம்மைவி டுக்குமொ ராதுபோல
 தற்பர னேயிடமாய்த்
தங்கவி ழைந்தவ ளெங்குறை வாளது
 சாற்றிய ழைக்கவண்ண

அம்பல வாணியெம் பங்கினி லேயுளாய்
 ஆடுக அம்மனையே!
அம்மைகா மாட்சியெ முள்ளமகி ழைந்தவள்
 ஆடுக அம்மனையே

**அருமபத உரை**

*சீதளம் = குளிர்ச்சியான, ஊக்க = எழுப்ப, உம்பர் இருக்கையில் = தெய்வ உலகத்துக்குள், மூவண்டம் = மூன்று அண்டங்கள், தற்பரன் = சிவபிரான், அம்பலவாணி = அம்பலத்தில் வாழ்பவள்.*

**பொருள்.**

*செம்பொன்னை உருக்கி எடுத்து உருட்டி அதில் மணிகளை முறைப்படி பொருத்தி கையிற்கொண்டு, அக்கழங்குகள் தேவர் உலகத்துக்குச் சென்று திரும்பும் மூன்று சந்திர மண்டலங்கள் போன்றும், அரனிடம் விடுத்த தூது போலும் மேலே ஓங்கிச்சென்று அப்பரனின் இடப்பாகத்தில் தங்கி இருக்க விரும்புமவள் எங்கிருக்கிறாள் என்று சிவபிரானிடம் சொல்லி அச்சிவபிரானை நின்னிடம் அழைத்து வரும்படி காமாட்சி அம்மையே அம்மனைக்காய்களை வீசி எறிந்து அம்மானை ஆடுக!*

செந்தழ லோடுமிழ் செங்கதிர் வெய்யவன்
திங்களொ டுஞ்சுடர்கள்
செவ்வண ரூர் முக மொன்றிய கண்கள்விண்
சென்றுதி ரிந்தனவைச்

சுந்தரி தேவச வுந்தரி அந்தரி
துங்கைய லங்கிருதை
சோதிபு ரந்தரி ஆதிப ரம்பரை
நாயைக ளிதநீனபோல்

இந்தவி ழும்மனை தாவியெ ழும்படி
ஏற்றிவி ழுந்தபொழு
தேந்திபெ யர்த்துமெ டுத்தெறி யச்சுழன்
றேகிவி ரிந்தவெளி

அந்தர மேபுகு மண்டமெ டுத்துந்
ஆடுக அம்மனையே!
அம்மைகா மாட்சியெ முள்ளம்நி றைந்தவள்
ஆடுக அம்மனையே!

**அரும்பத உரை**

*செந்தழல்=நெருப்பு, செங்கதிர் வெய்யவன்=சூரியன், திங்கள்=சந்திரன், இந்தவிழ=குளிர்ச்சியைத் தருகின்ற.*

**பொருள்.**

*நெருப்பு, சூரியன், சந்திரன் ஆகிய மூன்று கண்களும், செஞ்சுடராகிய பரமசிவன் முகத்திலிருந்து கிளம்பி வானில் திரிந்தனவற்றை, தேவமாதர்களுள் அதிக அழகு உடையவளும், பார்வதியும, வானில் இடம உடையவளும், உயர்ந்தவளும், அலங்காரம் உடையவளும், சர்வ உலகங்களையும் காப்பவளும், பரமாகிய பரை யானவளும், சுத்தை யானவளும், ஆகிய நீ கண்டு மகிழ்ந்தனைபோல் அம்மனைக்காய் மேலே எழுந்து கீழே விழுந்த பொழுது ஏந்தித திரும்பவும் எறிய, அவை சுழன்று வானவெளியில் புகுமாறு அந்த மூன்று அண்டங்களையும் கையில் எடுத்து காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

மண்டியெ ழுங்கதிர் செஞ்சுடர் வானின்ம
திக்கொளி யைத்தருமவ்
வண்ணம ளிக்குசு டர்க்குழை கொப்புவ
ளப்புடை யொண்மகரக்

குண்டல மேதகு சூழிய மோடிரு
கோகன கப்பிறைகள்
கோலம ணித்தொடர் பட்டம டுக்குகு
ரைக்குபொ ன்னெணவளைகள்

ஒண்டட மார்பின ணிந்தசி வப்பொடு
ருட்பணி லத்தொடையல்
ள்ளிடை மேகலை யாமிவை யாலொளி
யுற்றபெ ருங்கழங்கா

மண்டமெ டெத்துவி டுத்துபி டித்துநீ
ஆடுக அம்மானையே!
அம்மைகா மாட்சியெ முள்ளம்நி றைந்தவள்
ஆடுக அம்மானையே!

**அரும்பத உரை**

*மண்டி எழுங்கதிர் = மிகுந்து எழுகின்ற ஒளிக்கதிர், செஞ்சுடர் = ஞாயிறு, மேதகு = மேன்மை பொருந்திய*

**பொருள்.**

*மிகுந்த வெளிச்சத் தோடுங் கூடிய சூரியன் சந்திரனுக்கு வெளிச்சம் கொடுப்பதுபோல் அம்மையாகிய நீ அணிந்த குழை, கொப்பு, மகர குண்டலம், மேன்மையோடுங் கூடிய சூழியம், பொன்னாற் செய்யப்பட்ட சூரிய சந்திரப் பிறைகள் மணிவடம், நெற்றிப்பட்டம் கையில் அடுக்கப் பட்டன போல் அணிந்த வளையல்கள, மார்பில் பவழம் முத்து மாலைகள், இடையில் அணிந்த மேகலை இவைகளால் ஒளிபெற்ற அம்மனைக் காய் களை வீசிப் பிடித்து காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

அன்னம டப்பிடி கிள்ளையொ டும்பொரு
அம்மைநின் அத்தமருள்
அத்தவ முற்றம னத்துவி ருப்புடை
அக்கம ணித்தொடையோய்

இன்னுயி ரொத்தத னுள்ளொளி யாயெம
திவ்வுட லிற்புகுந்தாங்
கெவ்வணு விற்குளும் அவ்விட மேவிஇ
ருந்தனை அவ்வணமே

பின்னிய அம்மனை விண்ணுல கெங்கும்வி
ரிந்துசென் றங்குவெளி
வீதிநெ டுந்தெரு வுந்திசை எங்கும்வி
ரைந்துசு ழன்றெழவே

அன்னையெ னத்தகு பெண்பிளை பைங்கிளை
ஆடுக அம்மனையே!
அம்மைகா மாட்சியெ முள்ளம்நி றைந்தவள்
ஆடுக அம்மனையே!

**அரும்பத உரை**

*அத்தமருள் = சிவபிரானுக்குத் தன் ஆகத்தில் பாதி கொடுத்தருளும்; அக்க மணித்தொடை = உருத்திர அக்க மாலை.*

**பொருள்,**

*எமது அன்னையே திரு ஏகம்பமுற்று தனித்துத் தவஞ்செய்து சிவபிரானுக்குத் தன் உடலில் பாதி பாகம் கொடுத்தவளே, உருத்திராக்க வடம் அணிந்தவளே, எமது, உயிராய், எமது உள் ளொளியாய், உடலின் முழுதும் பரவி நிறைந்தும் எவ்வணுவிற்குள்ளும் நீ மேவி இருக்கும் தன்மைபோல் நீயாடும் அம்மனைக் காய்கள் விண்ணுலகம் எங்கும் விரிந்து சென்று வான வீதியில் திக்குத் திசை எல்லாம் விரைந்து சுழன்று எழும்படி காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

## அம்மானைப் பருவம்

எந்திக்கி னும்பொருந் தும்பல வாமுயிர்க்
கின்னருள் மாரி பொழியும்
எம்முமை அங்கெலாம் அம்மைநின் அங்கயல்
என்னுஞ்சு டர்க்க ணவைநோக்

கிக்கைத்ந லத்தைவிட் டேயுயர் வானெழுந்
திப்புவிக் குற்ற ததுபோல்
இட்டமிக் குற்றவைம் பொன்னிற்க ழங்குகள்
எந்திக்க ரத்திலுயர

ஏற்றிப்ப ரந்தவா னுக்குட்சு முன்றெழ
எவித்தி ரும்பி வருபோ
தின்பின்க டைக்கணோக் கக்காய்க ளோடெழுந்
திங்குற்ற தென்னும் விழியோய்

அத்நத்தி னம்மனை வைத்தாடி நிபிடித்
தம்மானை ஆடி யருளே !
அம்மைகா மாட்சியெ முள்ளம்நி றைந்தவள்
அம்மானை ஆடி யருளே !

**அரும்பத உரை**

• *இக்கைத் நலம் = சராசரங்களால் அலங்காரம் செய்யப்பட்ட இப் பூமி, ஐம்பொன் = பஞ்ச உலோகம், (இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி), உயர்வான் எழுந்து = மேலுலகம் ஏழினும் சென்று (மேலுல கம் ஆவன 1. பூலோகம் 2. புவர்லோகம், 3. சுவர்லோகம், 4. சன லோகம், 5. தபோலோகம, 6. மகாலோகம். 7. சத்தியலோகம்)*

**பொருள்**

*எல்லா திக்குகளிலும் (பல உலகங்களிலும் நிலை பெற்றுள்ள) பல உயிர்களுக்கும் அருள்மாரி பொழிகின்ற எம் உமையவளே, உயிர்கள் உள்ள இடங்களெல்லாம் நின் சுடர்க்கண்களின் பார்வை இப்பூமியிலி ருந்து எழுந்துபோய்த் திரும்ப இங்கு வருவதுபோல் ஐம்பொன்னிறைற் செய்த கழங்குகளை இங்கிருந்து நீ ஏவ மேலே போய்த் திரும்புவனவாகிய அக்கழங்குகளோடு நின் பார்வையும் தொடர்ந்து போகும் நோக்கை யுடைய காமாட்சி அம்மையே, கையில் அவ்வம்மனை ஏந்தி வீசிப்பிடித்து ஆடுவாயாக !*

வான்றோய்ந்த நாகத்தின் மேலுற்ப வித்ததோர்
மகவென வந்த குமரீ
மாதேவ னுன்னைக்க லந்தவந் நாணிகழ்
வதுவையின் நாய கனொடு

தேன்றோய்ந்த போதுபந் தாடிக்க ளித்ததைச்
சிந்தனைக் கின்று கொணர்வான்
செஞ்சடைச் சோதியோ டன்பிற்க சிந்தவன்
திருவருள் எய்த நிலனில்

மான்றோய்ந்த முற்பட ஈராங்க ரங்கொடும்
வாங்கிப்பெ யர்த்து மெறியு
மாதவஞ் செய்யெம தம்மைபெம் மானுடன்
மருவியொன் றுய சிவமா

னுன்றோய்ந்த நெஞ்சமோ டேயாழ்ந்த இன்பிலே
டம்மானை ஆடி யருளே!
ஆடும்பி ரானுடன் கூடுங்கா மாட்சியொண்
அம்மானை ஆடி யருளே!

**அரும்பத உரை**

*நாகம் = மலை, வதுவை = மணம், போது பந்தாடி = மலர்ச் செண்டாடி.*

**பொருள்,**

*வான் அளாவிய இமய மலையிற் பிறந்து வந்த குமாரியே, மாதேவனாகிய சிவபிரான் உன்னைக் கடிமணம் செய்த காலத்தில் நீ நின் நாயகனோடு மலர்ச் செண்டு அப்போது ஆடியதை இந்நாள் ஞாபக மூட்டும் வண்ணம் அச்சிவ பிரானின் திருவருளை இனியும் அடைய வேண்டி சிவனோடு ஆடி, அவன் கையில் தாங்கிய மானும் மழுவும் நிலத்திற் றோய விட்ட இரு கரங்கள் கொண்டு வாங்கிப் பெயர்த்தும் எறிய அம்மனையைக் கை கொண்டு சிவனோடு சிவமாகும் உள்ளத்தோடு காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

## அம்மானைப் பருவம்.

களித்தாடு முள்ளங்க ரந்தாடு மவனொடு
கலந்துற வாடி யுமையுன்
கரமிரண் டாடவுள் ளங்கைசி வப்பூற
கைவளைக ளாடி பொளிர

நெளித்தாடு நுண்ணிடை யணிந்தாடு கிண்கிணி
நெகிழ்ந்தாடு கொண்டை சுடிகை
நெற்றியுற் றங்காட நிமிர்நவண் ணப்பூவில்
நிறையுவண் டாட உறவை

விளித்தாடு வீரென உரைத்தாடு வாண்முகம்
வியர்த்தாடி வாங்க மனையை
விடுத்தாடி முன்வலம் பின்னிடக் கைகொண்டு
விளையாடி இன்ப மடியார்க்

களித்தாடு மம்மைமூ வம்மனை யேயணைத்
தம்மானை ஆடி யருளே!
ஆடும்பி ரானுடன் கூடுங்கா மாட்சியொண்
அம்மானை ஆடி யருளே!

**அரும்பத உரை**

*கரந்து = ஒளிந்து, நிமிரு = உயரமாகச் சூடிய, உறவை = நட்பினரை, விளித்து = அழைத்து.*

**பொருள்.**

*சந்தோஷித்து ஆடுகின்ற நின் உள்ளத்தில் ஒளிந்து ஆடுகின்ற அச் சிவ பெருமானோடு கலந்து உறவாடுகின்ற உமை அம்மையே நின் கரங் களாடவும், உள்ளங்கை சிவப்பாகவும் நீ அணிந்த வளையல்கள் ஆடிப் பிரகாசிக்கவும். நெளித்தாடுகின்ற நுண்ணிடையில் அணிந்த கிண்கிணி ஆடவும், கொண்டை நெகிழ்ந்தாடவும். சுடிகை நெற்றியில் ஆடவும், மிகுதியாக அணிந்த மலரில் மொய்த்த வண்டுகள் எழுந்து ஆடவும் உன் நட்பினரை அழைத்து 'ஆட வாரீர்' என்று உரைத்து முகம் வியர்க்க அம்மானை ஆடி அச்சேடியர் வீசிய அம்மனையை வாங்கி வலசாரி இடசாரி யாக எறிந்து விளையாடி நின் அடியார்க்கு இன்பம் அளித்தாடும் அம்மையே மூன்று அம்மனைக் காய்களைக்கொண்டு, காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

இக்கேசு வைக்காதெ றிந்துமுன் அமுதவாய்
இன்பேவ டிக்கும் எழிலோ
டேஐம்ம லர்க்கணை யைச்சோர விட்டுமுன்
ஈர்ப்பசைக் கண்ணு முளமும்

மிக்கூறு தண்ணேய மேதருஉ மங்குசம்
வீழ்த்தியி ராங்கு சமொடு
விட்டேயெ றிந்தபா சத்தோய்ம னத்துவி
ருப்பேமி குத்த இளையாள்

திக்கேபு ரக்குமவ் வோரெண்ம ரோடறம்
செய்யுமப் பன்னி யரொடும்
தேவமா தாறுபே ரோடுமின் அம்மனை
செங்கைத்த லங்க ளெதிலும்

அக்காலெ டுத்தாடு விண்டோயு டுத்திரள்
அம்மானை ஆடி யருளே !
ஆடும்பி ரானுடன் கூடுங்கா மாட்சியொண்
அம்மானை ஆடி யருளே !



**அரும்பத உரை**

*இக்கு = கரும்பு, சோரவிட்டும் = இழந்துவிட்டும், ஈர்ப்பசை = தயவோடுங் கூடிய அன்பு, அங்குசம் = அழகிய தனம், திக்கே புரக்குமவ் வோரெண்மர் = திக்குப் பாலகராகிய எட்டுபேர்கள், விண்தோய் உடுத்திரள = ஆகாயத்தில் விளங்கும் நட்சத்திரக் கூட்டம்.*

**பொருள்.**

*நின் கரத்திலிருக்கும் கரும்பைச் சுவைக்காது நழுவ விட்டும் நின் அமுதவாய் இன்பத்தையே வடிக்கும், நின் கையில் உள்ள மலர்க் கணையை இழந்தும் அன்பு நின் கண்ணிலும், உள்ளத்திலும் அதிகமாக உண்டாகும. நின் கையில் உளள ஒரு அங்குசத்தை வீழச் செய்தும், இரண்டு அழகிய குசங்கள் உடையாய், பாசத்தை இழந்தும் நின் மனத்தில் இருந்த விருப்பம் உடையாய் ஆகிய நீ, இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற அட்டதிக்குப் பாலகரின் மனைவியரோடும், சரசுவதி, இந்திராணி, இலக்குமி, அதிதி, அநசூயை, அருந்ததி என்ற ஆறு மாதர்களுடனும், பிரகாசிக்கின்ற உடுத்திரளாகிய அம்மனைக் காய்களை நின் எல்லா கைத்தலங்களிலும் ஏந்தி காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

ஒயில்காணு மாமயில் குரல்நாடு பூங்குயில்
உருமானு மந்த ணெழிலி
உரைவாச கம்புகல் கிளைசூடு பூந்துணர்
உகுதேன ருந்து மறுகால்

பயில்வான வண்ணடை யிடுதாவி அன்னம்நின்
பதசேவை தன்னின் முழுக
பரைகாம மார்விழி யுமைதூது போவெனப்
பகர்யாவு மேற்க இசையா

வெயிலேயு மிழ்ந்தமுத் தகலாழி யிற்படு
விரிசேப்ப கழ்த்த கனகம்
மிகவேயெ டுத்ததைத் திரளாயு ருட்டிமென்
மிருதாங்க ரத்தி லணைய

அயில்கூர்வி ழிச்சிவை பெருமான்ற னக்குவிடும்
அம்மானை ஆடி யருளே!
அரனுரு டற்கிடப் புறமாய்ப்ப குத்தவுமை
அம்மானை ஆடி யருளே !

**அரும்பத உரை**

*ஒயில் = அழகு, மானும் = போன்ற, எழிலி = மேகம், கிளை = கிள்ளை, கிளி, பூந்துணர் = பூங்கொத்து, உகு = சிந்துகின்ற, அறுகால் = வண்டு, வெயில் = பிரகாசம், அகலாழி = விரிந்த சமுத்திரம், விரிசேப்பு = பிரகாசிக்கின்ற பவழம், அகழ்த்த = தோண்டி எடுத்த, மிருதாங்கரம் = மிருதுவாகிய கைத்தலம்.*

**பொருள்.**

*நின் அழகையே கண்டு களிக்கும் மயிலும், உன் குரலையே நாடியிருக்கும் குயிலும், உன் தோற்றத்தையே போன்றதால் அதையே கண்டு மகிழ்ந்திருக்கும் புயலும், நீ சொல்லும் வார்த்தைகளையே பேசும் கிளியும், நீ சூடும் புட்பத்தில் தேனை நீங்காது அருந்தும் வண்டுகளும், நின் நடையைக் கண்டு பயில அங்கு நடையிட்டு நின்பாத சேவையில் முழுகி இருக்கும் அன்னமும், ஆகிய இவைகளை ஒன்று ஒன்றாக "நீ தூதுபோ" வென மேலே சொன்ன எவையும் அம்மையாகிய நின்னை விட்டுப் பிரிந்துபோக சம்மதிக்காததால், முத்து, பவழம் பொன் இவைகளைத் திரட்டிக் கையில் ஏந்தி சிவபிரானிடம் தூதாகச் செல்லுமாறு காமாட்சி அம்மையே நீ அம்மானை ஆடுக !*

**அம்மானைப் பருவம்.**

கொழுந்தேயெ மக்கருஞ் சிவப்பேற ளித்தரன்
குடிக்காத ரத்தி னுதவு
கொடியேயு ருக்கொடு எளியோம்பி ழைக்கவெங்
குலமேவி ளக்கி களிகாய்

விழும்போத ணைத்தெழ உகைத்தேதி ரும்பவும்
விடுத்தேபி டிக்கு முமைநீ
விருப்போடு மப்பர னிடத்தேப குத்தமர்
மிகுத்தாவல் கொள்ளி னடைய

எழுந்தோடு சந்திரர் விரைந்தோடு சூரியர்
இசைந்தோடு மங்கி கலைகள்
இருந்தேயெ ழும்புமச் சரமேயு ணர்ந்தவை
இறைக்கேகு வண்ணம் மனனுள்

அழுந்தாசை கொண்டுமுச் சுடராங்க ழங்கொடுநீ
அம்மானை ஆடி யருளே !
அரனுரு டற்கிடப் யுறமாய்ப்ப குத்தவுமை
அம்மானை ஆடி யருளே !

**அரும்பத உரை**

*கொழுந்தே = இளையவளே, உருக்கொடு = திருஉருவம் எடுத்து, களிகாய் = ஆடிக் களிப்பதற்கான அம்மனைக்காய், அங்கி = அக்கினி.*

**பொருள்,**

*இளையவளே! எமக்குச் சிவப்பேறு அளித்து அரனுடைய குடிக்கு அன்போடு உதவுங் குலக்கொடியே, திரு உருவங்கொண்டு எளியேங்களை பிழைக்க எங்குலத்தை விளக்கி, ஆடிக் களிக்கும் அம்மனைக்காய் உயர இருந்து விழும் போது அணைத்துத் திரும்பவும் விடுத்துப் பிடிக்கும் உமையவள் ஆகிய நீ பரமசிவனுடைய இடப்பாகம் பெற மிகுந்த காதல் கொள்ளுவை எனில் அடைய சந்திரன், சூரியன், அக்கினி ஆகிய மூன்று கலைகளையும் அவைகளின் சலனம் உணர்ந்து அவை அரனோடு ஒன்றுபடும் சிந்தையோடு இருத்தி அம்முச்சுடர்களாகிய கழங்குகளைக்கொண்டு காமாட்சி அம்மையே அம்மானை ஆடுக!*

*எட்டாவது அம்மானைப் பருவம் முற்றிற்று.*

# ஒன்பதாவது நீராடற் பருவம்

வீங்குமுலை யோசிறிய தால்நெடிது நீந்துமது
வெல்லுமோர் செயல தின்றால்
மிஞ்சுபுகழ் கஞ்சிக்கு லாலர்செயும் மண்கலசம்
மிக்குநன் றென்று கொண்டங்

கோங்கிவிழு கங்கைபுகு பஞ்சமொடு சக்கரநீர்
உயருகா யாரோ கணம்
உதவிட்ட சித்திகட மென்றுதீர்த் தங்கள்மகிழ்
வோடுநீ ராடு மமயம்

தூங்குமதி யோடரவு கொன்றைமலர் உந்துமதை
அங்கையால் அள்ளி வெளியில்
அன்றுதறி செங்கைகொடு தள்ளுபுனல் தெள்ளுதுளி
அண்டருல கெய்து மாறு

வாங்குவளை யார்த்தசைய வண்ணமல ராலுதைய
மல்குநீர் ஆடி யருளே!
மண்ணிலுயர் கஞ்சிநகர் மன்னிவளர் பெண்ணரசி
மல்குநீர் ஆடி யருளே!

**அரும்பத உரை**

*பஞ்சமொடு சக்கரநீர் உயருகாயா ரோகணம் உதவிட்ட சித்தி= பஞ்ச தீர்த்தம், சக்கர தீர்த்தம், காயாரோகண தீர்த்தம், இட்ட சித்தி தீர்த்தம் என்பன, மல்கு=மிகுந்துள்ள.*

**பொருள்,**

*வளர்கின்ற நின் கொங்கைகள் சிறியன ஆகையால் இவைகளைக் குடமென நம்பி அதிக சலத்தில் நீந்தி ஆடுவது, நீந்துவதில் வெற்றி தராது தக்கதல்ல ஆகையால் கச்சிக் குயவரிடம் ஒரு மண்குடம் பெற்று, அரன் முடியிலிருந்து வழிந்து நிரம்பிய, பஞ்சம், சக்கரம், காயாரோகணம், இட்ட சித்தி என்ற நான்கு தீர்த்தங்களிலும் நீராடுங்கால் அக் கங்கையுடன் மிதந்துவந்த, அரவு, பிறை, கொன்றை இவைகளை எடுத்து வெளியே எறிந்து விட்டு, கைகளாலும், கால்களாலும் தண்ணீரைத் தள்ளி அப்படித் தள்ளுகையில் நீர்த்துளிகள் விண் எட்டும்படி காமாட்சி அம்மையே நீராடுக!*

பண்டடியர் என்புருகி உள்ளமுழு தன்புவளர்
பண்பின ராகி உடலம்
பாயிருக ணின்பவமு தூறுநில மாயவிதன்
பால்மகிழ்ந் தாங்கு நசையின்

தொண்டரவர் நெஞ்சிளகு தன்மையொடு நெக்குருகி
தூயையுன் கோயி லணுகித்
தோயுமுடல் யாவுநனை நீரருவி வீழவர்கண்
தோற்றுமின் பச்ச லதியின்

அண்டர்முதல் எண்டிசையர் அங்ஙனினே வந்தனைசெய்
தன்புகொண் டாடி நெகிழ்வின்
அந்தரநின் றேதமுகில் தூவுமழை போலமரர்
ஆட்டுநீர் கண்ணி னிழிய

மண்டுமடி யார்பரவு மின்பமதின் சிந்திருகண்
மல்குநீர் ஆடி யருளே!
மண்ணிலுயர் கஞ்சிநகர் மன்னிவளர் பெண்ணரசி
மல்குநீர் ஆடி யருளே !

**அரும்பத உரை**

*என்பு = எலும்பு, நசையின் = விருப்பத்தோடு, சலதி = ஆறு, மண்டு அதிகரிக்கின்ற.*

**பொருள்**

*காமாட்சி அம்மையாகிய நீ காஞ்சிக்கு வருமுன் அடியார்கள் நின் பால் அன்புகொண்டு இன்பக் கண்ணீர்சிந்தி நிலத்தில் ஊறிய தலம் என்று இக்கஞ்சியில் விருப்பங்கொண்டு இங்கே எழுந்தருள தொண்டர்கள் நின்பால் அணுகி கோயில் முன் கிடந்த அவர்கள உடல் நனையும்படி கண்ணீர் மல்கியதால் அது ஆறுகப்பெருக, நின்னை வானோரும் அட்ட திக்குப் பாலகரும் அவர்கள் இருக்கும் இடத்திலிருந்தே பணிந்து அங்கிருந்து மழை பெய்வதுபோல் ஆனந்தக் கண்ணீர் சொரிய, இங்ஙனமாக யாவரும் சிந்திய கண்ணீராகிய தீர்த்தத்தில் காமாட்சி அம்மையே நீராடுக!*

சத்தகடல் யாவுமடை கின்றதரி தாருமதின்
தண்கடல ஆடி மகிழ்தல
சாந்தைமிசை யுள்ளமணி தர்க்கரிய தென்றுநுகர்
தாழ்புயல் எழின் முகவ

சுத்தசல மாகியுல கெங்குமத னுலுயிர்கள்
துய்புற வார்க்கு மமுதம்
சுத்தசிவ காமியுமை ஆயுநகர் ஆமதனுள்
துங்கமேழ் வாவி எனவெம

சித்தமெழு மேதுமடை விக்குநல தீர்த்தமவை
சித்தியும மீயு மெனவிண்
செப்புபுகழ் சத்தகுளம உற்றெழுவ ருக்குரிய
தீர்த்தத்தின் மூழ்கி முறையால்

மத்தனையோர் பாகமுட லிற்பகிர வாவுடையோய்
மல்குநீர் ஆடி யருளே!
மண்ணிலுயர் கஞ்சிநகர் மன்னிவளர் பெண்ணரசி
மலகுநீர் ஆடி யருளே!



**அரும்பத உரை**

*சாந்தை மிசை = பூமியின் மேல், ஏழின் = ஏழு சமுத்திரத்திலும், துங்க மேழ் வாவி = பரிசுத்தமான தடாகங்கள் ஏழு, சித்தியும் = நித்திய போகமாகிய மோக்கத்தையும், மத்தன் = பூமத்தை அணிந்தவன், பித்தன்.*

**பொருள்.**

*ஏழுகடல்கள் இருக்கும் இடங்கள யாதென உணர்ந்து அந்த ஏழு கடல்களிலும் நீராடல் யார்க்கும் அரிது என்று உணர்ந்த 1. சம்வர்த்தம், 2. ஆவர்த்தம், 3 புட்கலா வர்த்தம், 4. சங்காரித்தம், 5. துரோணம், 6. காளமுகி, 7. நீல வருணன், ஆகிய ஏழு புயல்களும், 1. உவர், 2. நன்னீர், 3. பால், 4. தயிர், 5. நெய், 6. கருப்பஞ்சாறு, 7. தேன் என்ற அவ்வேழு கடல்களிலும், முகந்து, சுத்தசலமாக உயிர்கள் அதனல் பயனடைய அமுதாக வானிலிருந்து பொழிய, அது சிவகாமி அம்மை யாகிய நீ சிறந்ததெனத் தேர்ந்தெடுத்த காஞ்சியில், எம் சித்தத்தில் தோன்றும் எதையும் அளிக்கவல்லதாகவும், வானேரால் புகழப்பெற்ற தாகவும், ஆகிய ஏழு தீர்த்தங்களாக அமைய, அந்த ஏழு தீர்த்தங்களில் ஞாயிறு முதலாக ஏழு கிழமைகளிலும் அவரவர்களுக்குரிய தீர்த்தத் தில் முழுகி சிவபிரானிடம் இடப்பாகம் பெறும் காமாட்சி அமையே நீராடுக!*

ஊதலைபு ரண்டுகரை மோதுநதி பாயுநில
ஓதங்க சிந்த தலமுள்
ஊசிநுதி மீதுதவ யோகமுட னுதனுடல்
ஊடிடப் பாதி பகிர்வான்

ஆதரமொ டேபரம னன்றமரி லிங்கவுரு
அம்மைநீ செய்யு புரமென்
றண்டர்புகழ் கச்சியினில் கூடிவரு மேழ்நதியை
ஆளதி தேவ தைகளும்

சீதமுமிழ் பாதமலர் தோயுவண மேவருடி
செம்மைசேர் தூய்மை பெறநின்
சேவடிக ளேதவழு மிப்பதியி லேழினவர்
தீர்த்தமென் றுக்கு மதனுள்

மாதரசி ஈசனொடு வேதமொழி பேசுமுமை
மல்குநீர் ஆடி யருளே !
மண்ணிலுயர் காஞ்சிநகர் மன்னிவளர் பெண்ணரசி
மல்குநீர் ஆடி யருளே !



**அரும்பத உரை.**

*ஊது = சப்திக்கின்ற, ஓதம் = ஈரம், பகிர்வான் = பங்கிடும் பொருட்டு, தோயுவணம் = படியும் வண்ணம்.*

**பொருள்.**

*சப்திக்கின்ற அலைகள் புரண்டு கரையில் மோதுகின்ற நதி பாயும நில ஓதம் கசிந்த தலங்களுள், ஊசிமுனையில அமர்ந்து பரமசிவன் உடலில் பாதி பகிர்ந்துகொள்ளும் பொருட்டு, பரமன் அமரும் இலிங்க உரு நீ உண்டாக்கும் இடம் என்று வானோரும் புகழ் கச்சியம்பதியில் கூடி வருகின்ற, கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி என்ற ஏழு நதிகளையும் ஆளுகின்ற அதி தேவதைகளும அம்மையாகிய நின் பாதங்கள் அவ்வேழு நதிகளில் படியுமாறுன் நின் பாதங்களை வருடி அதனால் அவ்வெழுவர் செம்மைசேர தூய்மை அடைய வேண்டி நின் சேவடிகள் தவழும் இப்பதியில் அந்த ஏழு கன்னியர்களும் உண்டுபண்ணும் தீர்த்தத்தில் காமாட்சி அம்மையே நீராடுக !*

ஆலெயிறி ணைந்தலைய நாகணைகி டந்தறிது
யின்றுவி ழித்த அளவில்
ஆருயிரெ மம்மைசிவ காமியிளந் தங்கைமொழி
அந்தந லேச்சி எனவே

சாலெயில்கள் வாழுலவு காஞ்சிபுர மேகியவண்
நண்ணுலாம் நீரின் மகிழ்வால
தாழ்ந்துவினை யாடுமன மிக்குடைய ளென்பளது
தன்மனந் துற்ற வருகால

பாலமுத மோடுபுனல் மாவடியில் ஓடவருள்
பாலிக்க பாறக டலினை
பண்ணரிய நாகுகுடமி றைத்தவமு தங்கொணரும
பன்னியோ டுற்ற செடிய

மாலெழுமவ் வூரைவலம் ஆகுநதி யிற்பகிய
மல்குநீர் ஆடி யருளே!
மண்ணிழுயர் காஞ்சிநகர் மன்னிவளர் பெண்ணரசி
மல்குநீர் ஆடி யருளே!



**அரும்பத உரை**

*ஆலெயிறி ணைகதலைய நாகணை = விடப்பல் லோடுங் கூடிய சர்ப்ப சயனம், எயில்கள் = மதில்கள், பன்னி = பத்தினி.*

**பொருள்.**

*விடப்பறகளையுடைய நாகமாகிய அணையில் அறிதுயில் செய்யும திருமால துயிலினின்று விழித்தபோது, எமது ஆருயிர் அன்னையாரா அவன் தங்கையுமாகிய நீ காஞ்சி புரத்தில் தீர்த்தத்தில நீராடும் மனத அடையாய் என்பதை உணாந்து தான்பள்ளி கொளளும்பாற்கடலை செய்யரிய குடத்தில் நிரப்பி, அதைத் தன் மனையாட்டியின இடை மிற்றாங் கிக் கொணடுவரச் செய்து காஞ்சியில் மாவடியில பாலொடு என்றும பொ ரோடு காஞ்சிக்கு வலமாக ஓடும்படியாகச் செய்து அப்படி பெருகி வரத நதியில பெருக்கெடுத்து வந்த புதிய வெள்ளததில காஞ்சி காமாட்சி அம்மையே நீராடுக!*

தீர்த்தபு றங்களில் நீத்தக லன்நிரை
திரையோ தச்சலிலம்
தீட்டும ணிப்பணி லத்தொடு சங்குசி
வப்போ டாங்குகரை

சேர்த்தன வோடக லுகுகுளு டுக்குலம்
திகழ்வெய் யோனுடனுய்
திங்களெ னுஞ்சுட ருங்குள மண்முவஞ்
செறிவும போன்றொளிர

நீரதுறை யிற்பர மாகுநெ டுநதுகில
நெடிகொள் பூநதொடையல
நீக்கிம டபபெடை அன்னமெ னத்தகு
நடையால வாவிநடு

காற்படு கின்றம கட்குந லந்தர
கடிநீர் ஆடுகவே!
காமம லர்ககணை நாதனு டூற்புக
கடிநீர் ஆடுகவே!

**அரும்பத உரை**

*நீதத கலன் = திருமேனியினின்று நீக்கிய அணிகலன்கள, நிரை = பததி, வரிசை, ஓதச் சலிலம = சமுத்திரம், பணிலம் = முதது, அகல = அகண்ட வானம, அண்மு = அருகேவரும், அருசெறிவும் = அழகிய திரளும, நெடி = வாசனை.*

**பொருள்.**

*தீர்ததக்கரையில் அம்மையாகிய நீ நீதத அணிகலன்களின் பத்திகள, மணிகளையும், முததங்களையும், பவழங்களையும் சமுததிரம் கொணர்ந்து கரையிற் சேரத்தது போன்றும், அததுடன் வானினின்று உடுக்குலமும், சூரியன், சநதிரன் இவைகளும் சோந்து வந்து குவிந்தன போன்றும, தீர்ததக் கரையில ஒளி வீசவும நீராட்டததுக்கு அதிகமாகத தோன்றிய ஆடை நீத்தனவும், சூடிக் களைந்த மலா மாலைகளும் நீரத்துறையில் நீக்கி அனனம் தரையிலிருந்து நீரில் இறங்குவதுபோல் வாவி நடுவில், சிவ பிரான் தலையிற் சூடிய கங்கை நின் பாதத்தில் படும்படியாகக் காமாட்சி அம்மையே நீராடுக!*

கூந்தன்ம லர்ப்பொடி யோடுக லந்தநெய்
குமுதத் தேனுடனாய்
கூர்விழி யாங்கயல் பாயும வற்றொடு
குளநீ ரின்கலவ

தீந்துமி கட்டிமிர் சாந்தமொ டும்புனல்
நிறைசந் தத்துடனாய்
நீத்தம லர்க்குவை யிற்படு கின்றவை
நெடிகந் தப்பொடிதூள்

மாந்திய வண்டுக ளோடுக ளித்திட
மலர்மென் கஞ்சமெனும்
வாசம லர்த்துணை யுங்கர மோடலர்
மடற்கஞ் சங்கலவ

காந்தனி டத்தொரு பாதிக லந்தபெண்
கடிநீர் ஆடுகவே!
காமம லர்க்கணை நாதனு டற்புக
கடிநீர் ஆடுகவே!

**அரும்பத உரை**

*குமுதம் = ஆம்பல், திமிர் = பூசிய, மாந்தி = குடித்து, சாந்தம் = சந்தனம், நீத்த = சூடிக்களைந்த, காந்தன் = புருஷன்.*

**பொருள்.**

*கூந்தலில் வைத்த மலர் சொரிந்த கள்ளும், குழலில் பூசிய நெய்யும் சேர்ந்து வாவிநீரில் பூத்த ஆம்பல் சொரிந்த தேனுடன் கலவ, நின் விழியாகிய கயல் வாவியில் பாய்ந்தோடுங் கயலோடு கலவ, நின்திரு மேனியிற் பூசிய சந்தனம், வாவியிற் கலந்த சந்தனக் குழம்போடு கலவ, நீ நீத்த மலரில் மொய்த்த வண்டுகள் வாவி நீரில் மிதக்கும் கந்தப் பொடியில் உள்ள மலர்ப் பொடியில் மொய்க்கும் வண்டுகளுடன் கலவ, நின் பாதங்களும் கைத்தலங்களுமாகிய தாமரை மலர்கள் வாவியில் பூத்த செங்கஞ்சமோடு கலவ, காமாட்சி அம்மையே நின் நாயகனாகிய பரமசிவனிடத்தில் ஒரு பாதியுடன் உன் உடற்பாதி கலக்கு வண்ணம் நீராடுக!*

தண்வன சம்மலர் சூதம சோகுடன்
தவழும் முல்லைமலர்
தாவிவ ளர்ந்ததொர் காவிம லர்ந்துதிர்த்
தகமைச் சோலைநடு

பண்ணிய வாவியொ டும்புன லிற்படு
பலவாம் வாசமலர்
பைம்பொடி யாவம கிழ்ந்துகு டைந்துநீ
படிந்தங் காடுகையில

பெண்ணாறு வோர்விரி விண்ணுறை சேடியர்
பெருமா யத்தினர்மேல்
பேணிய கங்கையின் வாரியி றைத்துநின்
பெருங்கா தற்குரியோன்

கண்ணழ லாறுவ ணஞ்சொரி யும்படி
கடிநீர் ஆடுகவே!
காமம லர்க்கணி நாதனு டற்புக
கடிநீர் ஆடுகவே!

**அரும்பதவுரை**

*தண்வனசம் = குளிர்ச்சி பொருந்திய தாமரை, உதிர்த்தகைமை = உதிருந்தன்மை, ஆயம் = கூட்டம், பேணி + அகங்கையில் = ஆசைப் பெருக்கத்தால் உள்ளங்கையில், பேணிய + கங்கையில் = சிவன் ஆதரித்த கங்கையில், காதற்குரியோன் கண் அழல் = காதலன்றன் நெற்றிக் கண்ணின் நெருப்பு, காதலனிடம் உண்டாகிய காமாக்கினி.*

**பொருள்.**

*தாமரை, சூதம், அசோகு, முல்லை, காவி என்ற பஞ்ச பாணத்துக் காய இவைகள் மலர்ந்து விழும் மடல்கள் நிறைந்த வாவியில் நீராடுகின்ற அம்மையே, சரஸ்வதி, இந்திராணி, இலக்குமி, அதிதி, அநசூயை, அருந்ததி ஆகிய ஆறு மாதர்களும் தேவமாதர்களும் ஆகிய பெண்களின் கூட்டத்தின் மேல் ஆசைப் பெருக்கத்தால் அவர்கள் மேல் நீரை உள்ளங் கையால் வாரி இறைத்து அப்படி இறைக்கையில் நின் காதற் குரியோன் ஆகிய சிவ பிரானிடம் உண்டாகிய காமாக்கினி ஆறு வண்ணம் அவன் மேல் பன்னீர் தெளித்தது போல் நீரைத் தெளித்து காஞ்சி காமாட்சி அம்மையே நீராடுக!*

விண்பட் டாடை யதனுடலில்
மின்னும் பொறிக ளுடுவமைத்த
விலையிற் றுனை உகந்தருள
வேண்டு மெனுமெண் மலர்மகளிர்

ஒண்பா வாடை எடுத்தெழவும்
ஒதக் கலிங்கக் கருமுகிலின்
ஒருபால் வானச் சிலையருகிட்
டும்பர் கோன்மா மழைக்கிறைவன்

தண்ணென் மாரு தக்கடவுள்
தங்கட் டருமப் பத்தினியர்
தலைவிக் கெனவைத் துகில்விரித்துத்
தழையுங் கச்சித் தடக்கரையில்

கண்ணோ வற்குக் கருத்திருத்தக்
கடிநீர் ஆடி யருளுகவே!
கண்மூன் றுடையா ரிடம்பகிர்வோய்
கடிநீர் ஆடி யருளுகவே!

**அரும்பத உரை**

*பொறி = பொட்டு, உடு = தாரை, தானை = சேலை, எண் மலர் மகளிர் = அட்ட இலக்குமிகள், வானச் சிலை = வானவில்.*

**பொருள்**

*விண்ணாகிய பட்டு ஆடையின் உடலில் பிரகாசிக்கின்ற உடுக்களாகிய புள்ளிகள் அமைந்த விலையிலாத பாவாடை உடுத்தி யருள வேண்டும் என்று அட்ட இலக்குமிகள் தாங்கி நின்றும், குளிர்ச்சி பொருந்திய கருமுகிலாகிய சேலைக்கு வான வில்லாகிய கரையிட்டு அந்தச் சேலையை இந்திரன், வருணன், வாயு இவர்களின் பத்தினியர் பிடித்து நின்றும் கச்சித் தடாகக் கரையில் காத்து அம்மை யுன் கடைக் கண்ணிலிருந்து வரக் கூடிய உத்தரவுக்கு எதிர் பார்க்க காமாட்சி அம்மையே நீராடுக!*

வாவுங் கலையின் மதச்சிமிழும்
வாரும் மதமா விலாவெலும்பும்
வகைசேர் வாசப் புழுகுநெயும்
வண்ணஞ் சுண்ணம் மலர்ப்பிணையும்

தூவும் கந்தப் பொடிக்கலமும்
துவருஞ் சந்தக் குழம்பகலும்
சுடரிற் படுநற் புகையகிலும்
தூவெள் ளாடி யொடுவிழிமை

பூவுங் கலனும் எடுத்தெடுத்துப்
புறத்தே நிற்கு மெழுமகளிர்
பொதுநின் றுடு மவனிடத்திற்
பொருந்தும் நின்னை யழகுசெய்வார்

காவுங் கயமும் மலிபுரத்திற்
கடிநீர் ஆடி யருளுகவே!
கண்மூன் றுடையா ரிடம்பகிர்வோய்
கடிநீர் ஆடி யருளுகவே!



**அரும்பத உரை**

வாவும் = பாயும், கலை = கலை மான், கலை மதம் = கத்தூரி, வண்ணம் = சாந்து, சுண்ணம் = பூசிக்கொள்ளும் பொடி, மலர்ப்பிணை = மலர்மாலை. துவரும் = பூசும், (துவர்ப்பாகிய), ஆடி = கண்ணாடி, காவும் = தோட்டமும்,

**பொருள்,**

தாவுகின்ற கலைமானின் மதமும், கூந்தலை வார யானையின் விலா எலும்பும், கூந்தலுக்கான வாசனைத் தைலமும், நெற்றிக்கான சாந்தும், திருமேனிக்கான வாசனைப் பொடியும், அணிவதற்கான மலர் மாலையும், மேலே தூவக்கூடிய கந்தப் பொடியும், பூசுவதற்கான சந்தனக் குழம்பும், புகைப்பதற்கான அகிலும், முகம் பார்க்கும் கண்ணாடியும், சூடுவதற்கான புஷ்பமும், பூண்பதற்கான ஆபரணங்களும், தாங்கி சத்த கன்னியர்கள் பரமசிவனோடுங் கூடும் நின்னை, அழகு செய்யக் காத்திருக்க, தோட்டமும் தடாகமும் நிறைந்த காஞ்சியில் காமாட்சி அம்மையே நீராடுக!

ஒன்பதாவது நீராடற் பருவம் முற்றிற்று.

# பத்தாவது ஊசற் பருவம்



எண்சாணு டம்பெனு மிக்குச்சு வீட்டினி
லேயுயர் உச்சி மேட்டில்
ஏழிரே டொருமூன்று நாடியென் னும்வடத்
தீர்த்துப்பி ணித்து காணற்

கொண்ணுந தோருயிர் என்னுமுஞ் சற்பலகை
உந்தகா லாலு தைந்தே
ஊக்கும்மி ரேசக பூரக மாமிவை
ஓடித்தி ரும்பு வண்ணம்

கண்ணேயெ மக்கினிய பெண்ணேவ னக்கிளியே
கண்ணேறு மிக்க வுள்ளாய்
காதலா றேதுவார்க் காதரத் தீதல்செய்
காஞ்சிகா மாட்சி யெம்மை

புண்ணீர்ப்பெ ருங்குழி வீழாதெ டுத்துமை
பொன்றூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்
பொன்றூச லாடி யருளே!

**அரும்பத உரை**

*குச்சு = சிறு வீடு, ஏழிரேடொரு மூன்று நாடி = தசநாடிகள், உந்த = எழும்ப, காலால் = உடம்பின் கால் உறுப்பால், (காற்றால்), இரேசகம், பூரகம் = மூச்சு விடுதல், வாங்குதல், கண்ணேறு = திருட்டி, புண்ணீர்ப் பெருங்குழி = உதிரக்குழி, பிறவி.*

**பொருள்,**

*சிற்றில் ஆகிய மனித உடம்பின் தலை உச்சியுடன் பிணைக்கப் பட்டுள்ள பத்து நரம்புகளாகிய, அத்தி, அலம்புடா, இடை, காந்தாரி, குஹூ, சங்கினி, சிகுவை, சுழிமுனை, பிங்கலை, புருஷன், என்னும் இவை களோடு ஊசற் பலகைபோல் சேர்க்கப்பட்டுள்ள உயிர், காற்று போக்கு வரத்தால் ஊசல்போல் ஆட, அவ்வூஞ்சலி லிருந்து வேண்டுவார்க்கு வேண்டியதே அன்புடன் கொடுக்கும் காமாட்சி அம்மையே எமக்கு இனி பிறவா நலந் தந்து ஊசல் ஆடுக!*

முக்குச்சி யின்றலைக் கம்பொன்மு டிக்குப்பி
முற்றும்பொ ருத்து மணிகள்
மும்மூன்று மாயிரு பத்தேழு பன்னியர்
மோகன்ம திக்கு நிகரா

கக்குங்க திர்க்கன கத்தின்ப தித்திட்ட
கற்கட்டு வில்லை யுடன்
காதல்வி ளைக்குமா றுடிக்க ளிப்புற
கச்சிப்ப திக்கு ளாடி

திக்குத்தி சைக்குளே முட்டும்ப டிக்காடு
தேனெழுந் தாடு சடையாள்
செம்பொற்ற டம்பல கைக்குக்க வின்றருந்
தெய்வப்பி ராட்டி உயர்வான்

புக்குப்பி னுல்விரைந் துற்றுக்க ளிப்பதோர்
பொன்னூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்
பொன்னூச லாடி யருளே!

**அரும்பத உரை**

*மணிகள் மும்மூன்று = நவமணிகள், மோகன்மதி = மன்மதனைப் போல் காமத்தை எழுப்புஞ் சந்திரன், கற்கட்டு வில்லை = கல் பதிக்கப்பட்ட வில்லை, தேன் = வண்டு.*

**பொருள்.**

*நின் கூந்தற் சடையின் முனையில் உள்ள மூன்று குச்சுகளுக்கும் அவைகளின் தலைக்குப் பொன்னாற் செய்யப்பட்ட கவசமாகிய குப்பியின் முழுதும் பொருத்தப்பட்ட கோமேதகம், நீலம், பவளம், புஷ்பராகம் மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் ஆகிய நவமணிகள் முக் குப்பியில் உள்ள இருபத்தேழும் ஆகிய இருபத்தேழு நாயகிகளுக்குக் காம மெழுப்பும் ஆசை நாயகன் சந்திரனை ஒப்பாக உள்ளதும் கற்கள் இழைத்ததுமான தலையிற்சூடிய வில்லையுடனே காதல் உண்டாக்கு வண்ணம் மகிழ்ச்சியுடன் கலந்தாடும்படி திக்குகளில் வானில் தோய்ந்து ஆடும் வண்டுகள் மொய்த்த (குழற்) சடையை உடையவ ளாகிய நீ ஊசற் பலகைக்கு அழகு தந்து ஊசல் சென்று திரும்பும்படி காமாட்சி அம்மையே பொன்னூசல் ஆடுக!*

சொட்டுங்க ளூர்வதின் கச்சுந்த ளர்ந்ததன்
தொங்கற்ப தக்க மிழிய
தோளுற்ற ணிப்பல ஆரங்க றங்கிபூண்
சோதிக்கு ழைகள் நழுவ

எட்டச்சி வன்றனைக் கிட்டற்கு பாயமொன்
றெண்ணித்த வத்தின் விலகி
இட்டப்ப திக்குளத் துய்க்குங்க ணைக்கெனு
மின்கணைம் போது பிணையல்

மட்டற்று வார்முலை யுற்றுப்பு ரத்துநின்
மாற்பிற்பி றந்த மயலால்
வாடிச்சி வந்தர னேடுங்க லந்துநல்
வாழ்விற்க வாவி எழுமோர்

புட்பப்பு துத்தொடை பெட்பின்று வண்டிட
பொன்னூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்
பொன்னூச லாடி யருளே!

**அரும்பத உரை**

*சொட்டுங்கள் = புட்பத்தினின்று வடியும் தேன், இட்டப் பதி = மனத்துக்கினிய நாயகன், பெட்பு = அன்பு.*

**பொருள்,**

*சூடுகின்ற மலரின் தேன், திருமேனியில் வழிந்து ஓடுவதால், அணிந்துள்ள கச்சு தளர்ந்து, அதிற் பொருத்தியுள்ள தொங்கல் இழிய, தோளில் அணிந்த ஆரங்கள் ஒன்றோ டொன்று உராய்ந்து சப்திக்க, காதிற்பூண்ட குழைகள் நழுவ, எட்டியுள்ள சிவபிரானை அடைய உபாயம் ஒன்று கண்டு கொண்டு, தவத்தினின்று விலகி, ஐம் மலர்க்கணைக் காய ஐந்து வித மலர்களால் ஆய மாலையை அளவில்லாதபடி மார்பில் அணிய அது போது நின் மார்பில் உண்டான காதலால் மாலை சிவந்து, நின் மார்பில் புரண்ட மாலை சிவபிரானின் மார்பிற் றங்கி நல்வாழ்வு பெற ஆசை கொண்டு அம்மாலை அப்பரமசிவனை அடைய அவா உடைய உன்மேல் கொண்ட அன்பினால் துவண்டிட காமாட்சி அம்மையே பொன்னூசல் ஆடுக!*

செறியண்டம் யாவுங்க டந்தஞா னச்சுடர்
திகழ்கின்ற சோதி தருமத்
திருஞான மாங்கதிர் என்னும்வ டம்பல
திதித்தெழுந் துற்ற அவையோ

டுறியிட்ட கலமெனப் புனைவித்த பொன்னூச
லுயிரோடு வாழு மறிவாங்
குயர்வாய தீதென்ப துணராம லேயலைந்
தூசற்க ளிக்கு மளவில்

நெறியுற்று லாவுவெண் ணிலவோடு வெய்யவன்
நெடுவானின் மாறி அவரை
கிமிர்காலி னுலுதைத் தகல்போது நடுவினில்
நிற்கின்ற ஞான ஒளியைப்

பொறிஐந்தி னுலடைந் தமர்காம நோக்கியே
பொன்னூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்
பொன்னூச லாடி யருளே!

**அரும்பத உரை**

*செறி = மிகுந்த, திருஞான மாங்கதிர் = ஞானக்கதிர், திதித்து : பெற்று, நெறி = வகுக்கப்பட்ட விதி,—நிலவு, வெய்யவன் = சந்திர கலை, சூரிய கலை, கால் = கால் உறுப்பு, காற்று. நடு = சூரியனுக்கும் சந்திரனுக் கும் மத்தியில், பொறிஐந்து = ஐம்பொறியின் புலனடக்கம்.*

**பொருள்.**

*மிகுதியாகிய அண்டங்களுக்கு அப்பால் உள்ள ஞான ஒளி தருகின்ற ஞானக்கதிர் என்னும் வடக் கயிறுகளாகிய நிலைபெற்ற அவைகளோடுங் கட்டித் தொங்க விடப்பட்டுள்ள உயிர் என்னும் ஊசலோடுங் கூடிய அறிவு, பெறுதற் கரியவற்றுள் உயர்வாகியது இது என்பது உணராமல் அலைந்து, ஊசலாடிக் களித்து, உயிர் இடகலை, பிங்கலை என்பதாக மாறி மாறி காற்றின் உதவியால் ஓடி அலைய, இடகலை, பிங்கலைக்கு நடுவில் உள்ள ஞான ஒளியை அடைந்து அங்கே அமர்கின்ற காமாட்சி அம்மையே பொன்னூசல் ஆடுக!*

நித்தக்க ளிப்பின்பெ ருக்கிற்கி ருப்பிட
 நேயகச் சிப்ப தியனை
நித்தந்து தித்திடத் துற்றத்த பாகத்தில்
 நிற்கும்ம னத்தி னுடனே

புதுதம்பு துப்புது தங்கக்க லிங்கநின்
 பொற்பாமி டைக்க ணிந்துப்
பொன்னூச லின்மகிழ்ந் தின்பூச லாடவண்
 போர்த்தியு டுத்து மெவையும்

அத்தத்து வன்றனை எய்துசித் தந்தனை
 அற்றத்து றந்து விலகும்
அவ்வித்தி யாதத்து வத்தினம் மாயைபோல்
 ஆங்குப்பு றத்தின் விலக

புத்திக்குள் நித்தங்க லந்தங்கி ருந்தபெண்
 பொன்னூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்
 பொன்னூச லாடி யருளே!



**அரும்பத உரை**

*நேயம் = அன்பு, இடத்து இடப்பாகத்தில், அத்தம் = பாதி, தங்கக் கலிங்கம் = பீதாம்பரம், (பொன்னுடை) பொற்பாம் இடை = அழகிய இடுப்பு, வித்தியா தத்துவம் = முத்தத்து வத்தினென்று, மாயை.*

**பொருள்,**

*நித்தியானந்தப் பெருவெள்ளத்துக்குப் பிறப்பிட மாகியவனும் எமது அன்பனுமாகிய திரு ஏகம்பனைத் துதிசெய்து, அவன் இடப் பக்கத்தில் ஒரு பாதியில் இடங்கொள்ளும் மனத்துடன், புதுப்புது பீதாம் பரம் நின் அழகிய இடையில் அணிந்து பொன்னூசலில் அமர்ந்து மகிழ்ந்து ஆடுகையில், அந்த ஏகம்பனை அடையும் நெஞ்சத்தை விட்டு மாயை விலகு வதுபோல் உடுத்த நின் ஆடை ஊசலின் வேகத்தால் விலகும்படி, எம் சித்தத்துடன் என்றும் கலந்த காமாட்சி அம்மையே பொன்னூச லாடுக!*

சததங்கொ டுககப்பெ றுமபொன்னி ஞற்செயுந
தண்டையு ளார்கசு மணிகள்
தங்கச்ச தஙகைககு வைததமுத தமபலகை
யைததாளு கைத்த வமயம

தததிச்சி தர்நதோடி அற்றுப்பு றமபோக
தண்மலாப் பாத மவையில
தஙகிச்சு வைககுவண டச்சததி ஞலெழத
தாவலேயொ லிதத தெனுமத

தததுஙக டற்பாலெ ழுநதுவந திபபதியின
தஙகிறறெ ஞநி னேததுச
சஙகார்பப நின்றுவி ருநதான்கி டநதுச
ருப்பததின மிது சயனப்

பொத்தின்க ளிததகா மாட்சியெம அமமையே
பொனறுாச லாடி யருளே !
புணணியாக கன்பாய கணணியப் பெண்பிளாய
பொன்றுாச லாடி யருளே !



**அரும்பத உரை**

*உகைதத அமயம=செலுததிய சமயம, கடறபால = பாறகடல, பொதது=தவறு.*

**பொருள்.**

*ஞானசமபநத பிள்ளேயின் பொறறுளததுக்குச சப்தம கொடுக்கப் பெறற காரணததால சப்தமபெறற பொன்றை செய்த தணடையுள நவமணிகள ஆரதது, அதறகுள இருக்க, சதங்கைக்கு வெளிப்புறமாகப் பொருததிய முததுக்கள, ஊஞசற பலகை காலால செலுததபபட்ட போது காற சதங்கையிலிருநது சிதறித ததகி யோடி, பாறகடல அலேயிலிருநது நீரததுளிகள பறநதன போன்றும, உகைதத காலில சூடிய மலாகளில மொய்க்கும வணடுகள அசசததோடு எழுநது அலேபோல ஒலிக்கவும, பாறகடலே இங்கு கச்சிப்பதிக்கு வந்து விட்டதோ என நினேததுத திருமால நின்று கொண்டிருநதவன அமாநது, அமாநதவன் சருப்பததின மீது கிடந்து செய்த இநத தவறுதலேக்கண்டு களிதது காமாட்சி அம்மையே பொன்னூசல் ஆடுக !*

முப்பற்றி னேடுமுன் செய்துற்ற வல்வினை
முற்றும்வி டாத பசுவிண
முட்டித்தி ரும்பிமண் ணுற்றுத்த கித்திரு
மூள்வினை யைப்பொ டித்துச்

செப்பும்பெ ணைப்பிளந் தம்பொன்சி தர்த்திமண்
திண்டாது தைத்து பதியைச்
சிந்தைக்கு ளூன்றிக்க லந்தபோ தாடிய
சேணூச லான்க ளிக்க

இப்பூம டந்தைநின் பொற்பாம்ப தங்களை
ஏந்தித்த வந்தி னுதவி
இக்கச்சி யின்றிரு மாலோடி ருக்குமா
ரேகம்ப முற்ற பரமாம்

பொற்றம்ப மோடமர் சிற்றம்ப லத்துமை
பொன்னூச லாடி யருளே!
புண்ணியர்க் கன்பாய கண்ணியப் பெண்பிளாய்!
பொன்னூச லாடி யருளே!



**அரும்பத உரை**

*பசு = ஆன்மா, மூள்வினை = உண்டாகின்ற நல்வினை, தீவினை இரண்டு, பொடித்து = சுட்டுச் சாம்பலாக்கி, சேண் ஊசல் = அகல நீளமான ஊஞ்சற் பலகை, ஏகம்பம் = திரு ஏகம்பன் எழுந்தருளிய தலம்.*

**பொருள்,**

*மூன்று ஆசைகளும் நீங்கப் பெறாத ஆன்மா பதியை அடைய முயற்சி செய்கையில் மேலும் கீழும் ஊசலாடி அதுபோது பெண்ணுசை யைத் தகாத்து (அம்மையின் ஆகத்தைப் பிளந்து ஈசனோடு கலந்து) பொன்னுசையை நீக்கி (ஊசல் ஆடுகையில் அணிந்திருந்த பொற்கலன் கள சிதற) மண்ணுசையினின்று விலகி (ஊசல் ஆடுகையில் பூமியை உதைத்து) ஊசல் ஆடும்போது நின் பாதங்களைப் பூமாதேவி தன் கரங் களால் ஏந்தி, நீ செய்யும் தவத்துக்கு உதவி அப்பூமாதேவி கச்சியில் திருமாலுடன் இருக்க அருளி பரமாகிய பொற்றம்பமோடு அமர்ந்துள்ள உமையவளே, பொன்னூசல் ஆடுக!*

மின்னிடைது வண்டசையு சங்கிலிபி டித்தகர
வெள்வளைச் சங்க மசைய
மேகலைத ளர்ந்தமையின் றோளசைய பொற்கடகம்
மின்னிக்க ரத்தி னிழிய

சென்னிமுழு தும்புனையு நன்மணிபொ ருந்துபல
செம்பொற்க லன்க ளசைய
திங்களொடு சூரியர்பு ரண்டசைய நீண்டகுழை
செய்யமென் றோளி னசைய

பன்மணிவ டங்களசை யும்பொழுதி னங்கிளைய
பச்சிளங் கொங்கை யசைய
பாரமலர் மாலைபுர ளவ்வமயம் மொய்வரிப
றந்துபு றத்தி னகல

பொன்னுலகொ டெவ்வுலகி னும்நிலைகொள் வாரசைய
பொன்னூச லாடி யருளே !
புண்ணியர்க ளன்பினுளை உள்கவமர் எம்மிறைவி
பொன்னூச லாடி யருளே !

**அரும்பத உரை.**

*மேகலை = இடையணி, அமை = மூங்கில், கடகம் = கங்கணம், வரி = வண்டு.*

**பொருள்.**

*மின்னலைப் போன்ற இடை யசைய, அசைகின்ற ஊசலின் சங்கிலியைப் பிடித்த கைகளில் அணிந்துள்ள வெண் சங்க வளைகள் அசைய, மேகலை தளர்ந்திழிய, மூங்கிலை யொத்த தோள் அசைய, அணிந்த கடகம் பிரகாசித்து கையிலிருந்து நழுவ, அணிந்த ஆபரணங்கள் அசைய, சூரிய சந்திரர் அசைய, குழைகள் தோளில் அசைய, மார்பில் அணிந்த வடங்கள் புரண்டதனால் இளங் கொங்கைகள் அசைய, அணிந்த மாலையில் மொய்த்த வண்டுகள் பறந்து பக்கத்தில் செல்ல, சகல உலகங்களிலும் நிலை பெற்றவர்கள் அசைய, காமாட்சி அம்மையே பொன்னூசல் ஆடுக !*

தேசுலவு வானினடு வோடுபிணை கின்றவடஞ்
　　செம்மனத் தன்பு கருணை
　தீனரெமை ஆளுமிகு நற்பசையீ ரத்தினொடெஞ்
　　　சிந்தையா மூசல மகிழ்வோய்

காசொளிய கைப்பொருள்கி டைத்தபொழு திற்றநமம்
　　காமியம் என்னு மிவர்கள்
　கைக்கொடுநன் னெஞ்சமெனு மூசலைய சைக்கமனம்
　　　கட்டுண்ட லைந்த வமயம

ஆசுலவு மப்பொருள டைந்துமுயர் மெய்ப்பொருளை
　　ஆக்குமோ ராறு ணர்கிலேம்
　அன்பினுமை நின்னருளி தோவடியர் மோக்கமுற
　　　அன்புவைத் தெம்முள் நிலவிப்

பூசுகள பத்தினமர் வாசமுல கெங்குமெழ
　　பொன்னூச லாடி யருளே!
　புண்ணியர்க ளன்பினுனை உள்கவமர் எம்மிறைவி
　　　பொன்னூச லாடி யருளே!



**அரும்பதவுரை**

*தேசு = பிரகாசம், பிணைகின்ற = கட்டியுள்ள, (கயிறு) தீனர் = திக்கற்றவர், ஆசு = குற்றம், வாசம் = நன்மணம்.*

**பொருள்.**

*பிரகாசம் பொருந்திய வானின் நடுவோடு பிணைக்கப்பட்டுள்ள நான்கு வடங்களாகிய அன்பு, கருணை, பசை, ஈரம் இவைகளினோடு சேர்த்துள்ள சிந்தை என்னும் பலகையில் அமர்ந்து ஊசல் ஆடுகின்ற அம்மையே, காசின் வடிவமாகக் கைப்பொருளை அடைந்தபொழுது பொருளின் ஒருபுறம் தர்மமும் மற்றொருபுறம் காமியமும் இருந்து நெஞ்சமாகிய ஊசலை ஆட்ட, நெஞ்சம் அலையும் காரணத்தால் மெய்ப்பொருள் யாதென்று உணரோம், இது நின் அருளுக்குப் பொருந்தியதல்ல, காமாட்சி அம்மையே, அடியேங்கள் மெய்ப்பொருளாகிய மோட்சம் அடையுமாறு எம் உள்ளத்தில் இருந்து உதவி ஊசல் ஆடுவாயாக!*

பாதமணி சாலமவை ஓலமிட மாறிஉதை
　　பாதங்க ளாலெ ழுந்த
　பாரினொலி யாலரவு பாயஇடி யோடுமழை
　　　பாரின்பொ ழிந்த தேபோல்

கூதன்மிகு சோலைநடு வார்குடம்வ டித்திடகு
　　லைக்கனிச் சாறு சொரிய
　கூவுமறு கால்வளரு நிம்பழமு திர்ந்தெவையும்
　　　கொண்டுலாம் ஓடை மருவு

சீதமலர் தாவுநரு தாவிகிளை யூடுலவி
　　சேய்குரங் காடு பதியில்
　தீந்தமிழி றைக்கலைஞி ஊசலிசை பாடிஇரு
　　　செய்யகைத் தாள மிடுமப்

போதகம கிழ்ந்துபிலா காசவுரு வாயவுமை
　　பொன்னூச லாடி யருளே!
　புண்ணியர்க ளன்பினொடு உள்கவமர் எம்மிறைவி
　　　பொன்னூச லாடி யருளே!

**அரும்பத உரை**

*பாதமணி சாலமவை = பாதத்தில் அணிந்திருக்கின்ற அணிகளை யாவும், கூதல் = குளிர்ச்சி, வார் குடம் = பெரிய குடம் போன்ற பலாப் பழம், குலைக் கனி = வாழைப்பழம், அறுகால் வளரும் நிம்பழம் = மாம் பழம், மருவு = நெருங்கியுள்ள, போதகம் = போது + அகம் = பொழுது + உளளம்.*

**பொருள்.**

*பாதத்தில் அணிந்த அணிகலன் சப்திக்க மாறி மாறி உதைக்கின்ற திருப்பாதத்தால் பூமியில் உண்டான சப்தத்தால் அரவு தம் இருப்பிட மிருந்து வெளியாகிப் பாய, இடித்து மழை பொழிந்தது போல் சோலையில் மா, பலா, கதலி கனிந்து நீரோட்டமாகப் பழச்சாறு ஓட அந்த அருவியின் பக்கத்தில் உள்ள மரங்களில் குரங்குகள் ஏறி கிளைகளின் வழியாகப் பாய்ந்து உலவும் காஞ்சிபுரத்தில் சரஸ்வதி தாளமிட்டு ஊசற்பாட்டு இசைக்கும்போது உள்ளம் மகிழ்ந்து இசைக்கொப்ப பிலாகாச உருவின ளாகிய காமாட்சி அம்மையே பொன் னூசலாடுக!*

*பத்தாவது ஊசற் பருவம் முற்றிற்று.*



**காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.**



உ

சிவமயம்.

# திருவிலஞ்சி குமாரசுவாமி

# பிள்ளைத்தமிழ்.



இஃது

சேங்கோட்டை மஹாவித்துவான் கனம்

கவிராஜ பண்டாரத்தையா அவர்களால்

இயற்றப்பெற்று

இவற்றை

P. சண்முகவேலாயுதம்பிள்ளை

விருப்பத்தின்படி

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களாகிய

கனம் **M. R.** அருணாசலக்கவிராயரவர்கள்

குமார் **M. R.** கந்தசாமிக்கவிராயரவர்களது

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிடப்பெற்றது.


சுத்தப்பதிப்பு.

இதன்விலை] விகுருதி புரட்டாசிமீ [அணா 4

சிவமயம்.

# பாயிரம்.

## அகவற்பா.

தெண்டிரைக்கடலைமண்டிடுங்கலையாய்ப், புனைபுவிமகளின்கனி
திலதம்மெனத், தண்டமிழ்ச்செல்விதங்கிடுஞ்சிறப்பமை, பாண்டிநா
டதனிற்பல்வளமிகுந்த, அரனுறைதிரிகூடாசலத்தருகுள, இலஞ்சி
சூழ்நற்றிருவிலஞ்சிமாநகரில், எம்மனோர்ப்புரக்கவினிதுறையிறை
யாம், குமாரசுவாமி குளிர்கழற்கன்பால், மங்காதசெந்நெல்
வளர்செங்கோட்டையில், உதித்துநற்கலைபயின்றுயர்மஹா வித்துவா
ன், இயலிசைநற்கவியிராஜபண்டாரத், தையாவவர்கள் ஆர்வமொடிய
ற்றி, ஏறக்குறையவிருபத்தைந், தாண்டுகளாயின அளவில்கற்பனை
நிறை, பிள்ளைத்தமிழாம்பெருநூலொன்று, தேங்கமழ்சோலைத்தென்
காசியிலுறை, கானுகோவென்னுங்கண்ணியகுடியில், பானுவாய்வருச
பா பதிப்பிள்ளையவர்கள், ஏட்டுப்பிரதியா யிருந்ததையென்கவி,
யோட்டிடுந்தன்மைபோ லுதவினதன்றியும், ஏவரும்வாசித் தின்புற
க்கருதிய, என்மனமகிழ விரும்பொருளுதவினர், இலஞ்சிமாநகரில்
ஏர்கெழுநற்குடிப, பிறந்துநற்கோவிற் பெருங்கணக்காய்வோன், ஆண்
டியப்பேந்திர னன்பொடுகொடுக்க, பொருளுதவியுங்கொடு புண்ணிய
ம்வந்ததென், றெண்ணியங்கடலி லின்புடனடைந்து, என்னுயிர்க்குயி
ரா யிலங்கிடுகுமரன், அருளைமுன்னிட்டிதை யச்சிடுவித்தேன்
வடிவேலவன் றிருமலரடிவாழ்க, அச்சிடப்பொருள்தந் தவர்நனிவா
ழ்க, இச்சகந்தன்னி லிசைப்பவர்வாழ்க, கேட்போர்யாரும் கிளையு
டன்வாழ்க, இலஞ்சிமாநகருளோ ரேவரும்வாழ்க, அருண்மிகுகும
ரவேளடியார்வாழ்க.

ஷண்முகதாஸன்.

இலஞ்சி



உ

சிவமயம்.

# திருவிலஞ்சி குமாரசுவாமி

# பிள்ளைத்தமிழ்



## காப்பு.

முகிலொன்றுபாற்கடன்மடுப்பதுகடுப்பநெடு மோட்டுப்பனைக்
கைநீட்டி, மூவுலகுமீன்றவுமைகும்பப்படாமுலை முகட்டுப்பகட்டின்
முட்டித்; துகிலொன்றுமுத்தரியநனைவுறப்பெருகுபாற் றுள்ளருவி
வெள்ளமாந்தித், தோய்ந்துநீந்திக்களித்தாடுமொருகன்றனை துணைய
டிக்கன்புசெய்வாம்; பகலொன்றுசெஞ்சுடர்புறத்திருள்சுருட்டுமப்
பான்மைபோலிருபொழுதுமென், பல்வகையகத்திருள்சுருட்டுமொ
ருஞானப்ரபாகரனைமகளிர்கூந்தல்; அகிலொன்றிலஞ்சிகமழ்தென்னி
லஞ்சிக்குமர குருபரனையமரர்வாழ்வை, யள்ளிலையவேற்கைப்பிரா
னைப்பராவுதுமென் னதிமதுரகவிதழைகவே.

## நூல்.

# காப்புப்பருவம்.

## திருமால்துதி.

தேமேவுதமிழுங்கடம்புந்தடம்புயத் திரண்மணிக்குவடுபூத்
துச்,செக்கர்வானென்னவருமோராறுதிருமுகத் திங்களஞ்சிறுகுழவி
யைக்; கோமேவுசெந்தமிழிலஞ்சிமேவலவனைத்ரி கூடாசலத்தெம்பிரா
ன்,கொத்தடியார்குலமெலாந்தழையவருமரசிளங் குமரனைவியந்துகாக்
கப்; பூமேவுமுந்தியிற்பலபுவனபந்தியைப் பூத்துமுறைகாத்துநின்ற,
பொருவரியநீலப்பொருப்பைக்கருப்பைப்பு காதுபுக்கிந்திரற்குக்; கா
மேவுமரசிருப்புதவுசக்ராயுதக் கடவுளைக்குடவளைக்கைக், கண்ண
னைத்தண்ணந்து ழாய்மௌலியானையங் கல்வாழ்த்திறைஞ்சுதுமன்றே.

## சிவபெருமான் துதி.

அரவின்முகமண்டலமுமமுதமயமொன்றநில வார்சடைக்கொந்
தேறு நீள்பிறைக்கீறறனை,அமுதபலிதந்தபலமுனிவரர்மடந்தையரு
மாசைமுற்றிச்சேரு மாதவக்கூத்தனை; அருவிசொரிகங்கைமதுவொ
ழுகிநுரைபொங்குபுனல் வார்திரைச்சிற்றாறு சூழ்துறைத்தீர்த்தனை,
அகிலபகிரண்டமுமொரடியினிலளந்தமுகில் காணுதற்கெட்டாத
சோதியைச்சீர்ப்பொலி;பரவைமனைசென்றுகவிபரவசமியமபிவருது
தினைச்சொற்றருளு நீதனைப்பூத்தொளிர், பணிவரைமடந்தைபெருகு
ழல்மொழிமடந்தையொருபாகனைச்சொற்காதி போகனைப்பாக்கிய;ப
லமிகுகுறும்பலவினிழல்மிகவிளங்குசிவ லோகனைக்கர்த்தாவை யேக
னைக்கூர்த்தெழு,பழமறைகிடந்தலறவழியடியர்நெண்டணிடு பாதனைக்
குற்றால நாதனைபபோற்றுதும்;விரிதிரைமுகநூநவமணிவிசிறுசெந்தி
நகர் மேவுகப்பற்சேரு மாழ்கடற்சேர்ப்பனை,மிர்கமதககதம்பதளபரிம
ளசுகந்தபுய பாரனைக்கற்பூர பாளிதக்காப்பனை;விகடதடகும்பகடகர
டமதகுஞ்சரவி நாயகற்கற்பமர்வி சாகனைச்சேட்பொலி, வெறிகமழ்
குறிஞ்சிமனைவரையுறுமடந்தையால் விகாரமுற்றுச்சாப வேடரிற்
றேற்றிய;குரிசிலைமணம்புணர்தல்குறமகள்விரும்புமனு கூலனைக்கட்
டாரி வேலனைக்கோற்றொடி,குலவுகரசுந்தரிபொன்மனையில்வளர்குஞ்
சரிமணாளனைச்சப்பாணி கூடுகைக்காப்பொலி; குமுறவொருபுண்டரி
கன்மணிமகுடபந்திபுடை கோபனைக்கற்றோர்கு ழாமெடுத்தேத்திய,
கொழிதமிழிலஞ்சிநகர்தழைபவளருஞ்சிறுகு மாரனைக்கட்டாண்
மை வீரனைக்காக்கவே. (உ)

## பராசத்தி துதி.

வலம்புரிகொள்வீதியினுமவ்ளர்கோபுரத்தினும் வயங்குசெறிநீள
ருவிமணிகாலுமலைப்பினும், வழங்குமொருமூவரையுமகவாய்வளர்
த்திய வளந்தரணிபீடநிலைசொலவேதொழப்புகல்; குலங்கெழுசுராதி
பர்மகுடகோடிதுற்றிய கொழுங்கதிர் நிலாமணிகள் வெயிலாயெரிக்கு
வோர்; குறும்பலவினீழலுறைகுழல்வாய்மொழிக்கொரு குழந்தைய
டியேமுழுதும் வழிபாடியற்றுவாங், கலங்குகடல்நீர்சொரியஅயிராவ
தத்தெழு கடுங்குலிசதாரணனுமடவாள்குயத்திடை; கலந்தினிதுவ
ழவொருமயிலவாகனதழு கூடயபயலர்சேர்புயபன்னிருபாரவெற

தகமகிழ்ந்துபூத்துப், பல்லூழிவாழுமொருதொல்பெருஞ்செல்வம் படைத்தவன்காக்கமன்னே; மணிகொண்டகட்செவிநிதம்பக்கதம்ப முலை வள்ளிபடர்கொழுகொம்பராய்,வளர்கின்றபன்னிருதடம்புயனை யென்னிருகண் மணியைமாணிக்கமலையைத்;தணிகொண்டனுண்டுழி யும்வெண்டரளநிரையுமவண் டாரகையுந்நிரைகிடப்பத், தண்டலைத ழைத்தசுப்பிரமணியபுரவசதி தருகுமரகுருபரனையே. (சு)

## நாமகள் துதி.

முத்தமிழொருத்தனுக்கருமறைக்கெட்டாத மூர்த்திகுற்றேவல் கேட்க, முற்றிவிக்குந்திரமுடத்தேன்முகந்துமணி முடிவேந்தர்முன் றிலெதிர்போந்; தித்திறத்தரியாசனந்தரபிராசபத மெய்தியிகமும்பர மும்வாய்ந், தெம்மனோர்செம்மாந்திருக்கப்பெருங்கல்வி யிறைமைத ருமிறைவிதுணையாஞ்; சித்தசனன்மைத்துனனை அத்திமுகனுக்கிளைய சிங்கத்தைவெஞ்சூரறச், செஞ்சேவலங்கொடியுயர்த்தபைங்கரமொ ன்று தேவர்கோமகன்முடிக்கு;வைத்துமுழுதாண்டதெனிலஞ்சிநகரா திபனைவரைபகவெறிந்தவேற்கை, மறவனைத்தழையுமர கததகலா பமயூர வாகனனைவாழ்விக்கவே. (எ)

## சத்தமாதர்கள் துதி.

பொன்னிற்சிறந்திட்டபுலமையிற்றலைமையிற் பொய்யாதமெய் யுணர்வினிற், பொற்புண்டரீகபதபூசனையில்வாசனை பொருந்தப்பயி ற்றிமுழுது; மென்னைப்புரந்துகொண்டன்றேதனக்கடிமை யென்று விலையோலையிட்ட, வெம்பிரான்செந்தமிழிலஞ்சிப்பிரான்பொருட் டெழுவரையுமஞ்சலிப்பாம்; அன்னத்தின்வருமயிலுமயிலில்வருகிள் ளையும்வெள் ளானையிற்றோன்றுபிடியும், மானின்வருமானுமுதுகலை யில்வருமானும்புள் ளரசில்வருகரியகுயிலு; முன்னுற்றசிங்கப்பொ ருப்பில்வருகான்மாவு முதிர்பரவைகாற்றினனுகல்,முடுகாமல் மாற்றி நின்றேற்றகுழவிப்பருவ முழுதும்புரக்கவென்றே. (அ)

## காளிதுதி.

பாமிழற்றும்பாணரெனப் பண்மிழற்றுஞ்சுரும்பு
பந்தியிருந்தந்திறைை பருகுதரைப்பாண்டிக்
கோமகற்குச்சென்னிபயந் தளித்தகுலமகடன்
குலமகட்குமகனெங்கள் குருபரனைக்காக்கத்

தேமலர்ச்செண்பகக்காவுந் திரிகூடச்சிலம்புஞ்
சினகரமும்நன்னகருந் தென்றனுலாந்திசையும்
மாமணிச்சங்காவணமு மன்றமென்றுங்காக்கும்
மங்கையைநங்குற்றால நங்கையைவாழ்த்துதுமே. (௯)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள் துதி.

கொச்சைப்புனத்திற்குறிஞ்சிக்கொடிச்சியர் குழாத்துடொருத்திவளாக, கொற்றமகளன்றிட்டவாகையுந்துமபையும் பின்னிக்கிடந்துகுலவக்; கச்சைப்பொருந்தனத்திந்திரகுமாரத்தி காதல்மணமாலைசூட்டுங், கற்பகப்பந்தரிற்காப்பேநதிநின்றவன் காக்கமழிலஞ்சிகாப்பார்;பச்சைப்பசும்புரவிமான்றேர்மிசைத்தோன்று பண்ணவர்கள்பன்னிருவரும், பரிமுகக்கடவுளோரிருவருமபொருவரும் பசுபதிகள்பதினொருவரு;மிச்சைப்படுந்திறதெண்மருமெனத்தொகுத் தெண்ணுமுப்பான்மூவரு,மிககோடிமுப்பத்துமுக்கோடியென்றதொகை யமையவருமிமையவருமே. (௧0)

## செங்கீரைப்பருவம்.



மேனைப்பிராட்டிதருபெண்ணரசியுள்ளுவகைவெள்ளத்திலாட்டுவதுபோல், வெள்ளிவரை முன்றில்வாய்பொன்னூபுரந்தள்ளிமிளிர்கணைக்காற்கிடத்தி; யேனைப்பசுங்குங்குமந்திமிர்ந்நீர்ம்புனலெடுத்தெடுத்தாட்டிவிரல்சேர்த்து, தின்னிணியமஞ்சணீர்மும்முறைசுழற்றிவார்த்திருநிலக்காப்பணிந்து; சோனைக்குறுந்திவலைபட்டாடையிட்டுத்துவர்த்திவெண்ணீறுசாத்திச், சுடர்மாளிகைப்புகுந்தேந்துமுலையமிர்தஞ்சுரந்திருந்தூட்டிமடவார்; சேனைக்குள்வைத்துமுத்தாட்டும்பசுங்கிள்ளைசெங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன் செங்கிரையாடியருளே. (௧)

தாராடுகிண்கிணிச்செந்தாட்டுணைதந்தாடுதமணியத்தொட்டிலாடத், தண்பவளமேல்விரலதுக்கிச்சுவைத்தன்னைதாலாட்டுமின்னிசைமடுத்; தோராடுமெய்துவண்டிணைவிழிமுகிழ்த்தயர்ந்தின்றுயில்வராத்துயின்றங், கிடைவருபதத்துணையெழுப்பப்புலர்ந்துவயிறெக்கிக்

குழைந்துவிம்மிப ; போயாடுகென்றெனத்துள்ளியெழுபொருமற்
பொருதுவந்தேந்திமோந்து, பொற்குழிசியூறுபால்வெண்சங்குழைத்
தூப்புகட்டத்தெவுட்டிமெள்ளச்; சீராடியெதிர்நிலைக்கண்ணாடிநிழலு
டன்செங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகனே
செங்கீரையாடியருளே. (௨)

பொருமலறிவிக்குங்கடைக்கண்குறுந்துளிபொடிக்குமுனடுக்க
வருவோம், பொன்மேனியாயவிற்பூந்தாதுமெந்தாதுபுதுநீரெடுத்
தாட்டுவோம்; பருமுலையருத்தித்திருத்திவைத்தின்மொழிபகர்ந்தனை
த்துச்சிமோந்து, பசுமஞ்சளினியநீர்முழுமுறைசுழற்றியப்பாலூற்றி
வாழியென்போம்; அருமணிநுதற்சுட்டிகட்டியொருபொட்டுமிட்ட
ண்ணல்வெண்ணீறுமணிவோம், ஆட்டாதசரவணப்பூந்தொட்டிலிற்
கிடந்தாடினபடிக்குவனசத்; திருமுகமலர்ந்துகுழையாடவிளையாடிநீ
செங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங்
கீரையாடியருளே. (௩)

பட்டபுனல்நித்திலமெனத்திகழும்வட்டவரிபாசிலைபநெட்டை
நெடியபைப்பசைப்பசுந்தாட்கழுத்தளவுநீருட்பயின்றின்றமெல்லரும்பு;
வட்டமிடுபானலைப்புறநிறுத்திசைமுரளுமழலைச்சுரும்பர்விழுந்து,
வாய்மடுத்துண்ணக்கபாடந்திறந்தொருவெள்ளமாக்கொள்ளைநறவங்
கொட்டுபுசெழுங்குங்குமத்தாதிரைந்துங்குறுந்தகட்டல்லிபுல்லிக்,
கோட்டோடலர்ந்துகமழ்செக்கச்சிவந்தபொற்கோகனகமண்டபத்
திற்; சிட்டர்தொழுவாழுமொருசெல்விதிருமருமகன்செங்கீரையாடி
யருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங்கீரையாடிய
ருளே. (௪)

கங்காநதிக்குநிகர்கடவுணதிகளினதிககவின்மணற்றங்குகழியிற்
கதிர்மணிக்குன்றுபொதிபுன்னையங்காவில்மென்காவியங்கயல்பொரு
தலைக்; குங்காவிலக்கால்கொழிக்குமடைகளில்மடைக்கோவுகண்ணுற்
றுவயலிற், குளிர்வயல்மருங்குவெண்முல்லைமல்லிகைவைத்தகொல்
லையிற்கொல்யானைவாற்; பைங்காற்பசும்பொற்பொகுட்டுத்தகட்டித
ட்பங்கேருகப்பொய்கையிற், பங்கேருகச்செல்விவிளையாடுபதிகளிற்
பதிநிலாதுதலாருடன்; செங்காலனங்கள்பயில்தென்னூர்யநன்னூட
செங்கீரையாடியருளே, தெரிதமிழிலஞ்சிநகர்வருகுமரநாயகன்செங்கீ
ரையாடியருளே. (௫)

வேறு.

இந்திரனங்கியமன்கொடியன்புனலீசனெடுங்காலோன்
எண்டருசந்திரனிந்துவனைந்தவன்மாலபனென்போர்தாம்
தந்தமிடங்கள்புரந்திடவந்ததபோதனர்சநந்தோடச்
சங்கதியுஞ்சடையுங்கிரமங்களும்வேதமுநின்றோத
மந்திரமென்றதனங்கள்சுமந்தரமாதர்வளம்பாட
மங்கலசங்கமுழங்கவலம்புரிவால்வளைநின்றூத
அந்தரதுந்துமிபொங்கவிளங்குகனாடுகசெங்கீரை
யண்டர்வணங்கவிலஞ்சியுகந்தவனாடுகசெங்கீரை. (௬)

வாழிமடற்பாளைக்குழல் சரிதர வார்கெழுபந்தாடும்
மாதரிளைப்பாரத்தனிவருசிறு கால்விசிறுங்காவில்
விழியிதழ்க்கா வித்துணைவிழிமணி வேரனெடுஞ்சாரல்
வேடர்குலப்பா வைக்கொருபுதுமண மாலைபுனைந்தாய்நீ
சூழிமுகத்தா னுக்கிளையவனுயர் தோகையர்மன்றாடு
சூலமெடுத்தா டிப்பலிகொளுமதி சூடி தரும்பாலன்
ஆழிதரித்தோ னுக்கொருமருமக னாடுகசெங்கீரை
யாறுமுகப்பே ரிக்குருபரனினி தாடுகசெங்கீரை. (எ)

மாதளையூடேமா வினறுங்கனி வீழ்நரமந்தாரை
வாடியினூடேவாழைநறுங்கனி வீழ்குலைசென்றேழு
காதமுமாறுவாசனை தந்திட மூசுசுரும்பேறு
காவிகளோடேகார்வயலின்புடை யோடைபரந்தோடி
மேதகுபாராவாரம்வளந்தர வேர்கவிசம்பீர
வேலியினூடேபான்மணிசங்கினம் வீசவளங்கூரும்
ஆதிபிரானூராளும்நெடுந்தகை யாடுகசெங்கீரை
யாரணநூலோர்தேடுமிலஞ்சிம னாடுகசெங்கீரை. (அ)

நவப்பிடிநிகர்பருவக்குறமகள் பந்தாடுங்காவூ
டுருகிக்கனமயல்பெருகிக்கருகிபுழன்றேநின்றாய்வோய்
அருணைக்கிரிபுனைதெரியற்பெரியபி ரபந்தாலங்காரா
அசலக்குறுமுனிபணியப்பணிவிடைகொண்டாளுந்தாளா
இருவர்க்கரியவர்பவளச்சடையினர் மைந்தாவைந்தூரா
மெளியற்கருள்புரிகருணைக்கடலெனு மெந்தாய்செந்தூரா

திருவிற்பொலிதருபழனித் தருபர செங்கோசெங்கீரை
திமிரப்பரமதபடலத்தினகர செங்கோசெங்கீரை. (௯)

கும்பக்குறுமுனிவந்தர்ச்சனைபுரி குன்றேசென்றேயோர்
குன்றிற்சிறுகொடியொன்றிப்படர்கொழு கொம்பேஎங்கோவே
அம்பொற்றளிரடிகம்பிததொழுமல ரன்பேயென்பேறே
அங்கட்புவிமுதலண்டத்தளவுள வஞ்சேசெஞ்சேயே
வம்புப்பிறவியி டும்பைக்குதவும ருந்தேசெந்தேனே
மன்றற்குழல்மொழிமுன்றிற்பயில்சிறு கன்றேவென்றேவேல்
செம்பொற்கையிலணிசெந்திற்கதிபதி செங்கோசெங்கீரை
செஞ்சொற்பழதமி லஞ்சிக்குருபர செங்கோசெங்கீரை. (௧௦)

செங்கீரைப்பருவம் முற்றும்.

# தாலப்பருவம்.



கடவுட்புலம்போய்க்கற்பகத்தின் காவோடிகலிப்புயரியபைங்
கமஞ்சூற்கமுகின்மிடறுவிண்ட கற்றைத்துணர்ப்பூவிரிக்கவரி
துடைவைப்புதுப்பூந்தொடையழகார் சுரமாமகளிர்பணிமாறுந
துணைப்பூங்கவரியுடன்பயின்றுசுடர் வெண்டரளமிடைகலந்த[த்து
முடவுப்பிறைநான்கெனமுளைத்த முனைவாண்மருப்புப்பொருப்புகை
முற்றும்பவனிக்குலிசபதி மொய்ம்பிற்சிறுகால்முகந்தெரியும்
அடவிப்பொதும்பர்செறியிலஞ்சிக் கரசேதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௧)

பொலங்கற்பகத்தினிணைபூத்த பொன்னந்துணர்ப்பூந்தாதுபடி
புனிதச்சுரும்பர்முகடுரிஞ்சும் புயல்காற்றரும்பின்மிசைபூத்த
கலங்கற்பசுந்தேனுவட்டெறிபூங் கனியின்சிறப்புக்கடைக்கணித்துக்
கனகாடவியென்றுவந்தடுக்கக் கடுக்கைப்புறம்வந்தோன்றுதலும்
விலங்கற்கரிதாய்ப்புகுந்தயலே வேரிப்புதுச்சண்பகச்சோலை
விழையாமருதப்பேட்டளியை வேட்டங்கணையுமிலஞ்சிவெற்றி
யலங்கற்குடுமியிலங்கிலைவே லரசேதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௨)

கள்ளத்தடங்கட்கடைசியாகைக கருஙகாபபிடறுககளைபறுதத
கற்றைக்கழுநீர்ப்பொதிசரிந்தக கமுகின்பழுக்காய்க்குலைசிதறி
முள்ளுபபொதிந்தகுடக்கனியை முடத்தேம்பலவமுகந்துடைத்து
மொய்ப்பூநதேமாங்கனியுகுத்து முழுக்காய்க்கதலிக்குலைசாடி
வெள்ளைபபெடையோ திமங்கிடந்த வேலிப்புறத்திற்பழுத்தவெனு
பிச்சங்கனிபந்தடித்துவெடி வாளைபபகடுவிளையாடும்
அள்ளற்பழனத்தமிழிலஞ்சிக் கரசேதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௩)

என்பார்பதித்தாயேக்கறநின் றிருக்கார்த்திகைத்தாயொருங்கேவந்
தேநதுமுலைபபாலமுதூட்டி யிலைப்பாற்கிடந்தமலைப்பின்றி
முன்பாலிலையிலொருகொழுந்து முகில்போற்கிடந்துதணிவளர்ந்த
முளரித்தடங்கண்மாதுலன்போல்முழங்குஞ்செழுநீர்ச்சரவணத்துப்
பொன்போற்றுயின்றாய்குயின்றமணிப் பூந்தொட்டிலில்யான்தாலாட்டிப்
பொன்னங்குறங்குதடவுஞ்சண் பொருந்தாய்போலுமிருந்தாயால்
அன்பாய்த்தென்பார்புகழிலஞ்சிக் கதிபாதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௪)

முடக்குங்கருங்கைச்செடிந்தாடி முடைவாயிடையர்கடகாலின் [பி
முன்னூன்றியகோன்மிசைத்துயிலமுட்டுஞ்சுவைப்பான்முலைச்சுர
மடக்குந்தாகினைசைக்கயல்போய் வயற்பூஞ்சாலிக்கதிர்மேய்ந்து
மடற்பூவிரியாப்பசுங்கமுகை வண்ணக்கருமபெண்டெண்ணியுண்டு
குடக்கம்பிடறிக்கவைக்குளம்புக் குறுங்கால்பெயர்த்துநறுங்காஞ்சிக
குளிர்நீளாற்றினிளமணிற்றுக குமுக்கன்றாட்டிக்குழலொலிகேட்
டடங்குந்தமரோடமரிலஞ்சிக கரசேதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௫)

விடற்கரியபாபலின்மேல் வெறுப்பாய்முளைக்கும்விழிக்கணையே [யா
வேற்பூங்கணையாய்க்கொடிப்புருவ விலமேலகொல்லுங்கொடுஞ்சிலை
யூடற்பெரும்பாசறைப்பூச லுடற்றுங்கடற்றெள்ளமுதனைய
யுருக்குந்தேசமுகவெளியகத்து மூறாங்கருங்கோகிலக்காளஞ்
சூடற்கரியதிறல்விருது சூட்டுநடஞ்சோலையின்புறத்தும [வாங்
தொடங்குதம்பி நண்மாமருண்மாலைமேதோன் றமுன்னநதெருக்கொறு
தாடற்சிலைவேள்பயிலிலஞ்சிக் கரசேதாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையாதாலோதாலேலோ. (௬)

இருவிக்குடுமித்திரிகூடத் திணர்பூஞ்சாரற்புறத்துந்தென்
னிலஞ்சித்திருக்கோ யிலினகத்து மிருந்தபடியேதிருநதொளியாய்
மருவியபிரியாவள்ளியுடன் வடிவேல்செங்கைவலனேந்தி
மயிலின்புறத்துக்கயிலாய மலைபோ லுயர்ந்தமலையகத்துக்
குருவிற்சிறந்தகும்பமுனி கும்பிட்டிறைஞ்சநின்றநிலை
கூட்டியபணியுந்தண்பொருநைக் குமராபாவநாசமென்னும்
அருவிக்குடுமித்தடாகபுலத் தமர்ந்தாய்தாலோதாலேலோ
ஆறுமுகத்தெம்பெருமானே யையா தாலோ தாலேலோ.

இதமுறுமைம்பத்தொருவன்னங்களி லக்குமணிக்கோவை
யெழுதருமுதுமறைநான்குவடத்துமி சைத்தபெரும்ப்ரணவப்
புதுமாணிக்கத்தொட்டிலின்மானத பூசைத்தனியடியா [ரய்
பொய்யாமெய்புணர்வணையாமடையின்மிசைபொன்போல்வளர்கின்
மதுமலர்பூத்தபொலங்கொம்பனையார் வகைவகைதாலாட்டு
மட்டார்மலர்ப்பூந்தொட்டிலினங்கள் மழைக்கண்ணெடுங்காவிந்
தகைமலரணையினுமொருதுயில்புரிவாய் தாலோ தாலேலோ
சம்பத்துதவுமி லஞ்சிக்குருபர தாலோ தாலேலோ. (௮)

சிங்கமுழங்குந்தடவரைமுடியிற் செழுமணிகெழுமுல்லைச
செறிதயிர்கடையுமி டைச்சியர்செங்கைச் செந்தாமரைமலரிற்
பொங்கமுழங்கும ணித்தேர்வீதி புனைகொடிமணிமாடப்
பொன்னகர்மருதவ ரைப்புநிறைந்தபு றம்பணையின்பாலில்
வங்கமுழங்குகருங்கடனெய்தல்ம ருங்கினெருங்கேவென்
மதியமுமமுதத்திவலையுமான மணித்திரள்வீசுவதூர்
சங்கமுழங்குந்தமிழ்நாடுடையாய் தாலோதாலேலோ
சம்பத்துதவுமி லஞ்சிக்குருபர தாலோதாலேலோ. (௯)

வங்கக்கடலுந டுங்கப்பொருதெழு மாசூர்மாசூர்மா
மங்கப்பொருதனைபைங்கற்பகநிழல் வானோரேனோரு
மங்கட்புவனியுமவெங்கட்கொடியவ ராலேவாடாமே
யன்றியபெயரியகுன்றைப்பொருமதி வீராபோரூரா
எங்கட்குடையவர்திங்கட்சடையினர் பாலாநூலாய்வோர்
என்றபபழமறையனறைகத்துளதமி ழேழேழ்பாவாணர்

சங்கப்புலமைத ருஞ்சொற்புரவல தாலோ தாலேலோ
சம்பந்துதவுமி லஞ்சிக் குருபர தாலோ தாலேலோ. (௧0)

இந்திரன் பாவைபெறுமிளையவள்பாகா வேகாவேகாரா
இங்கிதம்பேசுகுறமகள்மணவாளா வேளூர்வேளாளா
உந்தியங்கோகனகமுகில்மருகோனே கோனேவேலோனே
ஒன்றிரண்டெனவுரைபகருமென்னுவா யோவாமீகாமா
மந்தரம்போல்வளர்ப னிருபுயபாரா மாலாகேயூரா
வண்டுகொண்டா நிகளைமருவுபிராணூர் வானோர்போரேறே
சந்தனந்தோயுமுலையுமையவள்பாலா தாலோ தாலேலோ
தண்டையுங்காலுமழகியபெருமாள் தாலோ தாலேலோ. (௧௧)

தாலப்பருவம் முற்றும்.

# சப்பாணிப்பருவம்.



வல்லேறுபூண்முலைக் குழல்வாய்மொழிக்கவுரி மடிமேவெறனப்பய ந்த, வண்டுபடுகவுள்மதக்கரடக்கடாயானை வட்டமிட்டுக்கொட்டநீ; யெல்லேறுசுடர்மணிக்கடகபன்னிருகரமி சைந்துசப்பாணிகொட்டி, யிவ்வாறுகொட்டுதுமெ னப்பவளவாய்மலர்ந் தின்னருள்பழுத்துமது ரச்;சொல்லேறுகடவுட்ப ழம்பாடல்முறையிடச் சுடிகையரவரசுநெளி யத்,தொந்தமிடுசூலாயு தக்காளிவெட்குறச் சுத்ததாண்டவகவிற்றிக்; கொலலேறுயர்த்தவன்றமருகங்கொட்டநீ கொட்டியருள்சப்பாணியே கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணி யே. (௧)

கடசலதிகொட்டுகைத்தந்தாவளத்துரி கருங்காளமேகமெய்ப்பக், காய்சினப்புலியின்தள்வெண்டாரகாபடல மொப்பக்கவின்கொழித்து ப்;படகிலவுகொட்டும்வெண்ணிற்றொளியுமெய்யுமதி பாறுமண்டலநிக ர்ப்பப்,பவளச்சடைக்காடுசெக்கர்வானிசையமழை பைந்தேன்கடுக்கை தூற்ற;விடவளறுகொட்டும்வெங்காகோதரப்பணிகள் மின்னொளிகவ ற்றியீச, விண்ணினிற்றவிண்ணோருவிண்ணவர்வியந்தேத்த விண்ணோற்றிலஞ்

ணல்நந்தி;குடமுழவுகொட்டநடமிட்டவன்றிருமதலை கொட்டியருள் சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (உ)

தடம்வைத்தடர்ந்தேறுகரையடிச்சிறுநடைத் தந்தாவளப்பிடிக ளுந், தடவுக்குழைச்செவிகழற்கால்முகந்தெரி தடக்கைக்கடாயானை யுஞ்; சுடர்வைத்தகொன்பிறைநுழைந்தேறுகொண்டலிற் றுளைபடா முனைமருப்புக், துடியடிக்கன்றுநின்றுநிந்தடாகத் துறைப்புனல்பருகு துவெள்ளிப;புடம்வைத்துவார்த்தனையபொங்குமாகடலருவி பொன் னூழுத்துங்கொழிக்கும்,பூலோககயிலாயகிரியென்றுயர்ந்துமைப் புயல் முகடுரிஞ்சுபொன்னனங்;குடுமித்திரிகூடத்தடஞ்சாரல்வளநாட கொட்டி யருள்சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட் டியருள்சப்பாணியே. (ந)

மறந்தலைமயங்கரவிலங்கிலைவலங்கல்வேல் வாங்குபுதிரித்துமருவா ர்,மடியத்துறந்தடியர்பொன்னுலகுவாழ்வித்த வரதாபயங்களென்று; சிறந்தமலையாசலச்செந்தமிழுமருமறைத் தெய்வப்பழம்பாடலுஞ் சென்றுமுகந்துபன்னூருந்தவங்கள்புரி செல்வர்வந்தேத்துவதுபோல் நறுந்தளிர்ச்செந்தாமரைக்காடுதைவந்துநறைவண்டுமுரலுவதுபோல், நடைபயில்பசும்புரவிபுடைபயில்விசும்பிரவி நான்மூன்றுமுறையிடுதல்போற், குறுந்தொடிபுலம்புகைசிவந்தொளிததும்பநீ கொட்டியருள்சப்பாணி யே, கொழிதமிழிலஞ்சிவருகுமரகுருபரமுருக கொட்டியருள்சப்பா ணியே. (ச)

வித்துமுளைவைத்துவெண்பார்கோலியொருமித்து வெள்ளிகரு ருத்துவிட்டு,வேரூன்றிவிற்கூனிமிர்ந்தெழுந்தள்ளிலை விரிததுக்கருக்கு வைத்துப்;பைத்தரைதிரண்டுபொதியாய்க்கமஞ்சூல்கொண்டுபச்சைப பசும்பாம்புபோற், பருவக்கருக்கொண்டுபச்சென்றிளங்கதிர் பயந்து பரிபோற்கவிழ்ந்து; முத்துவிளைவித்துருமமொத்துவாய்த்திரங்குலை முதிர்ந்துபொன்போல்விளைந்து, மொய்வரம்பறியாதுதெற்றவாடிக்க மூனி முற்றுமுடிவைத்தழைத்துக்; கொத்துமலிசெந்நெல்செறிதென் னூரிநன்றுடகொட்டியருள்சப்பாணியே,கொழிதமிழிலஞ்சிவருகுமர குருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (ரு)

மூப்பாண்டகூடலினமுதற்பாண்டியன்புதல்வி மும்முலைக்கன்னி பொன்னின்,முடிசூடியடிமரபின்முறைநெறித்திசைவென்றிமுன்னிப்

படர்ந்தனொன்று; மாட்பாண்டவாதியர்த மரபாண்டகொண்டல்முதல் மற்றுள்ளகடவுளரெலாம், வானோங்குமீனக்கொடிக்குப்புரஞ்சாய்ப்ப வலனேந்துமாலைசூட்டுக; தேப்பாண்டரங்கற்குமுடிசூட்டிஎன்னம் மை திருவயிறுவாய்த்தளித்த, திரலோங்குமுக்கிரப்பெருவழுதியா கியத் திருமரபில்வந்துதித்த; கோப்பாண்டியற்குமொருகுலதெய்வ மானவன் கொட்டியருள்சப்பாணியே, கொழிதமிழிலஞ்சிவருகுமர குருபரமுருக கொட்டியருள்சப்பாணியே. (சு)

வீண்பொறைகிடந்தவென்மனப்பாண்குருக்கத்தை மெய்ப்பத மமைத்தமைபடா, வேதநூற்பகட்டினையுயர்த்தறநுகஞ்சேர்த்து வெவ்வினைக்கோரைபோக்கித்; தூண்பொறைகிடந்திட்டசஞ்சிதக் குத்தியைத் துத்திபபரித்துழுதுநிர்த், தூளிபடலஞ்செய்யுமவுத்திரி கன்புரளுசூழ்ந்தறுதவவேலிகோலித்; காண்பொறைமெல்வித்திப்பிரா ரத்துவப்பெருங் களைபறித்தாகாமியக், கருநோய்வராதருட்புனல்வா ர்த்துஞானக்கருமபுவிளைவித்துநிமிரா; கோண்பொறைநிமிர்த்தவெ ண்பிறைமுடிக்குருமதலைகொட்டியருள்சப்பாணியே, கொழிதமிழில ஞ்சிவருகுமரகுருபரமுருககொட்டியருள்சப்பாணியே. (எ)

மன்றுதொறுநடலுவந்தவர்கயிலையு மணிமாடக்கந்த
மாதனபூகரமும்பொன்மயில்கள் மலர்க்காவிற்கார்கள்
றுன்றுதொறுநடலுவந்தபரங்கிரி மலையுந்தொலையாத
சூரலைவாய்விடுசீரலைவாயுந் தொழுதிருவேரகமும்
நன்றுதொறுநடலும்வந்தருள்செல்வி நயக்குந்திருவாவி
னன்குடியும்பழமுதிர்சோலைப்பழ நாகமுமாகநெடுங்
குன்றுதொறுநடலும்வந்தருள்சேவக கொட்டுகசப்பாணி
குறுமுனிபரவுமி லஞ்சிக்குருபர கொட்டுகசப்பாணி (அ)

உரவுகிடந்தநெடும்புனலாடையு வந்துகிடந்துடையா
ளுபயபயோதரமீதுகிடந்தபொன் னுத்தரிகம்போலப்
பரவுகிடந்ததடங்கிரியருவிப் பாங்கர்கிடந்ததினைப்
பரணிடந்துபரித்தபசுந்தளை கட்டியபட்டுடைநெட்
டரவுகிடந்தவகன்பேரல்கு லணங்குகனங்குழைபோ
லாசைகிடந்தகருங்கட்குவளைபி னருகேமுருகவிழ்பூங்

குரவுகிடந்ததடம்புயபூதர கொட்டுகசப்பாணி
குறுமுனிபரவுமி லஞ்சிக்குருபர கொட்டுகசப்பாணி. (கூ)

அழகுகுறவர்தம்மகளிர்திருநுத லப்பியகத்தூரி
யணியுமுலைகளி லிழுதுபுழுகுடன் மணக்குதிருப்பாணி
யொழுகுநவமணியொளிவிடுகடகமு முத்தரிகத்தோண்மே
லுதயகிரிகளி லுலவியபரிதிக ளொத்தகுழைக்காதும
மழலைவரியளிமுரலமுகையவிழ் கடப்பமலர்த்தாரு
மரகதகலவி ரூபகுலதுரக வட்டமுமுட்டாத
குழைவுமழகியசுழல்மொழி தலமணி கொட்டுகசப்பாணி
குமரகுருபரசரவணபவகுக கொட்டுகசப்பாணி. (௰)

கப்பாணிப்பருவம் முற்றும்.

# முத்தப்பருவம்.



நெகிழாவரிவண்டினமுரலா நிரலாவிருந்துவிருந்தருந்தும்
நெய்தற்கருங்கானலந்துறைவெண் ணிலவுகருடவால்வளைமுத்துந்
திகழார்கலியின்கொழுமபவளச் செழுங்காடடர்ந்துபடர்ந்தேறித்
தெற்றும்பணைமாமருதவயற் செங்கட்கரும்பிற்செறிமுத்தும்
இகழாப்புரவத்திழிகான்யாற் றிறங்குமிபகோட்டிமிழ்முத்து
மிலஞ்சிக்குறிஞ்சிக்கிளைமுத்து மேநந்தேம்நின்பாலிரந்தேமால்
முகிழாமலர்ப்பூங்கடம்பாநீ முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (க)

கடவுட்பொருநைக்கடற்றுறையுங் கன்னித்துறையும்பொன்னிநதிக்
கடலந்துறையும்பொங்குபுனற் கங்கைத்துறையுந்தங்குகழி
கடவுங்குடவால்வளைமுத்தஞ் சலாகைப்பருவத்தடைபட்டாஞ்
சலாபத்திகளாஞ்சமுதாயத் தரவாம்போதிநணவாமற்
குடமுட்களியின்சுளைபிதிர்ந்து கொழுந்தேனொழுகிசெழுந்தேமாங்
குவவுக்கனியைசசுழித்தரம்பைக்குலத்தைப்பழித்துமணங்கொழிக்கு

முடவுப்பலவின்முளைத்தவன்சேய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே.

சத்தமிருந்தமுதுமறையோன் றன்னங்கயிலைத்தடஞ்சாரற்
றடங்கோட்டிடபத்தனைத்தாழ்ந்து தனக்கென்றன்னமிரந்திட்டா
அத்தமிருந்தசுடராழிப் பெருமானன்றுமாவலிபா [ன்
லாழிப்புவனமிரந்திட்டா னருமாதவத்துக்கன்னியர்தஞ்
சித்தமிரந்தானெம்பெருமான் சிறியேமிரத்தல்பிழையாமே
தெய்வத்தமிழ்தேர்தென்னிலஞ்சிசைவக்கொழுந்தேதீங்கனிவாய்
முத்தமிரந்தேநின்பாலாய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௩)

தென்னரிலஞ்சிப்பெருமானின் றிருத்தாமரைக்கைக்கொடை
க்குடைந்து, செல்லுஞ்செல்லுந்திருத்தாதைத் திருமாமறுகுக்கு
டைந்தசங்கு; மன்னர்மறைகள்முறையிடுநின் மலர்த்தாட்குடைந்த
கமலமுநின், மதுரகுதலைக்குஞ்சிறுகுதலை மழலைக்குடைந்தவான்கரு
ம்பு; மின்னிற்குடை நுண்ணிடைக்குறப்பெண் வெருவப்புகுந்துன்
வேற்குடைந்த,வேழப்பொருப்புந்தருமுத்தம் விழைந்தாற்கிடைக்கு
ம்வேண்டகிலேம்; முன்னர்க்குருமாமுனிபணிசேய் முத்தந்தருகமு
த்தமே, முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே. (௪)

செக்கச்சிவந்தசெழுங்கமலச் சிமிழ்வாய்திறந்ததிருமுத்துஞ்
செந்நெற்படப்பைசெறியிலஞ்சிக் கன்னற்றிரளிற்றிரள்முத்து
மெக்கற்படுகரிழிகான்யாற் றிரங்குமிபக்கோட்டிமிழ்முத்து
மெங்கோனிருக்குந்திரிகூடத் தேலாப்புறத்திற்கிளைமுத்து
மைக்குட்குளிக்கும்படிகுளிக்கு மலைவாணர்சலாபத்துமுத்தும்
வந்தாற்குறப்பெண்ணகையுறைக்கு வைத்துமதுரத்துளிதுளும்ப
முக்கட்கனிக்குமினிக்குநின்வாய் முத்தந்தருகமுத்தமே
முருகாகுமராமுத்தையா முத்தந்தருகமுத்தமே (௫)

வேறு.

கழிபிறப்புந்தொலையநிற்குங்கவிஞர்சித்தம்பெருகவே
கயிலைவெற்பும்பொதிகைவெற்புங்கடவுள்வெற்புந்தகையவே

தழுவுபொற்றங்குமமுலைக்கண்டணிசுவைக்கும்பவளவாய்
    த்தனிமுகக்குஞ்செவிலிகைக்குந்தளிரடிக்குந்தகையவே
பொழிமதத்தன்புகர்முகத்தன்புடையில்நிர்த்தம்புரியவே
    புனல்முடிக்குங்கடவுளப்பன்புதுநகைக்குந்தருகவே
குழல்மொழிப்பெண்கயிலிருக்குங்குழவிமுத்தந்தருகவே
    குறுமுனிக்கன்றருள்சுரக்குங்குமரன்முத்தந்தருகவே. (௬)

கழைசுழிக்குங்கயமுகத்தெங்கடவுளைக்கண்டடவிசூழ்
    கடிபுனத்தன்றொருகுறப்பெண்கரமெரித்தஞ்சினவளாய்த்
தழைபுடுத்தங்கயல்வரச்சந்தனமணக்குந்தன்கடாந்
    தழுவிமுத்தந்தருகெனத்தந்தூருகிநிற்குந்தலைவனீ
பொழிமதச்செண்பகவனத்தெம்புனிதன்முத்தும்பொழுதெலாம்
    புயவரைக்கண்பதியவைக்கும்பூமலர்ச்செஞ்சரணனீ
கொழிதமிழ்த்தென்புலிபுரக்குங்குரிசில்முத்தந்தருகவே
    குறுமுனிக்கன்றருள்சுரக்குங்குமரன்முத்தந்தருகவே. (௭)

வேறு.

கன்னலங்காடுதன்மொய்த்தவெண்முத்தங் கருப்பாலையுக்கழைபடுங், கழனித்தடஞ்சாலிவெண் முத்தெருந்தின் கவைக்கால்மிதித்துடைபடுந்; துன்னலஞ்சுடர்முத்திபககோட்டினுண்டறு துரக்குழுமடங்கலேறு,சுத்திக்குருத்தொடுபிடுங்கச்சிதர்படுந் துளைகொணுண்முளரிமுத்தம்; பன்னலங்காட்டினும்பாய்ந்தளறுபடுநெடும் பரவைக்கழிக்கானல்வாய்ப், பணிலமுத்தெல்லாம்புலால்படுநதெய்வப் பதிக்கெலாம் பழையபதியாந்; தென்னிலஞ்சிப்பதித்தேவசேனைபதி திருப்பவளமுத்தமருளே, சேனைக்குமாடத்திரிகூடச்சிலம்பன் திருப்பவளமுத்தமருளே. (௮)

வானைக்குமுப்புடைப்பைங்காய்க்குலைத்தெங்கின் மடல்வீழ்ந்து நெற்றுவீழ்ந்து, வாளரவுடன்றிங்கள்முறிபட்டுவீழ்ந்ததென மருதமுருடிடறிமதுரக்; கானைக்குவெள்ளிமுறிகல்லெலன்றொலித்தலுங் கருவிரல்வெள் ளுகிர்வளைக்காற், காய்த்திட்டசெமபிட்டநெடியவற் கூன்புறக் களிபுடற்குளிகட்குறும்; பேனைக்குசிறுநரைப்புன்றலைக் கடுவன்பிறைவீழ்ந்ததென் றுபதறிப, பேதுற்றிமைத்திமைத்தலமருதல்கண்ணுற்றுப் பிறைவநதிணங்குபுதழீ; தேனைக்கு மணமுயரிலஞ்

அமளிக்கலவிக்கொடும்போரி லவிழ்ந்தகுழலுமிடைநெரிந்த, வ ங்கச்சரியுஞ்செங்குமுத வதரச்சிவப்புங்கருங்குவளைச்; சமரக்கடைக்கண்சிவப்புமிடை சரிந்தவுடையுந்தளர்நடையுந், தழுவுங்கொழுநர் தடம்புயபூ தரலேபனசந்தனச்சாந்தந்; திமிரத்திமிரத்திமிர்ந்தசெப்பிற் சின்னப்பிறைபோற்கிடந்தநக, சின்னங்களுமாய்த்துயிலெழுந் தார் செப்பாமொழியைச்சேடியர்க்குக்; குமரிக்கிளிகள்புகழிலஞ்சிக் குமரப்பெருமான்வருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடையகோமான்வருகவருகவே. (௩)

அடிமைவழிக்கோரராளெனக்கொண் டருட்பால்புகட்டிமருட்பிறவி, யறுக்கும்படிவந்தெழுத்தறிவித் தஞ்சாறேழெட்டெனும் பருவத்; துடைமைப்படுத்தியஞ்செழுத்து முபதேசித்தெனுயிர்க்குயிரா,யுணர்வுக்குணர்வாய்ப்பயின்றறிவு முருவிற்குருவாயுடன்கலந்து; மடமைதவிர்த்துவழிபாடு திருத்திமழலைத்திரந்திருத்தி, மதுரக்கவிநாவரத்திருத்தி வலியப்பிடிசோறமுதருத்திக்; குடுமிதிருத்தியெனை வளர்த்த குருவேவருகவருகவே, குடுமிசுடர்வேற்படையுடைய கோமான்வருகவருகவே. (௪)

புறஞ்சுற்றியதெண்டிரையாழிப் புவனப்பரப்பெலாந்திரிந்து, பொருடேர்ந்தருடேர்ந்தவர்க்குதவார் புதையலிருக்குமிடந்தேடி ; மறஞ்சுற்றியவேற்குறுநிலமா மன்னர்புகுந்துதன்னுவபொன்,வாரிப் பெருங்காவடிசேர்த்து வழுங்காநெறிபோம்வழக்கேபோல் ; அறஞ்சற் றறியார்குலவேட ரருங்கோட்டடுக்கற்புரத்துவைத்த, வாய்பூஞ்சிறகரீஇயகற்றி யளிதேன்கவர்ந்துகொடுபோதுங்; குறிஞ்சிக்கிழவாதமிழிலஞ்சிக் குமராவருகவருகவே, குடுமிச்சுடர்வேற்படையுடைய கோமான்வருகவருகவே. (௫)

அப்பன்வருகவெனையாண்ட வையன்வருகவமருலகுக்
கதிபன்வருககயிலாயத் தரசகுமரன்வருகவெங்கள்
வைப்பன்வருககுழல்மொழித்தாய் மைந்தன்வருககலவமயில்
மகிழ்வோடேறித்தேவர்தொழ வருவான்வருகவறநெறிக்குத்
துப்பன்வருகமெஞ்ஞானத் துறைவன்வருகபுலம்புகுதுந்
தொடியன்வருகமணிச்சுடிகைத் தோளான்வருகதுலங்குமனக்
கொப்பன்வருகமாணிக்கக் குழையன்வருகவருகவே
குடுமிச்சுடர்வேற்படையுடைய கோமான்வருகவருகவே. (௬)

தேந்துழாரலங்கன்முடியிமைபவர்குழாந்தொழச் சிங்காசனத்திருக்குந், தேவேந்திரன்வரக்குமாரத்திகணவனைத் தேடித்திகைத்திருப்பக்; காந்தளஞ்சாரலிற்கடிபுனங்காக்குமான் கன்னிக்கோர்கண்ணிவைத்துக், களிறுதருபுணர்விற்புணர்ந்து பின்வருங்களநாடியுண்மயங்கி; யெந்திளங்கொங்கைமாரிடைவினவியுடைவினவியென்போக்கினுடன்போக், கிடையிடுகைவந்தரக்கொடுநிறுத்தெயினரேற்றபடியாற்றுவதுவைக்; கூந்தலம்பிடியுடன்புதுமணக்கோலமுங் கொண்டுவந்தவன்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநம்புதெணிலஞ்சிவரு குமரநாயகன்வருகவே. (எ)

ஒத்தசிவபத்தர்பரிசுத்தரிதயத்தினின் றுதயஞ்செய்பானுவருக, வுக்தேசலக்ஷணபரிக்ஷையினகப்படா வொளியிலொளியுருவன்வருக, வத்துவாவைத்தொடக்கறுநின்றசோதித் தரங்கதீர்த்தவன்வருகவந், தறிவுதொருகுறிதன்னதருளிலறிவித்தென்னை யாட்கொண்டகுரவன்வருக; பத்திவலைபிற்படும்பரமவோதிமம்வருக பழையவாதனையகற்றும், பரமபரமாநீதபரமுத்திநல்குவரபாரிசாதம்வருகமின்; கொத்தடியர் கூட்டத்திலென்னையுமிருத்திக் குறித்தபெருமான்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநம்புதெணிலஞ்சிவரு குமரநாயகன் வருகவே.

அனிர்வசனமாயபெருஞ்சலதியாடுமடி யேங்களுணையடையமாட்டேம், மடிகளுமனைத்துமுடையவனுமுடைமைப்பொருளுமாதலாலடியமேமும்; தனதுபொருளுடைமையிற்சீராமைதேறியொருதண்ணளிசுரக்கவருக, தற்காக்கவருககைதரவருகவற்றுத தண்கருணைவெள்ளம்வருக; வனசநிதிவருகவரபாரிசாதம்வருக வளர்சுரபிவருகசிந்தா, மணிவருகவெனதிருகண்மணிவருகவென்னையன் வருகவென்னப்பன்வருக; தனிசிலைப்புருவத்திருந்திழையருந்தவக் குழவியிளமதிவருகவே, கும்பமுனிதஞ்சமெனநம்புதெணிலஞ்சிவரு குமரநாயகன்வருகவே. (௯)

எருதவுச்சியிலிருக்கும்பசுந்தேனை யிருமுடவரேருகனிகிடந், தேக்கற்றமங்காந்துநின்னிலைபுமென்னிலைபு மின்னிலையெனக்கிடந்தேற்; காருதசிந்தாகுலப்புன்மைதனையுமே யாற்றியொருபடிதேற்றவித், தானந்தசலதிநீராட்டிப்பராவமுத மூட்டுக்கன்னாயவ

காட்டி; மாருதசிவானுபூதியருள்சிவானு பூதிகமுமாகமன்னு, ம
ன்னுபசுகரணமுஞ்சிவகரணமாக்கியரு மறையின்பெருமபொருளை
யுங்; கூறாதுகூறியென்மனப்பெருங்கோயிலிற் குடிகொண்டவன்வரு
கவே, கும்பமுனிதஞ்சமெனநம்புதெனி லஞ்சிவரு குமரநாயகன்
வருகவே, (௧௦)

செங்கையிலிலங்கியகுறுந்தொடிபுலம்பவொளிர் திகழும்வெயி
லிருள்பருகவே, செஞ்சரணபங்கயசிலம்பொலிமுழங்கடியர் சென்ன
சாகரமொழியவே; யங்கரைவடங்களொடுகொம்புமணியுங்குலவ
வருணமேகலையிசையவே, யங்கதபுயங்களில்வி ளங்குபணிரண்டிரவிய
னையவார்குழையசையவே; கங்குல்பகலின்றிமலர் கண்கள்பனிரண்டு
மெழுகருணைவாரிதிசெறியவே, கங்கைமகளுஞ்சரவிலமங்கையரசுந்தம
து கயல்கள்போல்விழி குளிரவே; கொங்குதமிழ்தென்கபிலைமுன்றி
னில்நடந்துவரு குழவிவாரணம்வருகவே, கும்பமுனிதஞ்சமெனநம
புதெனி லஞ்சிவரு குமரநாயகன்வருகவே. (௧௧

வாரானைப்பருவம் முற்றும்.

---

# அம்புலிப்பருவம்.



எண்ணிரண்டேந்துகலைவாய்ந்துமொருகார்த்திகை யிளம்பயோ
தரமுகர்ந்து, மெம்பிரான்சடிலகோடீரப்பெருங்கங்கை யாற்றிடைவ
ளர்ந்துமெங்கோன்; றிண்ணவம்பெருகுமொருகண்ணனைத்தந்துமிந்
தீவரச்சுனைவியந்துஞ், சிகரவரையிடறியும்பூச்சக்ரவாளச் சிலம்புசுற்
றித்திரிந்தும்; விண்ணவந்தருமாலைவேலைநின்றேங்கமர் வேட்கவிளை
தந்துமிமையோர், விகடதடமணிமகுடநிரைபழகுசரணை விந்தனை
நிகர்த்தியந்தோ; வண்மைலஞ்சேவற்பதாகைப்ரதாபனுட னம்புலீயா
யாடவாவே, யந்தண்மருதஞ்செறியிலஞ்சிவடிவேலனுட னம்புலீயா
டவாவே. (௧)

ஓராயிரங்கோடிதோட்டுகெட்டோடைமட் டுமிழ்புண்டரீகமெ
ன்றோ, வும்பர்கடையுந்திருப்பாற்கடற்றாழியி னுருட்டுதெள்ளமு
மென்றோ; காராழிவிடமுண்டகண்டன்சடாடவி கட்டுமலரிண்டை

யென்றோ, கற்பகாடவிமகளிர்கஸ்தூரிதீட்டுகைக் கண்ணாடியென்றெ
ண்ணியோ; தாரகணக்கயலினிரைதேர்தரப்புக்க சக்ரவாகப்புளென்
றோ,தன்னன்னைதந்தபாற்கிண்ணமென்றோகொண்டு தம்பிமின்கள்தம்
பின்கணென்; றாராயுமறைமுடிவிலாடுமிவனுடனா லம்புலீயாடவாவே
யந்தண்மருதஞ்செறியிலஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (உ)

தேனுகர்ந்துவக்கிடக்கிக்கிக்குமதுரவாய்த் தெய்வப்பிணைக்கள்
கும்பச், செம்பொற்படாமுலைததும்பத்ததும்பச் செழுந்துணர்ப்பாரி
சாதக்; காலுந்துபூந்தொடைகளின்பெறச்சூட்டிக் கலந்தணைத்தாங்கி
ருப்பார், காதற்ப்ரபாகம்வந்தலைமோதவெந்தநின் காட்சியொருகாட்சி
யன்றோ;மோனந்தரும்பெரியபரமானுபூதியின் முலைமுகைததும்பநா
ண, மொய்ம்பணத்தார் சூட்டுமுத்திப்பெருந்திரு மோகமுறுசககமான
ஆனந்தவெள்ளமெனுமாறுமுகநாதனுட னம்புலீயாடவாவே,யந்தண்
மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (௩)

வீரங்கிடந்தவாட்சூரபன்மன்றனதி மேவார்தமைக்குமைக்கு,மிக்
கானவேள்விகளைத்திணுந்தலைமைபெற் றுன்வித்தியாபாண்டித்ய
பாரங்கதபாபட்டமுள்ளவன்கடவுளர் பழஞ்சிறைவிடுத்திறைவனைப்
பட்டாரகபெரும்பட்டணங்கைக்கொளப் பட்டாபிடேகம்வைத்
தான்;வாரங்கிடந்தகுறவள்ளிநாயகிபிட்ட மட்டவிழ்குராந்தொடைக்
கு,மாதரசிசேர்த்தியமடற்பாரிசாதமாலைக்குமிடையேமதாணி;யாரங்
கிடந்தலவுபன்னிருபுயாசலனுடனம்புலீயாடவாவே,யந்தண்மருதஞ்
செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (௪)

நாடகப்புரவிப்பசுந்தேருருட்டுமிள ஞாயிறுதயம்புரிந்து, நாட்
கொண்டுபடரியகதிர்க்கெதிரெறித்தவயிரப்பொடிநகைப்பதேய்ப்பப்;
பாடகத்துறைமிடற்றுக்கருவிமாக்களிசை பயில்மகதியாழ்மொழியு
டன், பதினெண்பெரும்பண்ணுமேழிசைவடித்திசைப் பஃறுளைப்
பத்திசான்ற; மாடகமுறுக்கிமணிவார்த்திவவுதைவந்து வள்ளுகிர்வ
டிம்புவருடி, மகரயாழ்வாசிக்குமின்னிசையுடன்பழகி மழகதிரெறிக்
குமணிவாய்க்; தாடகக்குழைகிடந்தாடும்வடிகாதனுட னம்புலீயாட
வாவே, யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவா
[வே. (௫)

மேவுதுங்கமயூரமுண்டுநின் வீரவெம்பகைகளையலாம்
வேரிதங்குதிரிகூடமுண்டுமீனுடன்றனிதவழலாம்
பாவியென்றொருபேரொழிந்துசெய் பாதகங்களுமொழிபலாம்
பாணலங்கிளிவாவிதங்கிய பாய்தடம்புனல்படியலாம்
மூவிரண்டுசரோருகங்களின் மூரல்கண்டுளமகிழலாம்
மோனமென்றுபதேசமுன்செயு மூலமந்திரமறியலாம்
ஆவினன்குடிமேவுகந்தனொ டாட வம்புலிவருகவே
யாழிலஞ்சியில்மேவனொடின்றினி தாடவம்புலிவருகவே. (௬)

கோடகப்படவெழுங்கொய்யுளைப்புரவிக் கொடிஞ்சித்தடந்தே ரின்மேற், குலவிவலம்வருமொருபன் னிருபரிதிமண்டல கோடிக ளெழுந்ததேபோற்; பாடலைக்குங்கதிர்க்கோமேதகத்திரள் பதித்து வயிரந்துறுத்தி,பத்மராகக்கோடிகோடானகோடி நிரை படவழுத்திக் கொழுங்காள்; மாடெழுசுடர்க்கற்றைவயிடூரியத்தகடு வாரித்துவன் றிவிரவும், மரகதமமைத்துரகமணிகள்பதிதந்துபுய வரைமுகமொய் ப்பவலம்வர்; தாடகக்குழைகிடந்தாடுமவடிகாதனுட னம்புலீயாட வாவே, யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாட வாவே. (௭)

குறுமுயலகன்பிடித்தாட்டாது தீர்ப்பனுன் கொடியகயநோய் தணிப்பன், கோளராப்பகையுமுன்குரவனிலிடந்தநல் குரவுமிரவுந் தவிர்ப்பன்;செறிபுனற்கடலிற்றடந்தேர்மிசைத்தோன்று சேட்டினம் பருதிபோல, சிந்தந்தழைக்குமற்றனையுமொருதன்மையிற் றீராது செல்லவைப்பன்;புறவுமிப்படியுள்ளநன்மைகளெலாந்தரும் புன்மைக ளெலாந்தவிர்க்கும், பொன்னடித்தாமரையளிக்குநலமொன்றன்று போந்தவர்க்கேந்திழைநலார்; அறுவர்முலையுண்டபால்மணமறுவாய னுட னம்புலீயாடவாவே, அந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனு டனம்புலீயாடவாவே. (௮)

செம்புவழிபிட்டளையதீழுடைக்காழ்மந்தி சென்றொருக்கானும றியாச், சேண்கிளர்மரம்பயிலருங்கோட்டினிடைவைத்த செந்தே னிறால்கிழித்து; வம்புவழிசாரலிலிதைப்புனங்காக்குமட மகளிருந்த முதமுண்ண, வண்ணப்பசுந்தினையினன்னிலாக்கொழுங்கதிர் வானதி கொழித்து மருண்மாக்; கொப்புவழிகுத்திப்பதந்தந்திடித்துக்

கொழுந்தேக் கிலைப்படுத்திக், குழையளவும்வாங்கிக்குன்ழக்குந்தடச் சிலைக் குன்றவர்திருத்திவிடுசெட்;டம்புலழிதேனருவிபாயுமலை நாடனுட னம்புலீயாடவாவே,யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (௯)

பருவரைப்படர்சினைப்பாரிசாதப்பொதும் பரினின்றுலாவுகடவுள், பாகசாதனன்விழிகுறுந்துளியுரைத்துழி பாத்துநின்றிருவரறியா; வொருவரைப்பங்கிலுடையவள்பால்சுரந்தமுலை யுண்டசெங்கனி வாய்மலர்ந், தோடவிடுதூதுவருரைக்குந்திருக்குறிப் புணராதசூரபடலங்; கருவரையறுத்துத்திரும்பினேனெங்கோன் கடைக்கணிக்கும் குறிப்புக், கண்டுபணிகேளாதவர்க்கேதுதஞ்சமெதிர் காணாக் கடைக்கண்சிவந்; தருவரைதுளங்கின்றயில்வேலெறிந்தவனொ டம்புலீயாடவாவே,யந்தண்மருதஞ்செறியி லஞ்சிவடிவேலனுட னம்புலீயாடவாவே. (௧௦)

அம்புலிப்பருவ முற்றும்.

---

# சிற்றிற் பருவம்.

மருக்காற்புன்னைப்புதுநிழல்வெண் மணற்கால்மருங்குநிலவெரிப்ப, மாடஞ்சமைத்துக்குடிபுகுந்து மணிக்காலிப்பியடுப்பேற்றிக்; குருக்கால்செம்பொற்சிறுசுழகாற் கொழிக்குந்தளந்தேனுலைப்பெய்து, குடவால்வளைவெண்துழிசிபொங்கக் குழற்காலாம்பல்நெருப்பமைத்து; முருக்கால்வெல்லமுடியாவாய் முகிழ்த்துக்கவிழ்த்துக்கிடந்தூதி, முகம்வேர்த்தனம்நீகுறும்பிழைத்தால் முற்றுந்தரமோமுக்காலுந்; திருக்கால்பிடித்துக்கும்பிட்டேஞ்சிறியேஞ்சிற்றில்சிதையேலே தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௧)

அம்பொற்சிறுவீட்டணிகாண வன்னைவருவாள்பின்னையுமென், ஞவியனையதோழியருண் டவரும்வருவாரன்னையரைக்; கும்பிட்டிறைஞ்சித்தோழியரைக் கூடித்தழுவிக்கொண்டன்னை,கொணர்ந்தவரிசையத்தனையுங் கைக்கொண்டெமதுகுலமனையின்; சம்பத்தவர்க்குக் காட்டியுள்ளந் தழைக்கும்படிக்குவிருந்தளித்துத், தமியேங்களுமுண்டிளைப்பாறு தனையுஞ்சதியேல்சதியேலுன்; செம்பொற்றிருத்

தாள்சென்னிவைத்தேம் சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தேவேயில
ஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௨)

கங்கைத்திருத்தாய்திருத்தனமுங் கவுரிகுழல்வாய்மொழித்தா
ய்தன், கதிர்ப்பூண்முலையுங்கார்த்திகைத்தாய் கனகாசலப்பயோத
ரமுந்; தங்கக்குடம்போல்மணிக்குடம்போற் றாளக்குடம்போற்குடி
யாப்பால், ததும்பத்ததும்பப்பிதிரோடத் தாரோடசையுந்திருவா
ரைஞாண்; பொங்கச்செறித்தமணிநெகிழ்ந்து புலம்பப்புலம்பிற்சிறு
பண்டி, புலரப்புலரவிளையாடப் புகுந்தாய்பயந்தார்பொருப்பாரோ;
திங்கட்சடையான்கண்மணியே சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தே
வேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௩)

முந்திப்பிறந்தவிளங்களிற்று முகத்தெம்பெருமான்கணத்தினு
க்கு, முன்னேசிறந்தோருடன்போந்து முதிராமுகிண்மென்முலையெம்
பாற்; பந்திக்களிப்பால்விளையாடப்புகுந்துபுழுதியாட்டயராப், பொன்
னஞ்சிலம்பரடிமுடிப்பிற் புனைந்தெமழலைக்கிரங்கிவரந்; தந்திபொழு
தெம்மறுகடைந்தான் றளங்கொண்டிளங்கோமகனீயுந், தண்டைத்
திருத்தாள்வணங்குமெம்பாற் றயவுபுரியுந்தன்மைத்தாற்; சிந்தித்திடி
லன்றென்றறியேஞ் சிறியேஞ்சிற்றில்சிதையேலே, தேவேயிலஞ்
சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௪)

நச்சுமரந்தானேனும் நட்டமரங்காண் டொன்றுதொட்டு
நாங்களடிமைநீங்களெம்மை நடத்துந்தலைமைப்பெருமானேகாண்
வைச்சுமரந்தண்ணீர்வார்த்து வளர்ப்போர்குறைக்கநினைப்பாரோ
மற்றோர்குறைவந்துற்றாலு மாற்றிப்புரக்கவழக்கன்றோ
கச்சைமுனிந்துமுகங்கருத்துக் கனத்துச்சினத்துக்கடக்களிற்றின்
கதிர்வாண்மருப்பைமுனைமடக்கிக் கதிர்க்குங்கதிர்ப்பூண்முலைக்குற
செச்சைசெறிக்குந்திருமார்பா சிறியேஞ்சிற்றில்சிதையேலே [த்தி
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே (௫)

வேறு.

அறல்பாய்ந்திட்டமணலூடே யடியோங்கட்டுசிறுவீடே
குறைதீர்ந்திட்டபணியோடே குடிபூந்திட்டகுறைபாடோ
யிறைவாங்கச்சம்மதியாய்நீ யிடைபோந்தெற்றிவிடலாமோ
திறலோன்சித்ரசபைமேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே
செறிதேன்செச்சைமகிழ்மார்பா சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (௬)

வரப்பட்டவரெண்மரில்நால்வர் மாற்றங்குறியாக்கொத்தடியார்
மற்றோர்நால்வர்யாங்கள்புது மழலைத்திரத்தெம்வழியடியார்
தரப்பட்டவராதலினொருத்தர் தகையாரென்னும்வகைதேறித்
தடந்தேர்மறுகில்விளையாடச் சமைந்தேஞ்சமைத்தசிறுவீடு
பொரப்பட்டெழுந்தபோரவுணர் புழைமாளிகையுஞ்சூரபன்மா
பொன்மாளிகையுங்கொடிமதிலும் பொலந்தேர்மறுகும்வீரமயேந்
திரப்பட்டணமுமன்றுகண்டாய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. (எ)

எந்தையிடப்பாலிருந்துலகுக் கெம்பிராட்டியறம்புரக்கு
மிலங்குகயிலாயப்பொருப்பு மிளங்கோமகனீயினிதிருக்குங்
கந்தமாமாதனப்பொருப்புங் காண்கிற்புரமன்றதனால்நீ
காலாலமைத்தபணியெல்லாம் கைபாற்செய்யக்கடவோம்பாம்
முந்தியிமவான்றிருப்புதல்வி முதல்விவருனான்றிருபுடையும்
மொய்பூங்கவரிகாளாஞ்சி முதலாயேந்திப்புகுந்தவழி
சிந்திக்திரங்கவேண்டாவோ சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே.(அ)

வார்க்குன்றிரண்டுசுமந்தொசியு மருங்குற்கருங்கோவலர்மகளிர்
மணிநீராடுஞ்சுனைக்கயல்போய் மாமன்குறும்புவிளைத்தான்முன்
கூர்க்கும்பலிக்கன்றழன்றுசென்று குலமாதவத்துக்கன்னியர்பால்
குறும்புபுரிந்தான்றிருத்தாதைகுனிக்குங்கருப்புச்சிலையுடன்சென்
றூர்க்கும்திருமைத்துனனொருவ னுதைக்கொழுநர்தமைப்பிரிந்த
வணங்கனார்பாற்குறும்பிழைப்பா னல்லும்பகலுமடிகளியாஞ்
சேர்க்குஞ்சிறுவண்டலினிற்குறும்போ சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே.(கூ)

பையேந்தியபன்மணியல்குற் பட்டத்தரசிமாருடனீ
பரிக்குந்தவிசின்பக்கநின்று பணிசெய்கிற்பேம்பூங்கவரி
கையேந்திற்பேங்காளாஞ்சி கழற்காற்றிருப்பாதுகையெடுப்பேங்
காலங்கருதித்திருவந்திக் காப்புமெடுப்பேங்கருத்தாலும் [த்த
பொய்யேம்பிரிதோர்கடவுளரைப் பொருளென்றுணரேமருள்பழு
பொன்னங்கிரியேயுன்னிரண்டு பொற்றாட்பணிக்குங்குற்றேவல்

செய்யேங்களெனக்குறியேல்நீ சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயிலஞ்சிச்சினவேலோய் சிறியேஞ்சிற்றில்சிதையேலே. ()

அலம்போந்துபலபிறவி யாழியிற்றாழ்ந்துள்ளக்
கலம்பாழ்படாது கரைகாட்டுமீகாமா
யிலம்பாடுதீர்ந்தொழிய வெம்மனோரேத்துஞ்
சிலம்பாரடிபுனைந்தேஞ் சிற்றில்சிதையேலே. (கக)

சிற்றிற்பருவ முற்றும்.

## சிறுபறைப்பருவம்.



நங்கள்கொண்மூவிருமுகங்களினைலும்வித் தேந்திநக்கேந்துவே
லை, நளினக்குட்ங்கையிலடக்குமுரவோன்சங்க ஞசலவரைப்பின்வி
த்தி; யெங்கள்பண்ணிருகுரவருந்தனிவளர்த்திட வெழுத்துமுதலைந்
தியற்பே, ரியல்முதலமுக்கொடிபடர்ந்துதொண்ணூற்று றிசை
ப்பனுவல்பூத்துவரினர்; தங்களுக்குகவாதபதகர்பாற்காய்தந்து சார
ங்குறித்துநல்குந், தலைவரவர்பாற்கனிந்துணர்நதவர்க்கருமருந் தாங்
நாற்பொருள்பயக்குஞ்; செங்கழுகமுத்தமிழ்முழங்கும்வளநாடனே
சிறுபறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிப்பன்னிருகைமேக
மே சிறுபறைமுழககியருளே. (க)

குலைக்காந்தளங்கைக்குறுந்தொடிபுறங்கொளக் கொவ்வைமணி
வாய்துடிப்பக், கூர்வேற்கருங்கண்பொருந்திமைசிவப்புறக் கொடிநெ
டும்புருவமேறக்; தலைக்காதல்வந்தநாளொத்தனைவிருப்பமத் தனைவெ
றுப்புந்துலங்கிக், தண்ணிலாவமுதொழுகுசந்த்ரமண்டலமுகங் கபண
மண்டலநிகர்ப்ப; முலைக்காம்பில்முத்தங்கொடுத்தெரியுமடநலார் மு
தியபுலவிப்புலவியால், மொய்பாசறைக்கனத்தாடவரகபபட்ட வெத
திசைமுத்துமமையச்; சிலைக்காமரங்கள்மு ழக்குவயலூரனே சிறுப
றைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிப் பன்னிருகைமேகமே சிறு
பறைமுழக்கியருளே. (உ)

கந்தரமுழக்கமுங்கந்தரத்திடைபுக்க கண்டீர்வப்பெருமுழக்கு
ங், கதிரிளந்திங்களங்கண்ணியனைமுன்னிக் கடிந்தோரியற்றும்வேள்
வி; மந்தரமுழக்கமுஞ்சுனையாடுகன்னியர் வளங்கெழுமுழக்கங்களும்,
மடப்பிடிநடைச்சிறுகொடிச்சியர்குழாங்கூடி மன்றலங்குன்றமெதி
ர்கூஉஞ்; சுந்தரமுழக்கமும்வெறியாட்டுமுருகியர் துவைப்படுமுழக்கங்
களுந், தும்பிக்கைநீர்தூங்குருத்தியென்றருவித் தடாகந் துதைந்தகு
ளிருஞ்; சிந்துரமுழக்கமுந்தீராததமிழ்வெற்ப சிறுபறைமுழக்கியரு
ளே, தென்னிலஞ்சிப்பதிப் பன்னிருகைமேகமே சிறுபறைமுழக்கிய
ருளே. (௩)

சாவதுங்கிரியப்பிறப்பதுந்தொடராத தண்ணளிசுரந்தபெரு
மான், சயிலத்தடஞ்சாரல்புக்குநின்றேறக்கறுஞ் சமயத்தில்வந்து
தோன்றி; யேவதுங்கொண்டிட்டு லப்புவதுநனிதீர்மி னென்னுங்குறி
ப்புமொழிதந், தேந்துங் தருந்தொடியரற்றவெற்றிப்பறை யெரிதன்
னினிச்சூரனைக்;காவதப்பலகோடியோடினுமொருப்பன் கருங்கழற்க
ச்சுவீக்கிக்,கைவேலுமேந்தினன்காண்மின்களென்றுபலகடவுளர்பொ
ன்மலர்மழையொடுந்; தேவதுந்துபியொருபுறத்தினின்முழக்கநீ சிறு
பறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப்பதிப் பன்னிருகைமேகமே
சிறுபறைமுழக்கியருளே. (௪)

வெங்கண்சிவந்துடல்துலுக்கிவயிறெக்கிநெறி வெடிவால்முறுக்கி
நோக்கி, விண்ணுநமனுள்வெருக்கொளவெகுண்டண்ட கோளமும்
வெடிப்பவுதறிப்; பங்கம்படுக்குமதக்களிறலறிவீழ்ந்துழப் பப்பாய்ந்
தடித்துடைத்துப், பருமத்தகம்பிளந்தீர்ங்கோட்டுவெண்டரள பந்தி
சிந்தித்தெறிப்பப்; பொங்குங்கடற்குருதிபுழைபடுங்கைமடைப் புகர்
முகத்துறைமடுத்தோர்,பொற்றைபிற்சுற்றுங்குலிங்கங்குறிக்கொளப்
போந்துகடைவாய்தடவிவெண்; சிங்கந்தியங்கும்வரைசெல்வமுதலா
ளியே சிறுபறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப் பதிப்பன்னிருகை
மேகமே சிறுபறைமுழக்கியருளே. (௫)

முறுகிக்கதிர்க்குஞ்செருக்கற்பகட்டெருமை மோட்டுவெங்
கோட்டுநுதியால், முள்வேலிகோலிக்குறுங்கால்நுங்குவனை முருகு
சிதறப்பெயர்த்துக்; குறுகிக்கருப்பந்தருக்கைக்கரித்துக் குதட்டிக்

குதட்டிமேய்ந்து, கொழுமலர்த்தேனூறவிரவிவருபுன லுண்டு குறு நடைபயின்றுமறுகி; மறுகிற்புகுந்துபணைமருதநிழலிற்றாங்கி மாங் கனிபடைப்பவாங்கி, வாங்கிச்சூழிப்புறத்தூண்டுணைன்றெழுந்துதன் மழக்கன்றினுக்கிரங்கிச்; சிறுகக்கனைத்துவருதென்னூரிநன்றூட சிறு பறைமுழக்கியருளே, தென்னிலஞ்சிப் பதிபமன்னிருகைமேகமேசிறு பறைமுழக்கியருளே. (௬)

கைத்தலைவைத்தவிருப்புடனற்பர் கடைத்தலைதொறுமுழல்வோர்
கற்றசரக்கைவிலைச்செயுமற்ப கவித்துவமிழிவெனவே
யிற்றலைபத்மபதத்தைவழுத்துமெ னக்கருள்புரிகுவைநீ
யெய்த்தவருக்குமிளைத்தவருக்குமி ரக்கமதுடையவனீ
நத்தலைசித்ரந தித்தலைநிற்கும்ந டைப்பிடிதருமகனீ
நச்சரவத்தினடித்தருள்பச்சைமு கிற்கொருமருமகனீ
முத்தலையத்ரனளித்தருள்புத்திரன் முழக்குகசிறுபறையே
முக்குடுமிக்கிரியிற்குமரப்பன் முழக்குகசிறுபறையே. (௭)

அகத்தினில்நினைப்பவர்பிறப்பையுமிறப்பையு மகற்றிடுமருண் மலையே, அகத்தியன்வழுத்திட விலக்கணவிலக்கிய மமைத்தருள்குரு பரனே; பகைத்திரமொடுக்கியென்மனத்திடையருட்கதிர் பரப்பிய படரொளியே, படைப்பவன்முடித்தலைபுடைத்துலகினைக்தனி படைத் திடுமிறையவனே;- நிகழ்த்தியபடி கஞ்ச சுகத்தினிலெனத்தொழில் நிரப்பியநிருமலனே, நினைப்பொடுமறப்பவி கற்பவிகற்பமும் நிறுத் திடுநியதியுளாய்; முகிழ்த்தபுனகைச்சிறுகுறநகிபொடிருப்பவன் முழக்குகசிறுபறையே, முதற்பிறைநுதற்குழல்மொழிக்கொருமழக் குக முழக்குகசிறுபறையே. (௮)

இதயமணிமுத்தநிறைசததளமலர்த்தளிசி னிடையொருகிழத்தி பயில்வா, ளொறிகடல்முகட்டிலெழுகிரணகரரவிப்பிரபை யிற்காட்சிதற் பிரபையுமா; புதயகிரியத்தமனகிரிகளெனமிகவுயரு முபயபுயவெற் பின்மிசைபோ, லொளிர்பணிலசக்ரநிலவொருபுடையெறிப்பவெயி லொருபுடையெறிப்பமலர்மேல்; மதலையெழுமச்சூழியிலெழுபுவிப டைப்பவரு மரகதமணிக்குவடுபோல், வரியரவணைக்குள்விழிவளரு மொருபச்சைமுகில் மருமகனெருத்திகுறமான்; நிதலைமுலையிற்களப

மெழுகிடு திருக்கைகொடு சிறுபறைமுழக்கியருளே, திருக்குடுமிவெற்புடையகுழல்மொழி திருக்குமர சிறுபறைமுழக்கியருளே. (கூ)

இடைச்சியர்புனைதுகிலெடுத்தொருதருவினி லிருப்பவன் மருமகனே, யிருட்டுறைபுழுமிளமுலைக்குமரியுமென விலக்கினில்வருபவனே; படைப்பவர்தொகுதிகள்படைப்பவனெனுமிறை பழிச்சியபழையவனே, பகுத்திடுபலகலைதொகுத்திடுநிலைபெறு பரப்ரமவொளியுருவே; யுடைத்தெழுமதசலமுவட்டெழுகயமுக வொருத்தர்பின் வருபவனே, யுருத்திரபசுபதியெனத்தொழுமறையவ ருளத்திலுமுறைபவனே; முடித்தலையிமையவர்கெடித்தலமுரியவ முழக்குகசிறுபறையே, முடப்பலவடியினில்முளைத்தவன் மழவிடை முழக்குகசிறுமறையே. (க0)

சிறுபறைப்பருவ முற்றும்.

---

# சிறுதேர்ப்பருவம்

வெண்டேருருட்டிவருமவேதாளமிட்டவடி பாதாளமுட்டவிரவும, வீரசக்ராயுதப்பகழியும்புட்டிலும் வெரிந்கொண்டொருத்தலைப்ப;மொண்டேருருட்டிவைத்தாலனையநவரத்ன முடிமுகடளாவிநிற்குமுகண்டவேதண்டகோதண்டகணபணு முடியராச்சிறுநாணெரிந்; தொண்டேருருட்டிவருசேட்டிளம்பரிதிமதி யுபயசக்கரங்களாகவுபனிடபரிபூட்டிமுப்புரக்கனலிகூட் டுண்ணவான்றரணிவட்டத் திண்டேருருட்டுமொருசேவகன்றிருமகலை சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே.

மணநறற்கருங் குழற்செய்பவாய்வெண்ணகை வளர்க்குங்கலாபமயில்போல், மடப்பிடி நடைச்சியர்கொடிப்படையெடுப்பநெடு வான்மதிகுடைகவிப்ப; அணநிறற்கருங்காகளங்கரங்காநிற்ப வதிர்கடல்முழுமுரசமார்ப்ப, வலைபாலகையுநதுயில்கொளுங்கங்குற்கடாயானை யழிமதக்கலுழிகொப்பக; குன்றிற்பணைத்துக்குவவுத்தடந்தோண்மதன் கோலஞ்சமைந்தகன்னற், கோதண்டமேந்திக்குறும்பெறிசன்றக்கிளிக்கொய்யுளைபபுரவிபூட்டுந்; தென்றற்றடந்தேருருட்டும்ப ரங்கிரிய சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (உ)

தூங்குங்கமஞ்சூழ்கருங்கொண்டல்மஞ்சுகண் டுஞ்சுந்த டஞ்சார
விற், சுழல்கின்றபைங்கட்கரும்பொரைச்செக்கர்வாய்ச் சூருகிர்ப்
போர்வேங்கையுந்; தூங்குஞ்சிவப்புண்ணிவெள்ளிக்குழற்படி சாரங்
கபந்தாளமுந், தங்களிற்பகைமைதீர்ந்தொருதுறைப்புனலுண்டு சஞ்
சரிக்குந்திரிகூடப்; பூங்குங்குமக்குவட்டடவிக்கொடிச்சியர் புனத்தி
தழமைத்ததுருமப்,புதுவெள்ளமெறியச்செறித்தபால்முத்தனோர் புல
வியிற்கொழுனர்பதிபோற்; றேங்குமேதாறும்பரவுசித்ராநதிக்கிறைவ
சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேருருட்டியருளே. (௩)

இருவிரலினீளத்திலொருவிரலிழுத்தி லிட்டவொருகளநிரை
த்த, வீர்ம்பள்ளையாட்டின்மயிர்த்தொகைபல்லமென் றெண்ணுங்க
ணக்கின்வகைபோ; லொருபெருங்களிறுமோர்பெருந்தேரும்வெம்ப
டை யுழவரைவருங்கவின்மா, வொருநான்குமாகியபதாதிமுதன்மும்
மடித் தோங்குசேனைமுகமுமேல்; மருவிடுங்கும்பியுங்கண்டமும்வாகி
னியு மன்னுயிர்தனையுமப்பால், வாய்த்தசமுகமுமனிகமுங்கடந் தக்
ரோணி மாசேனைநெளியவிசையன் ; செருவலித்திண்டேருருட்டும்
பிரான்மருக சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்த
கந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௪)

எண்ணைக்குடங்களென் றிருமாந்தூலவட மேந்திளமுலைக்கடை
சிமா, ரெடுத்துக்குடத்தொடுமடுத்தநறவங்குறவை யிடுசெருக்கிற்க
விழ்த்த;பண்ணைச்செதும்பில்விளையாடுங்கருஞ்சிறார் பற்றும்வாற்செ
ங்கன்றுபோய்ப்,பாய்ந்திடுமுட்பலவடிக்குடக்கனிசிதறு படுபழச்சே
தகத்தின்; மொண்ணைக்கரும்பகடுரிஞ்சுகுலைவாழையின் முப்பழச்
சேரிழிந்து,மொய்யென் றபடுசேற்றில்வாய்த்தசெஞ்சாலிசொரி முத்
தைவாரிக்குவிக்க; திண்ணைக்குவெண்ணிலவெறிக்குமபி ராமா சி
றுதேருருட்டியருளே,செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறு
தேருருட்டியருளே. (௫)

இரைக்குஞ்சுரும்பறுக்குங்குமக்கோடிடறி யிபமெடுங்கோடுசா
டி, யில்லக்கொடிச்சியரினிதயப்புனத்திதணேற் றிப்பளிக்கரையிலிட்
டரைக்குஞ்செழுஞ்சாந்தொ டகில்முருடுருட்டிநெட் டரவுமிழுமணி
வரன்றி, யண்டரண்டங்களுமளக்குநெடுமூங்கில்முத் தரியிட்டரித்

துவிரவிக்; கரைமிருகமதகலவைதுன் றுசிவமதுங்கங்கை செண்பகக்காடுபொங்கு, கடல்கடந்தருவித்தடாகங்கடந்திரு கரைக்குறும்பெரியவோதி, திரைக்குந்திரைப்புனற்சித்ராநதிக்கிறைவ சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௬)

கம்பவளவாரணக்கடல்வந்திரங்கக் கறங்குந்திரைக்கானல்வாய்க் கரியசிறுமுட்கவிழ்மடக்கிலேமுடகசேத கைக்காவின்விழுதுபற்றி; வம்பவிழும்வெண்மடற்றலேமிசைபடர்ந்தோடி மணற்குன்றுதன்னைமூடி, மதுமலர்ப்புன்னைககருங்கோடுலாயதன் மருங்கோடொருங்கோடியே;தும்பவளமென்முலேக்கடைசியர்குழாம்பயில் கொழும்பணைக்கதலிநுதலிக், கொல்லேக்குருநதேறி முல்லேயொடுபின்னிக் குறிஞ்சிக்கவட்டினும்போய்ச்; செம்பவளவல்லிபடர்தென்குமரிவளநாட சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (எ)

மகவான்மனைக்கிறைவி மகராசிபெற்றமகள் மயில்போலிருக்கவயல்போய், மகடேவொருததிமிகுமுகடேளக்குபலே விளேகாவலுக்குவருவாள்; முகலாளிகத்தரளமுகின்மூரலுக்குருகி முனேவேலெடுத்துவருவாய்,முருகாமருத்துழவன்மருகாதிருத்தணியில் முதல்வாவொருத்திபுதல்வா; உகளாமுயற்பிறையை முடிமேன்முடிக்குமெமை யுடையான்வலச்செவியிலே, யுறைவானுரைப்பரியவொருதாரகப்பிரம வுபதேசம்வைததகுருவே; சிகராசலத்திலுயர்திரிகூடவெற்பனொரு சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (அ)

பணிகொண்டதாரைகன்மணித்தேருமர்ச்சுனன் பாழித்தடந்தேருமே, பருவமுஞ்செல்வநிலேயொருபெருஞ்சேடனேபருச்சுடிகைநெற்றிமுற்றுத; தணிகொண்டகல்லோலவரதமனோகரமே கலாபரமணிநெடுந்தே, ரன்றேநடக்குநிலநன்றுதைதக்கைசெய்வ தாழியொன்றுதவன்றே; கணிகொண்டவையமுங்காண்பதிற்கங்குலிற் காமன்கரங்குபொற்றேர், காற்றேரலாதில்லேமேற்றேருறைப்பதென் கவனவாம்புரவியின்மேற்; றிணிகொண்டசெல்வவுன்றேரலாதில்லே

யாற் சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௯)

மருள்வந்தபிறவிக்கடற்படிந்துள்ளாசை மகரம்புடைத்தடிப்ப, மாள்கின்றசிற்றுயிர்க்குற்றிடத்துதவிசெய வருமரக்கலமேமுகந்; தருள்வந்தமெய்யன்பரார்வந்தழைக்கின்ற வகநெக்குநெக்குருகினோ, ஆறுமுகனனவினுகெதிரிட்டுவட்டெரியு மானந்தமாப்பெருக்கே; பொருள்வந்தகடவுட்பழம்பாடலேந்துமொரு பொன்மாளிகைக்குள் வைத்த, புனைமணிவிளக்கமேஅனுபூதிதந்துபர போகம்விளைகின்ற விளைவே; தெருள்வந்தமணிமன்றமுடையவன்செல்வமே சிறுதேருருட்டியருளே, செந்தமிழி லஞ்சிநகர் வந்தகந் தசுவாமி சிறுதேருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப்பருவ முற்றும்.

# இலஞ்சித்திருப்புகழ்



சுரும்பணிகின்றநெடுங்குழல்கண்டு தொடர்ந்தெதிர்கின்ற விழி வேலாற், முன்றுசுழன்றுதுவண்டு துவண்டு சுருண்டுசுருண்டு மடவார்தோள்; விரும்பிவரம்புகடந்துநடந்து மெலிந்துதளர்ந்து நலியாதே, விளங்குகடம்புபுனைந்தணிதண்டை விதங்கொள்சதங்கை யடிதாராய்; பொருந்தலர்மைந்தருரங்கெடவென்று பொலன்கிரியொன்றை யெறிவோனே, புகழ்ந்துபுகழ்ந்துவணங்கு தணாவொனாள் புரந்தரன்வஞ்சி மணவாளா; இரும்புனமங்கைநெருங்கு தருந்தம்பை பிரண்டிமணந்த புயவேளே, யிலஞ்சியமென்றுவிரிந்தசவின்ற விலஞ்சியமர்ந்த பெருமாளே.

கொந்தளவோலைகுலுங்கிட-வாழி சங்கொடுமைழிகழன்றிட-மேகக் கொண்டைகளமாலை சரிந்திட-வாசப் பணிமலர்சோர, கொங்கைகள்மார்பு குழைந்திடப்-பாழிக் கண்கயல்மேனி சிவந்திட-கோவைக் கொஞ்சியவாயிரசங்கொடு-மோகக் கடலூடே; சந்திரவாரமேழிந்திட-நாவிற் பங்கிடைபாடை துவண்டிட-நேசந் தந்திடமாலுக தம்பியும்-ஓழ்ந்தற் றிடுபோதுன், சந்திரமேனி முகங்களுமேவ